உ

சிவமயம்.

"வேளிர், நாகர், சோழர், பல்லவர்"

என்கிற

# சூரியகுலக் கள்ளர் சரித்திரம்.

இஃது

கருப்புக்களர்

திருவருள் சுப்பைய சுவாமிகள்

மாணுக்கர்

திருக்களர்

மு. சுவாமிநாத உபாத்தியாயர்

என்கிற

மு. சுவாமிநாத மாதவராயர் எழுதியது.

(முதற் பதிப்பு).

கள்ளர்களின் பொருளால்

திருவாரூர்

"எட்வர்ட் அச்சுக்கூடத்திற்" பதிப்பித்தது.



கலி ருoஉஎ] ககூஉசு [பங்குனி-மீ.

# HISTORY
OF
# The Kallas of the Solar Dynasty

*viz.*

**Veles, Nahas, Cholas & Pallavas.**



Written by
M. SWAMINATHA MATHAVARAYAR
*alias*
**M. SWAMINATHA UPATHIYAYAR**
OF
TIRUKKALAR

Disciple of
Thiruvarul SUPPIAH SWAMIGAL
OF
KARUPPUKKALAR.

FIRST EDITION.

Printed at "THE EDWARD PRESS,"
TIRUVALUR

With the help of the contributions made by Kallas.





Kali 5027] 1926. [Pankuni.

# முகவுரை.



கடல்புடைசூழ்ந்த நெடுநிலவுலகிலே தமிழ்ப்பூமியை மூன்று கூறிட்டு ஆண்ட "சூரியன், சந்திரன், அக்கினி" என்னும் முத்தேவர்களின் மரபோர்களில் சூரியன் மரபோரின் வரலாற்றை அறியவிரும்பி வடமொழியினின்று தென்மொழிக்கு வந்த "புராணங்களையும், இதிகாசங்களையும், தலபுராணங்களையும்" ஆராய்ந்துபார்த்தேன்; அவற்றுள் சரித்திர ஆராய்ச்சிக்கு வேண்டுவன சிறிதுமில்லை.

தமிழே முதனூலாகவுள்ள "சங்கநூல்களையும், திருமுறைகளையும், திருமொழிப் பிரபந்தங்களையும், கலிங்கத்துப்பரணி முதலிய நூல்களையும்" ஆராய்ந்ததில் சங்கநூல்களில் பல அரசர்களின் வரலாறுகளும், திருமுறைகளில் சில அரசர்களின் வரலாறுகளும், கலிங்கத்துப்பரணியில் சூரியகுமாரனாகிய மனு முதல் கலிங்கத்தைவென்ற குலோத்துங்க சோழன் மகனாகிய விக்கிரம சோழன் இறுதியாக பராக்கிரமமுடைய பல அரசர்களின் வரலாறுகளும் கூறப்பெற்றிருக்கின்றன.

"கல்வி, பொறை, கொடை, புகழ், வாய்மை, பத்தி" முதலிய நற்குணங்களெல்லாம் ஒருருவாய்த்தோன்றிய தொண்டைமண்டலம் முதன்மையாராகிய களப்பாள் ஸ்ரீமான் சீ. இரங்கசுவாமி முதலியாரவர்களுடைய பொருளுதவியைச் சிரமேற்கொண்டு ஐயாண்டு தேசசஞ்சாரஞ்செய்து ஆங்காங்குள்ள "சிலாசாதனங்களையும், செப்புச்சாதனங்களையும்" பார்வையிட்டேன்; அவற்றுள் கரிகாலப்பெருவளவன் புதல்வனும், கலிகாலமுதல்வனும் ஆகிய இராசராசசோழன் முதல் கோனேரி மேல்கொண்டான் இறுதியாக எண்ணிறந்த அரசர்களின் வரலாறுகளும், கணக்கற்ற அரசர்களின் பட்டப்பெயர்களு மிருக்கின்றன.

தமிழர்களின் பட்டப்பெயர்களையும், தமிழ்ப்பழமொழிகளையும், தமிழ்க்கர்னபரம்பரைக்கதைகளையும், தமிழ்ப்பெயருடைய "நகரங்கள், ஊர்கள், ஆறுகள், ஏரிகள், குளங்கள், கோயில்கள்,

சாலைகள், சத்திரங்கள், மடங்கள், மலைகள்" என்பவற்றின் பெயர்களையும் ஆராய்ந்துபார்த்தேன்; அவைகள் ஒன்றோடொன்று சம்பந்தமுடையனவாகி எண்ணிறந்த அரசர்களின் வரலாறுகளைச் சுட்டிக்காட்டுகின்றன.

கற்றறிந்த பேரறிவுடைய பெரியோர்களின்முன் முற்றுமறியாச் சிற்றறிவுடைய சிறியேன் "கடலில் ஒரு துரும்பை நட்டு அதிற் சிலந்திநூலினைப்பிணித்துக் கடைந்து அமுதம் பெறுவதுபோலவும்; நாகம் படம்விரித்து ஆடக்கண்ட நாங்கூழும் கூட ஆடுவதுபோலவும்" மேற்கூறியவற்றையெல்லாம் ஆதாரமாகக்கொண்டு சூரியன் மரபோராகிய "வேளிர், நாகர், சோழர், பல்லவர்": என்கிற சூரியகுலக் கள்ளர் சரித்திரத்தை மிகச் சுருக்கி சிறுபுத்தகமாக்கியுளேன். இதிற் குற்றமிருப்பினுங் குணமாகக் கொள்வார்களென்று நம்புகின்றேன்.

இப்புத்தகம் எழுதுவதற்கு திருவாரூர் நகரமடத்துத்தெருவிலிருக்கும் இலக்கணவிளக்கப் பரம்பரையினரும், தமிழ்ப் பண்டிதரும், திருவருட்செல்வரும், எனது நண்பரும் ஆகிய திருவாளர் சோமசுந்தர தேசிகரவர்கள் வேண்டும் புத்தகங்கள் கொடுத்துப் பேருதவி செய்தார்கள். அஃது "செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்—வானகமு மாற்ற லரிது" என்னும் திருவாக்குக்கிலக்காகும்.

கரிகாலன் புதல்வனும், கலிகால முதல்வனும், இராசகோபால தாசனும், (இயாதவகுலக்கொடி) உலகுடைமுக்கோக்கிழானடிகள் கணவனும் ஆகிய இராசராசசோழன் மரபினரும், குறுநிலமன்னரும், எமது மன்னரும், முதிர்ந்த அறிவினரும், சிறந்த கொடையினரும், பறந்த புகழினரும், நிறைந்த அருளினரும் ஆகிய மதுக்கூர் (வாடியக்காடு) சவ்வாயி விசயரகுநாத பாலாசிக இராமலிங்கம் கோபாலர்அவர்களிடம் இப்புத்தகத்தைக் காண்பிவித்தேன்; அம்மன்னர்பெருமானார் முற்றும் பார்வையிட்டு "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்—மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்னும் திருவாக்கின்படி உண்மையை நன்குணர்ந்து அச்சியற்றுவதற்குப் பேருதவி செய்ததுமன்றி

அங்கு விசயஞ்செய்திருந்த தமது சகோதரியார் கணவனு ரும் "மேலைக்கோட்டை" என்னும் நகரத்தை இராசதானி யாகக்கொண்ட காரணத்தினுல் "மேற்கொண்டான்" என்னும் பட்டப்பெயர்பெற்ற அரசன் மரபினரும், கோனன் பட்டி அம்பலவரும், தஞ்சை கள்ளர்மகாசங்கக் காரியதரிசி யாரும் ஆகிய திருவாளர் குமாரசாமி மேற்கொண்டார் அவர்க ளிடம் தெரிவித்தார்கள். அப்பெருமானுர் இப்புத்தகம் முற்றும் பார்வையிட்டு "பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின்— நன்மை கடலிற் பெரிது." என்னும் திருவாக்குக்கிலக்காக தம்மாலியன்ற பேருதவி செய்ததுமன்றி, சிங்கப்பூர் கள்ளர் மகாசன சங்கத்தாரவர்கட்கும் உதவிசெய்யும்படி தெரிவித் தார்கள்.

"ஓமாம்புலியூர்" என்னும் சிவதிருநகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்ட "ஓமாம்புலியன்" என்னும் அரசன் மரபினரும், சிறந்த அறிவினரும், முதிர்ந்த பொறையினரும், உயர்ந்த கொடையினரும், நிறைந்த புகழினரும் ஆகிய பால கிருட்ணபுரம் (வெங்குழி) திருவாளர் பெ. ஆதிமுத்து ஓமாந் தரையர் அவர்களிடம் தெரிவித்தேன்; அப்புண்ணியசீலர் "எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே—செய்தற் கரியசெ யல்" என்னும் திருக்குறளுக்கிலக்காக தமது இயல்புக்கு முப்பது மடங்கு அதிகமாக பத்துப்பவுன் கொடுத்துதவியது மன்றி "வல்லம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராச தானியாகக்கொண்ட "வல்லபன்" என்னும் அரசன் மரபின ரும், நுண்ணிய அறிவினரும், கண்ணிய முடையவரும் ஆகிய பட்டவெளி ரா. கோவிந்தசாமி வல்லாளதேவரவர்களையும்; திருமுனைப்பாடி நாட்டையாண்ட நரசிங்க முனையரையன் மரபி னரும், வீரவிரதரும் ஆகிய கலியாணோடை குழந்தைவேல் முனையரையரவர்களையும் துணையாக அழைத்துக்கொண்டு பட்ட வெளி மா. காசிநாத வல்லாளதேவர், துரைசாமி வல்லாள தேவர், நடேச வல்லாளதேவர், பாலப்ப மழவராயர், குப்புசாமி நந்தியார், கோயிலூர் பா. கி. தருமலிங்க மாத்தவராயர், கோட் டைச்சிறுபிடாகை பாலப்பதொண்டைமான்கிளையார், கந்தசாமி தொண்டைமான்கிளையார், இராமு சோழன்கிளையார், பாலைவராய்

தியர்குபிச்சயன் கிளேயார், நொச்சியூர் பழனியாண்டிபிச்சயன் கிளேயார், மருதமுத்து .... கிளேயார், சுப்பையா .... கிளேயார், சித்தமல்லி வ. வைரப்ப வாணதரையர், பெருகவாழ்வுதந்தான் பொன்னுசாமி பாங்கிராயர், இராமசாமி எத்தியப்பிரியர், வி. சின்னன் சேனுதிபதி, சா. சின்னப்பா சேனுதிபதி, மு. சாமி யையர் முனேயரையர், கி. கோவிந்தசாமி கோபாலர், ஓ. இரா மையா வாண்டையார், கி. பக்கிரிசாமிகோபாலர், காரி காலிங்க ராயர், பக்கிரிசாமி கண்டியர், சிதம்பர முனேயரையர், வெ. சாமி யையா முனேயரையர், காளிமுத்து மாதவராயர், காத்தான் தென் கொண்டார், பெ. காத்தான் முதலியார், ரெ. வீராசாமி வல்லா ளதேவர், ரெ. குப்புசாமி முனேயரையர், மு. சிங்கார முனேய ரையர், வி. சுப்பையா தேவர், வைத்திலிங்க வன்னியர், மு அப் பாசாமி முனேயரையர், பக்கிரிசாமி முதலியார், பொன்னுசாமி முனேயரையர் என்பவர்களிடத்தில் அறுபத்திரண்டு ரூபாய் வசூல்செய்து கொடுத்தார்கள்.

"ஆத்திக்கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவனும், ஆத்திமாலேயணிந்த காரண த்தினுல் "ஆரக்கண்ணியன், ஆரம்பூண்டான், மாலேயிட்டான்" என்னும் பட்டப்பெயர்பெற்றவனும் ஆகிய அரசன் மரபினரும், திருமாலின் தாசரும், திருத்தொண்டர் நேசரும், சிவாச்சயோ கரும், "அகரமாயிரமந்தணர்க்கீயிலென்—சிகரமாயிரஞ்செய்து முடிக்கிலென்——பகருஞானிபகலூண் பலத்துக்கு——நிகரில்லே யென்பது நிச்சயந்தானே" என்னும் திருமந்திரம் நன்குணர்ந் தவரும், "அவிசொரிந் தாயிரம் வேட்டலி னென்றன்—உயிர் செகுத் துண்ணுமை நன்று" என்னும் திருக்குறளேயும் "பொல்லாப்புலாலே நுகரும் புலேயரை—யெல்லாருங்காணவிய மன்றன் ருதுவர்——செல்லாகப் பற்றிய தீவாய்நரகத்தின்—— மல்லாக்கத்தள்ளி மறித்துவைப்பாரே" என்னும் திருமந்திரத் தையும் நன்கறிந்தொழுகும் சீவகாருணியத்தலேவரும் ஆகிய நட்டுவன்கோயிற்பற்று திருவாளர் நா. வெங்கடாசல மாலேயிட் டாரவர்கள் தமது ஆற்றலுக்கு அளவுகடந்த பேருதவிசெய்த தோடு நட்டுவன்கோயிற்பற்று துரைசாமி மாலேயிட்டார்,

கோவிந்தசாமி மாலையிட்டார், நாகபட்டினம் வே. கந்தசாமி உலகங்காத்தார், குலமாணிக்கநல்லூர் கு. கோவிந்தசாமி பால்ராயர், மு. துரைசாமி உலகங்காத்தார், வே. ஆறுமுக உலகங்காத்தார், கோ. குமரசாமி உலகங்காத்தார், பிடாரன்கோயிற்பற்று ரெ. குமாரசாமி இருங்களர், சி. நாராயணசாமி நாடார், வ. பஞ்சநத இருங்களர், நறுவீழிகளப்பாள் ம. வெங்கடாசல இருங்களர் (கி. மு.), நடுக்களப்பாள் கோபால தஞ்சைராயர், ரா. வெங்கடாசல தென்கொண்டார், அ. காத்தமுத்து சேனாதிபதி, சி. கணபதி காலிங்கராயர், வேதபுரம் கு. பொன்னுசாமி சேதிரர்யர், மர்னங்காத்தான்கோட்டகம் பக்கிரிசாமி தென்கொண்டார், பட்டுக்கோட்டை வை. கோபாலசாமி கண்டியர், சு. பக்கிரிசாமி வாண்டையார், சாமிநாத முனையரையர், பழஞ்சூர், வெங்கடாசல மாலையிட்டார் (பட்டாமணியம்), வேலாயுத பால்நாட்டார், இராமசாமி உலகங்காத்தார், சாமிநாத மாலையிட்டார், லெ வெங்கடாசல மாலையிட்டார், லெ. இரங்கசாமி மாலையிட்டார், நல்லதம்பி மாலையிட்டார் (கி. மு), இரங்கசாமி பால்ராயர், தேனங்காடு ரெ. கோவிந்தசாமி உலகங்காத்தார், ரெ. முத்துக்கருப்ப உலகங்காத்தார், வே. பழனியாண்டி உலகங்காத்தார், அ. வடிவேலு மாலையிட்டார், ரெ. வேலாயுத கண்டியர், வே. இராமசாமி உலகங்காத்தார், ந. இராமசாமி உலகங்காத்தார், ரா. பழனியாண்டி உலகங்காத்தார், உ. இரங்கசாமி உலகங்காத்தார், கு இலட்சுமண உலகங்காத்தார், சொக்கநாதபுரம் (கள்ளன்பட்டி) வீ. இரங்கசாமி மாலையிட்டார், கு. சின்னைய வேளாளர், கா. கோவிந்தசாமி வேளாளர், சி. இராமசாமி வேளாளர், சி. கூத்தப்பெருமாள் வேளாளர், செ. கா. இரங்கசாமி வேளாளர், செ. கா. சிதம்பர வேளாளர் முதலானவர்களிடம் ஐம்பத்தைந்து ரூபாய் வசூல்செய்து கொடுத்தார்கள்.

"புறம்பயம்" என்னும் சிவதிருநகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்ட "புறஞ்சயன்" என்னும் அரசன் மரபினரும், எனது நன்மாணுக்கரும், பொதுசனநிதியும், சிங்கை கள்ளர் மகாசன சங்கக்கல்வி காரியதரிசியும் ஆகிய திருக்களர் தி. அ. வைத்திலிங்கம் புறம்பயத்தார் என்பவர் சிங்கப்பூரி

னின்று "தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்—மெய்வரு ந்தக் கூலி தரும்" என்னும் திருக்குறளுக்கிணங்க பற்பல கடிதங்களெழுதி இடையறாத் தூண்டுதல்செய்து இப்புத்தக த்தை எழுதச்செய்ததோடு; "மல்லிப்பட்டினம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்ட காரணத்தி னால் "மல்லிகொண்டான்" என்னும் பட்டப்பெயர்பெற்ற அரசன் மரபினரும், நிறைந்த அறிவினரும், சிறந்த கொடையி னரும், விரிந்த புகழினரும், சமரசாநந்தபோதகரும், சாதியபி மான சாதகரும், சிங்கை கள்ளர் மகாசனசங்கத்தாபக சபாநாய கரும், "தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்—றன் னையே கொல்லுஞ் சினம்" என்னும் திருவள்ளுவர் திருவா க்கை நன்குணர்ந்த நன்னெறித்தலைவரும் ஆகிய சோழபாண்டி திருவாளர் அ. ரே. மாரியப்ப மல்லிகோண்டார்; "மண்டல கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானி யாகக்கொண்ட காரணத்தினால் "மண்கொண்டான்" என்னும் பட்டப்பெயர்பெற்ற அரசன்மரபினரும், கல்விக்களஞ்சியமும், பொதுசனப்பொற்கிழியும், சாதியபிமானத் தியாகியும், சிங்கை கள்ளர் மகாசனசங்கத்தாபக உபசபாநாயகரும், "எல்லா விள க்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்—பொய்யா விளக்கே விள க்கு" என்னும் திருவாக்கை நன்குணர்ந்த நீதிநெறித்தலைவரும் ஆகிய மேலநத்தம் திருவாளர் அ. அதிசயமண்கோண்டார் "கண் டியூர்" என்னும் சிவதிருநகரத்தையுண்டுபண்ணி இராசதானி யாகக்கொண்டு பகைவரைப் போரிற்கண்டித்து இலங்கையில் "கண்டி" என்னும் நகரத்தையுண்டுபண்ணிய அரசன் மரபின ரும், "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி—எல்லா வுயிருந் தொழும்" என்னும் திருக்குறளை நன்குணர்ந்த அரு ளாளரும் ஆகிய பெரியகோட்டை திருவாளர் மு.ரே. முத்துசாமி கண்டியர்; "மேற்கொண்டான்" என்னும் அரசன் மரபினரும் "ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்—பொன் றுந் துணையும் புகழ்" என்னும் திருவாக்கை நன்கறிந்தொழு கும் பொறைத்தலைவரும் ஆகிய சோழபாண்டி திருவாளர் த. கோபாலசாமி மேற்கோண்டார்; "நரசிங்கமுனையரையன்" என்னும் அரசன் மரபினரும், "ஒழுக்கம் விழுப்பந் தரலா

ளொழுக்கம்—உயிரினு மோம்பப் படும்." என்னும் திருக்குறளை நன்கறிந்த நல்லொழுக்கத் தலைவரும் ஆகிய சிங்கப்பூர் திருவாளர் கி. ரா. இராமையா முனையரையர்; பைங்காநாடு கெ. வி. சீநிவாச தாக்கலக்கியார்; வடகரைவாசல் ரெ. சண்முக ஒளிராயர்; திருக்களர் மு. பழனியப்ப வாண்டையார்; தம்பிப்பட்டி (திருப்புத்தூர்) ந. இ. வெ. நல்லதம்பி; ரெ. சி. ஆறுமுகம்; சிங்கப்பூர் செ. இராமசாமி ஓமாந்தரையர்; தி. சோமசுந்தரம்; பூவனூர் சு. குப்புசாமி தேவர்; மேலநத்தம் அ. குறும்பையா காலிங்கராயர்; கருவாகுறிச்சி வெ. நாராயணசாமி கண்டியர்; அத்திவெட்டி வீ. வை. வினைதீர்த்தான் வாணதரையர்; திருமங்கலக்கோட்டை (கீழையூர்) வி. வினைதீர்த்தான் வாண்டையார்; ப. ரெ. ஐயாசாமி தொண்டைமான்; சொக்கனூர் ச. அண்ணுசாமி கண்டியர்; குடிக்காடு கோ. வெங்கடாசல வன்னியர்; கண்டர்மாணிக்கம் லெ. ஆ. சுப்பையா (அம்பலம்) என்னும் சிங்கை (சிங்கப்பூர்) கள்ளர் மகாசனசங்கத்தார்கள் கொடுத்துதவிய வெள்ளியோடு பத்து வெள்ளி சேர்த்து நூற்றைம்பத்தாறு வெள்ளி அனுப்பிவைத்தார்.

"சேண்டாகோட்டை" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்ட காரணத்தினுல் "சேண்டப்பிரியன்" என்னும் பட்டப்பெயர்பெற்ற நலங்கிள்ளிசேட்சென்னி சோழன் மரபினரும், சுயசாதியன்பினரும் ஆகிய பிடாரன் கோயிற்பற்று சிங்காரவேலு சேண்டப்பிரியரவர்கள் தம்மாலியன்ற வுதவிசெய்ததோடு பிடாரன்கோயிற்பற்று த. சாமியப்ப மூவரையர், நடேச இருங்களர், கள்ளியூர் ரா. வைத்திலிங்க மண்கொண்டார், சே. சிதம்பர மாதவராயர், மேலைக்கரம்பயம் அருணுசல வாண்டையார் (கி. மு.), சி. முத்து வாண்டையார், கீழைக்கரம்பயம் அமிர்தலிங்க முதலியார், இராமசாமி முதலியார், சச்சிதாநந்த நாடார் என்பவர்களிடம் ஒன்பது ரூபாய் வசூல்செய்து கொடுத்தார்கள்.

"கண்டர்கோட்டை" என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்ட கண்டர்கிள்ளிசோழன் மரபினரும், சுயசாதி

யபிமானரும் ஆகிய அக்கரைக்கோட்டகம் கோவிந்தசாமி கண்டப்பிள்ளை (கி.மு.) அவர்கள் தம்மாலியன்றவுதவி செய்ததோடு தமது குமாரர் பக்கிரிசாமி கண்டப்பிள்ளையவர்களையனுப்பி பைங்காநாடு வீ. கணபதி வாண்டையார், மு. சுந்தர அருவாநாடார், மு. ரெ. குப்புசாமி வாண்டையார், சி. கண்ணுசாமி வாண்டையார், பெ. துரைசாமி வாண்டையார், மு. வீரு வாண்டையார், சா. முத்தைய வாண்டையார், ச. கிருட்ணசாமி அருவாநாடார், மு. சீநிவாச அருவாநாடார், பி. துரைசாமி அருவாநாடார், பெ. இரங்கைய அருவாநாடார், சே. தருமலிங்க வாண்டையார், க. வைத்திலிங்க ஒளிராயர், அ. கண்ணுசாமி கண்டியர், அ. சின்னைய கண்டியர், சி. கண்ணுசாமி கடாரத்தலைவர், மு. துரைசாமி தேவர், வெ. கோவிந்தசாமி வாண்டையார், ரா. செகநாத வாண்டையார், சா. இரங்கசாமி வாண்டையார், மு. மருதப்ப கடாரத்தலைவர், அருமை மழவராயர், சி. கிருட்ணசாமி மழவராயர் என்பவர்களை இருபது ரூபாய் கொடுத்துதவும்படி செய்தார். இதில் முற்கூறிய மு. சுந்தர அருவாநாடாரவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சி மறக்கற்பாலதன்று.

"வண்டை" நகரத்தை இராசதானியாகக்கொண்ட "வண்டையன்" என்னும் அரசன் மரபினரும், சுயசாதி நண்பரும் ஆகிய மஞ்சவாடி திருவாளர் ரே. கோவிந்தசாமி வாண்டையாரவர்கள் தம்மாலியன்ற வுதவிசெய்ததோடு, மஞ்சவாடி கலியப்பெருமாள் அங்கராயர் இருணீக்கி(கோட்டகம்) கோ. வீரப்ப களாவர், கீழைச்சிராங்குடி அ. வைத்திலிங்க களாவர், சபாபதிபுரம் ரா. நடேச தாக்கலக்கியார் முதலானவர்களை அவர்வர்களாலியன்ற வுதவிசெய்யும்படி செய்தார்கள்.

நரசிங்க முனையரையன் மரபினரும் சுயசாதியபிமானரும் ஆகிய திருச்சத்திமுத்தம் இரங்கசாமி முனையரையரவர்கள் சிங்கப்பூரிலிருந்த தமது நன் மருமகனாகிய முற்கூறிய அ. ரெ. மாரியப்ப மல்லிகொண்டாரவர்களுக்கு பொருளுதவி செய்யும்படி பல கடிதங்க ளெழுதினார்கள். அவர்கள் குமாரராகிய சிவவடிவேல் முனையரையரவர்கள் தம்மாலியன்ற வுதவிசெய்ததோடு, திருவண்டுறை கு. சதாசிவ சேண்டப்பிரியர், கு. சாம்பசிவ சேண்டப்பிரியர், கு. ஆன்மநாதசேண்டப்பிரியர், வெ. வேலாயுத ஆரிச்சுற்றியார், வெ. சுப்பராய ஆரிச்சுற்றியார், க. சீநிவாச நாடார், வ. நடேச முனையரையர், சொ. நடேச நாய்க்காடியார், சிவசங்கர முனையரையர், குன்றியூர் (குன்னியூர்) கோ. நாராயணசாமி தேவர், கோ. நடேச தேவர், கோ. சீநிவாச தேவர், கோ. இரங்கசாமி தேவர், சி. கோவித்தசாமி தேவர்,

கு. சி. இராசகோபால தேவர், தட்டான்கோயில் குஞ்சப்ப ஓமாந்தரையர். வே. கோவிந்தசாமி முனையரையர், க. சிங்கார நாடார், அண்டூர் கா. சிவசாமி மன்னையர், கீராலத்தூர் ப. சொக்கலிங்க ஆரிச்சுற்றியார், ப குப்புசாமி ஆரிச்சுற்றியார், சே. கோதண்டபாணி கண்டியர், டி. கெ. மீனாட்சிசுந்தரம் சிற்றாட்சியார் முதலானவர்களிடம் இருபத்தைந்தரை ரூபாய் வசூல் செய்து கொடுத்தார்கள்.

கலிங்கத்தை வென்ற குலோத்துங்கசோழன் மரபினரும், சிங்கை கள்ளர் மகாசனசங்கத்தில் கணித பரிசோதகராயிருந்தவரும், சுயசாதிப்பிரியரும் ஆகிய பெரியகோட்டை வை. மு. இராமையா காலிங்கராயரவர்கள் முற்கூறிய சிங்கை கள்ளர் மகாசன சங்கத்தாரவர்களுக்குப் பொருளுதவி செய்யும்படி கடிதமெழுதிப் பேருதவி செய்தார்கள்.

வண்டை நகராதிபர் மரபினரும், நற்குணங்களெல்லாம் நிறைந்தவரும் ஆகிய கொண்ணூர் ரெ துரைசாமி வாண்டையாரவர்கள் தம்மாலியன்றவுதவி செய்ததுமன்றி முற்கூறிய சிவவடிவேல் முனையரையரவர்களுக்கும் உதவிசெய்யும்படி கடிதங் கொடுத்தார்கள்.

"மழவன்கோட்டை (மகழன்கோட்டை)" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்ட "மழவன்" என்னும் அரசன் மரபினரும், சுயசாதியபிமானம் நிறைந்தவரும் ஆகிய கொண்ணூர் ஆ. இரங்கசாமி மழவராயரவர்கள் தம்மாலியன்ற பேருதவி செய்ததோடு சோழபாண்டி ராம. வி. வேல்சாளுவர், கோ. மாரியப்ப சேதிராயர், அ. வெ. கந்தசாமி ஓமாந்தரையர், கூ. வடிவேல் கண்டியர், சி. சேவு கண்டியர், மு. முருகைய மேற்கொண்டார், ரெ சோமசுந்தர மல்லிகொண்டார், சயங்கொண்டசோழபுரம் வடபாதி கிருட்டிணசாமி கண்டியர், ரா. தவசி பல்லவராயர் முதலானவர்களிடம் பொருளுதவி செய்யும்படி தூண்டுதல் செய்தார்கள் அத்தூண்டுதலை கூ. வடிவேல் கண்டியரவர்கள் கைக்கொண்டு தம்மாலியன்ற வுதவிசெய்ததோடு மேற்படியார்களிடம் பத்து ரூபாய் வசூல்செய்து கொடுத்தார்கள்.

திருத்துறைப்பூண்டி வை. சந்திரசேகர சாளுவர், இடையூர் ரா. கந்தசாமி வாண்டையார், அம்மளூர் ரா. நடேச சேண்டப்பிரியர், சிறுவனூர் சு. முருகன் சேனாதிபதி, சு. மு. வீரையன் சேனாதிபதி, சு. மு. தியாகராசன் சேனாதிபதி, கோமுடித்திடல் கந்தசாமி இராசாளியார், முத்துப்பேட்டை சி. அமிர்த

முனையரையர், உதயமார்த்தாண்டபுரம் வே. சண்முகம் சோழன் கிளையார், நாகபட்டினம் கா. சபாபதி சோழன்கிளையார், அம்மா சுரோத்திரியம் ப. இரத்தினசாமி காலிங்கராயர், கண்டமங்கலம் மு. கிருட்ணசாமி திருப்பூவாட்சியார், தியாகராச முனையரையர், மேலக்கண்டமங்கலம் மாரியப்பன் சேண்டப்பிரியர், மன்னார் குடி (விழற்காரத்தெரு) நாகப்ப சேனைகொண்டார், சேரி த. வீ. ப. திருமேனி முனையரையர், நெட்டுக்குளம் மு. மருதமுத்து ஆரிச்சுற்றியார், மறவக்காடு பெ. சுப்பையா வாண்டையார், கோ. வெங்கடாசல சோழாட்சியார், அரிச்சியபுரம் அ. கிருட்ண சாமி வன்னியர், ச. நாராயணசாமி வன்னியர், ச. வேலாயுத வன்னியர், நடேச வன்னியர், ராம. சி. கோதண்டராம வாண் டையார், வேட்டத்திடல் மு. கருத்தசாமி மண்டராயர், அரவத் தூர் சுப்பராய அங்கராயர், பூவனூர் மா. பக்கிரிசாமி மாதவ ராயர், குப்புசாமி மாதவராயர், நாராயணசாமி மாதவராயர், குழந்தைவேல் சோழர், நடேச முடியைக்கொண்டார், ஐயாவு முனையரையர், சாமியப்ப முனையரையர், நடேச காலிங்கராயர், பத்தாவி காலிங்கராயர், சோமசுந்தர தாக்கலக்கியார், செம்பி யமாதேவி தனுக்கோடி வாண்டையார், கழுகத்தூர் கு. நடேச காலிங்கராயர், மாங்குடி கோவிந்தசாமி தென்கொண்டார், அதி வீரராமன்பட்டினம் மருதமுத்து கண்டியர், இராயநல்லூர் (திருக்களர்) ரெ. குப்புசாமி ஒளிராயர், கொண்ணூர் ரெ தனுக் கோடி ஒமாந்தரையர், துரைசாமி தாக்கலக்கியார். பொ. இராம சாமி வாண்டையார், வெ. குப்புசாமி வாண்டையார், வ. கணபதி வாண்டையார், இரங்கநாதபுரம் (சுரோத்திரியம்) அ. பக்கிரி சாமி பல்லவராயர், க. மாரிமுத்து காலிங்கராயர், கண்டக்கிரயம் சே. தியாகராச நந்தியர், கோ. வாசுதேவ கண்டப்பிள்ளை, பைங்காட்டூர் மு மாரியப்ப இராசாளியார், கா பெற்று நாய்க்கா டியார், கி. குப்புசாமி மாளிகைசுற்றியார், ஆலத்தூர் சீ. இரங்க சாமி தஞ்சைராயர், ஆண்டாங்கரை பெ. தட்சிணாமூர்த்தி சேதி ராயர், திருமயில்கோட்டை (மகராசபுரம்) வீ. குப்புசாமி கண் டியர், திருச்சத்திமுத்தம் கா. சதாசிவ முனையரையர், ஆதிச்ச புரம் சி. சாமிநாத முனையரையர், சாந்தமாணிக்கம் ரெ. சிவராம கிருட்ணசாமி கண்டியர், வை. கோவிந்தசாமி புள்ளராயர், ரெ. இராமலிங்கம் கண்டியர். அ. கோவிந்தசாமி சிறுநாடார், கோ. துளசியையா கண்டியர், சோலைக்குளம் பொ. கணேச வாண்டையார், திருக்களர் மு. வீராசாமி வாண்டையார், ரெ. அமிர்தங் கண்டப்பிள்ளை அ. வெங்கடாசலம் புறம்பயத் தார், ம. அமிர்தம் புறம்பயத்தார், சி. நாராயணசாமி தேவர், அ. முருகைய தொண்டைமான், ரெ. குப்புசாமி தொண்டை

மான், சு. முருகைய கண்டியர், பொ. மகாலிங்க ஒளிராயர், கோ. நாராயணசாமி ஒமாந்தரையர், ரா சண்முகசுந்தரம் செட்டியார், குப்புசாமி தேவர், வெ பிச்சையப்ப தேவர், நா. ஏகாம்பர தேவர், நா.சிங்கார கோனர், வை.கோதண்டபாணி கோனர், வை கிருட்ணசாமி கோனர், கோ. மாரிமுத்துக் கோனர், ந.ஐயாக்கண்ணு நாகசுரர் முதலியவர்கள் இயன்றவரையில் பேருதவி செய்தார்கள்.

இப்புத்தகத்தை அச்சியற்றி வெளிட்படுத்தும்பொருட்டு "நல்லா றெனினுங் கொளறீது மேலுலகம்—இல்லெனினு மீதலே நன்று" என்னும் திருவள்ளுவர் திருவாக்குக்கிணங்கப் பொருளுதவிபுரிந்த முற்கூறிய வள்ளல்களாகிய எனது சகோதரர்களுக்கு மனமார்ந்த வந்தனஞ்செய்கின்றேன்.

இப்புத்தகம் முற்றும் பிழைதிருத்தி அச்சியற்றிக்கொடுத்தவரும், கண்ணபிரான் மரபினரும், அறிவிற் சிறந்தவரும், பொறையின் முதிர்ந்தவரும், புகழிற் பறந்தவரும், கல்வி நிறைந்தவரும், கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்—செல்லா துயிருண்ணுங் கூற்று" என்று திருக்குறளும்; "ஆடு பன்றி கோழி யருந்துவோர்கட்கெல்லாம்—வீடில்லை யென்றுரைக்கும் வேதங்க—ளுடுபவர்க்—கிம்மையிலுந்துன்ப மறுமையிலுமேழ்நிறைய—நன்மையிலை யோரிடத்து நாடு" என்று வள்ளலாரும்; "கொலையாதி நெறியகன்ற ஞானந்தானேகூறரிய மேலானஞானமாகும்—கொலையாதியகன்றொழுகுந் தவங்கடாமே குற்றமில்லா நற்றவமென் றுரைக்குநாலும்—கொலையாதி யகற்றிய நல்லறங்கடாமே குவலயத்திலொப்பரிய வறங்களாகுங்—கொலையாதியகன்று பெறுஞ்செல்வந்தானேகூறிலுயிர்க்கிதமானவாழ்வதாமே" என்று சிவஞானதீபமும், கூறுவதை நன்குணர்ந்த திருவருட்செல்வரும், பாகவதோத்தமரும், எனது நண்பரும், திருவாரூர் எட்வர்ட் அச்சுக்கூட அதிபரும் ஆகிய அரங்கசாமிப் பிள்ளையவர்கட்கு அன்பார்ந்த வந்தனம் அளிக்கின்றேன்.

கள்ளர்கள் உலகந்தோன்றிய காலத்தே சூரியன்மரபில் தோன்றி இற்றைக்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்வரையில் ஏகாதிபதியாய் "பல்லாயிரம் நகரங்களையும், எண்ணிறந்த கோயில்களையும், அளவற்ற ஆறுகளையும், கணக்கற்றவூர்களையும்" உண்டுபண்ணி "வாழையடி வாழைபோல்" ஆண்டுவந்த பூர்வீகத் தமிழர்களென்பது "பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினென்கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், கலிங்கத்துப்பரணி,

பன்னிருதிருமுறை, திருமொழிப்பிரபந்தம், சிலா செப்புச்சாதனங்கள்'' என்பவற்றினாலும்; கள்ளர்களுக்கு "தேவன், நாகன், செம்பியன், சோழன், தொண்டைமான், வன்னியன், பாண்டியன், இராயன், அரையன், ஆண்டான், ஆளன், ஆளி, ஆட்சி, உடையன், ஊரன், தலைவன், நாடன், கொண்டான், பிரியன், புத்திகழிந்தான், மண்வெட்டிக்கூழ்வாங்கி, ஆக்கி, போரிற்கொளுத்தி, போரிற்பொறுக்கி, சுற்றி, சேனாதிபதி, தானாதிபதி, கருடி'' முதலிய பல்லாயிரம் பட்டப்பெயர்களிருத்தலினாலும்; இப்பட்டப்பெயர்கள் சம்பந்தம் "நாடு, நகரம், ஆறு, ஊர், கோயில், குளம், ஏரி'' முதலியவற்றிற் கிருத்தலினாலும் நன்குணரலாகும். இத்தகைய மேம்பாடுற்ற கள்ளசாதியானது இக்காலத்தில் எவ்வளவோ சீர்கேட்டைந்திருக்கிறது இச்சாதி திருத்தமடைந்து முன்னேற்றம் அடைவதற்கேற்றவழியைப் போதிப்பதற்கு ஒருமாதாந்தப் பத்திரிகை வெளிப்படுத்துவது முக்கிய கடமையென்பதை கள்ளர்கள் எல்லாருங் கவனிப்பார்களாக.

இப்புத்தகத்தில் சேர்க்கவேண்டியதும் நீக்கவேண்டியதும் இருக்குமாகில் அதனைக் கருணைகூர்ந்து தெரிவிப்பார்களாயின் மறுபதிப்பில் அங்ஙனஞ்செய்வதோடு அவர்களுக்கும் நன்றி பாராட்டக் கடமையுடையேனாவேன்.

இப்புத்தகத்தை அச்சியற்றும்பொருட்டு யான் பலரையும் பார்த்தகாலத்தில் என்னையறியாதவர்களில் ஒருவர் "கள்ளனாயிருந்தாலென்ன? பள்ளனாயிருந்தாலென்ன?'' எனவும்; வேறொருவர் "ஒருமகம்தியரைக்கொண்டு யோசிக்கப்படும்'' எனவும்; இன்னொருவர் "தம்முடைய முன்னோர் கைக்கொண்டிருந்த சைவசமயத்தை மறந்து மாயாவாத சமயத்திற் புகுந்திருப்பதையறியாது வேதாந்தம் படிக்காமற் கெட்டுப்போய்விட்டாயே'' எனவும்; மற்றொருவர் "பிழைக்கவழியில்லாமல் அலைகிறான்'' என்னவும் கூறியதனாலும் மற்றும் யார் யார் என்னென்ன சொல்வார்களோவென அஞ்சி என்னையறியாத சீமான்களே இப்புத்தகத்தை அச்சியற்றிக்கொணர்ந்து பார்க்கும்படி நேர்ந்தமையை மன்னிக்கவேண்டுமாய்ப் பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்,

திருக்களர், கரு—ங—கசுஉக. } மு. சுவாமிநாத உபாத்தியாயன் என்கிற

 மு. சுவாமிநாத மாத்வராயன்.

# திருக்குறிப்பு.

சிவபெருமான் "ஆக்கல், காத்தல், அழித்தல்." என்னும் முத்தொழில்காரணமாக "பிரமன், மால், ஈசன்" என்னும் மூவுருவாகி அம்மூவுருவே "ஆன்மாக்கள்" வழிபட்டுய்யும் பொருட்டு ஓருருவாக சிவலிங்கத் திருவுருக்கொண்டருளினர்.

"மலரோன் செங்கண்மாலீசனென்னும், மூவராயமுதலொருவன் மேயது முதுகுன்றே—; மூவருமாகி யிருவருமாகி முதல்வனுமாய் நின்ற மூர்த்தி—; மூவரிலும் முதலாய் நடுவாயமூர்த்தியை—; மூவராயமுதல்வர்."

"ஆதியு மரனு யயன் மாலுமாய்ப், பாதிபெண்ணுருவாய பரமன்—; சிவனாகித்திசைமுகனாய்த்திருமாலாகி—; மூவகை மூவர்போலும்—; முந்தையார் முந்தியுள்ளார் மூவர்க்குமுதல்வரானர்—; மூன்றுமூர்த்தியுணின்றியலுந் தொழில் மூன்றுமாயின மூவிலைச்சூலத்தன்—; அங்கமலத்தயனொடுமாலாகிமற்றுமதற்கப்பாலொன்ருகி யறியவொண்ணச், செங்கனகத் தனிக்குன்றைச்சிவனை—; காரணனை நாரணனைக் கமலத்தோனை—; முன்னவன்காண் பின்னவன்காண் மூவர்மேனி முதல்வன்காண்—; முதலாகி நடுவாகி முடிவானனே—; ஒருருவே மூவுருவமானநாளோ—; மூவுருவத்தோருருவாய் முதலாய்நின்ற."

"வள்வாய மதிமிளிரும் வளர்சடையினனை மறையவனைவாய்மொழியை வானவர்தங்கோனைப், புள்வாயைக் கீண்டுலகம் விழுங்கியுமிழ்ந்தானைப் பொன்னிறத்தின் முப்புரிநூ லன்முகத்தினனை—; மூவராயு மிருவராயு முதல்வனவனேயாம்—; மூவரென விருவரென முக்கணுடைமூர்த்தி—; மூவரின் முதலாயவன்றன்னை—; முந்தியாகிய மூவரின்மிக்க மூர்த்தியை."

என்று தேவாரங்கூறுவதனுலும்; சிவன்கோயில்களில் "பிரமன், மால், ஈசன்" என்னும் மும்மூர்த்திகளிருத்தலினுலும் நன்குணரலாகும்.

பரமபதி "நிலம், நீர், தீ, காற்று, வெளி, சந்திரன், சூரியன், ஆன்மா" என்னும் எட்டுத்திருவுருக்கொண்டு விளங்கும்போது உலகமுண்டு; அவ்வெட்டும் மறைந்தபோது உலகமில்லை.

"பற்றுமாகி வானுளோர்க்குப் பல்கதிரோன்மதிபார், எற்றுநீர் தீக் காலு மேலைவிண்ணிய மானனோடு, மற்றுமாதோர் பல்லுயிராய் மாலய னும் மறைகள், முற்றுமாகிவேறுமானான்—; அட்டமூர்த்தியனே யஞ்ச லென்றருள்—; எட்டிசைந்த மூர்த்தியாயிருந்தவாறிதென்னையே."

"இரவியுமதியும்விண்ணுமிருநிலம்புனலுங்காற்றும், உரகமார்பவ னமெட்டுந்திசை யொளியுருவமானாய்—; மூவுருவின் முதலுருவா யிரு நான்கானமூர்த்தியே—; அட்டமாவுருவினனே—; அட்டமூர்த்திதன் வெண்காடடைநெஞ்சே—; அட்டமூர்த்திக்குவன்பதுவாகியே."

"தரிக்குந் தரை நீர் தழல் காற் றந்தரஞ் சந்திரன்சவிதாவியமானனு னீர்—; எட்டானமூர்த்தியை—; அட்டமூர்த்தியை—; அட்டன்."
என்று தேவாரங்கூறுகிறது.

சிவபெருமான் தம்முடைய எட்டுத் திருவுருவங்களில் மூன்று திருவுருவங்களாகிய "முச்சுடர்"களில் சூரியனை வலக்கண்ணாக வும்; சந்திரனை இடக்கண்ணாகவும்; அக்கினியை நெற்றிக் கண்ணாகவுங் கொண்டருளினர்.

"சுடர் மூன்றுமாயினான் காண்—; சுடர் மூன்றுமானான் றன்னை—; சுடர்மூன்றுங் கண்மூன்றாக் கொண்டான்றான் காண்."
என்று தேவாரங் கூறுகிறது.

உமாதேவியார் முன்னொருகாலத்தில் திருவிளையாட்டாக தம்முடைய இரண்டு திருக்கரங்களாலும் பரமபதியினுடைய இரண்டு திருக்கண்களையு மூடியருளினர்; அங்ஙன மூடியருள லும் உலகம் இருண்மயமாயிற்று; பரமபதி நெற்றிக்கண்ணைத் திறந்து உலகத்தை இரட்சித்தருளினர்.

"நலமலிமங்கை நங்கை விளையாடி யோடி நயனத்தலங்கள் கரமா
உலகினையேழுமுற்றுமிருண்மூடமூடவிருளோடநெற்றியொருகண்
அலர்தரவஞ்சிமற்றை நயனங்கைவிட்டு மடவாளிறைஞ்சமதிபோல்
அலர்தருசோதிபோல வலர்வித்தமுக்கணவனு நமக்கோர்சரணே."

என்று தேவாரங்கூறுகிறது.

சிவசோதியினுடைய (எட்டுத் திருவுருவங்களில்) மூன்று திருவுருவங்களாகியும்; மூன்று திருக்கண்களாகியும் விளங்கா நின்ற "சூரியன், சந்திரன், அக்கினி" என்னும் முச்சுடர்க

ளின் குமாரர்களாய் உலகந்தோன்றிய காலத்தே தோன்றிய "சூரியகுமாரர், சந்திரகுமாரர், அக்கினிகுமாரர்" என்பவர்களும், அவர்களின் மரபோர்களும் "வாழையடி வாழைபோல" உலகத்தைப் பங்கிட்டுக்கொண்டு ஆண்டுவந்தனர்; இதனை "சோழதேயம், கோசலதேயம்" என்பவற்றை ஆண்டவர்கள் சூரியகுலத்தவரெனவும்; "பாண்டியதேயம், குந்தளதேயம், குருதேயம், நிடததேயம்" என்பவற்றை ஆண்டவர்கள் சந்திர குலத்தவரெனவும்; சேரதேயம், சிங்களதேயம், கலிங்கதேயம் என்பவற்றை ஆண்டவர்கள் அக்கினிகுலத்தவரெனவும் நூற்கள் கூறுவதாலறியலாகும்.

சிவதிருவுருவம் எட்டினுளொன்றாகிய "ஆன்மா" என்னும் உயிரானது ஐந்து குறிலும் ஏழு நெடிலுமுடைய "பன்னிரண்டு" உயிரெழுத்தாகியும்; ஆன்மா இயங்குவதற்குக் காரணமாயுள்ள "மெய்" என்னும் உடலானது ஆறு வல்லினமும், ஆறு இடையினமும், ஆறு மெல்லினமுமுடைய "பதினெட்டு" மெய்யெழுத்தாகியும்; ஆன்மாவும், மெய்யும் ஒன்றுபட்டு உலக இன்பங்களை நுகர்தற்குக் காரணமாயுள்ள "உயிர்மெய்" என்னும் உயிருடலானது தொண்ணூறு குறிலுயிர்மெய்யும், நூற்றிருபத்தாறு நெடிலுயிர்மெய்யுமுடைய "இருநூற்றுப்பதினாறு" உயிர்மெய்யெழுத்தாகியும்; உயிர்மெய்யின் கையினின்று பகைவர் வலியை வாங்கி வெல்வதற்குக் காரணமாயுள்ள "கேடகம்" என்னும் ஆய்தமானது இதரமொழிகளின் ஒலியை வாங்கி ஒலிப்பதற்கு "ஒரு" ஆய்த எழுத்தாகியும் விளங்கும். "இருநூற்று நாற்பத்தேழு" எழுத்துக்களையுடைய "தமிழ்மொழி" என்னும் தென்மொழியானது உலகந்தோன்றிய காலத்தே தோன்றியதென்பது நன்குவிளங்கும்.

"அகரமுதலானையணியாப்பனூரானை."
"தமிழோடிசையானவன்–; தென்றமிழுமறைகளுனன்குமானவன்–;
செந்தமிழோடாரியனை—; தமிழன் கண்டாய்."
"அகரமுதலி னெழுத்தாகி நின்றாய்."

என்று தேவாரங் கூறுகிறது.

சிவபெருமான் தமிழ்மொழியின் அகாரத்தை இடையிலும், உகாரத்தை முதலிலும், மகாரத்தைக் கடையிலுமுடைய "ஓங்காரம்" என்னும் மூன்றெழுத்தைத் தமக்குத் "திருமேனி" யாகக் கொண்டருளினர்.

"ஓங்காரத்தொருவனுகும்—; ஓங்காரத்தொருவனே—; ஓங்காரத்தொருவன்—; ஓங்காரத்துட்பொருளே—; ஓங்காரத்துட் பொருளாய் நின்றுன்—; ஓங்காரத்துட் பொருடானுயினனே—; ஓங்காரமெய்ப் பொருளே—; ஓங்காரன்காண்—; ஓங்காரத்துருவாகிநின்றுனே."

என்று தேவாரங் கூறுகிறது.

பரமபதி தமிழ்மொழியின் "நகாரம், மகாரம், சிகாரம், வகாரம், யகாரம்" என்னும் ஐந்தெழுத்தையும் தமக்குத் "திருநாம"மாகக் கொண்டருளினர்.

"நக்கர்தந்நாம நமச்சிவாயவென்பார் நல்லரே—; நாவணங் கியல்பா மஞ்செழுத்தோதி நல்லராய்—; வஞ்சகமற்றடி வாழ்த்தவந்தகூற், றஞ்சவுதைத்தன வஞ்செழுத்துமே ; வேதநான்கினு மெய்ப்பொருளாவது நாதனும் நமச்சிவாயவே." நற்றுணையாவது நமச்சிவாயவே—; அஞ்செழுத்தோதினு மரனடிக்கன்பதாகும்-;மந்திர நமச்சிவாய வாகநீறணியப்பெற்றல், வெந்தறும் வினையுநோயும் வெவ்வழல் விறகிட்டன்றே—; வைச்ச பொருணமக்காகுமென்றெண்ணி நமச்சிவாய, அச்சமொழிந்தேன்—; படைக்கலமாக வுன்னுமத்தெழுத் தஞ்செனுவிற்கொண்டேன்—; நின் நாமம்பரவி நமச்சிவாயவென்னு மஞ்செழுத்தும். சாமன் றுரைக்கத் தருதிகண்டாயெங்கள் சங்கரனே —; பதத்தெழு மந்திரமஞ்செழுத்தோதிப்பரிவினெடும்-;துஞ்சும்போழ்து நின்னுமத்திருவெழுத், தஞ்சுந்தோன்ற வருளுமையாறரே—;ஓதினத்தெழுத்தஞ் சுணராச்சமண்—; ஞானச்சோதியராதியர் நாமந்தான், ஆனவஞ்செழுத்தோத வந்தண்ணிக்கும்-;விண்ணிணர்மதிசூடிய வேந்தனை, எண்ணிநாமங்களோதியெழுத்தஞ்சும்—;ஏதுமொன்றுமறிவிலராயினும், ஓதி யஞ்செழுத்துமுணர்வார்கட்குப், பேதமின்றி யவருள்ளத்தே, மாதுந்தாமு மகிழ்வர்—; அருந்தவந்தரு மஞ்செழுத்தோதினுல்—; நமச்சிவாயவே ஞானமுங்கல்வியும், நமச்சிவாயவே நானறிவிச்சையும், நமச்சிவாயவே நாநவின் றேத்துமே, நமச்சிவாயவே நன்னெறிகாட்டுமே—;மன்னுமஞ்செழுத்தாகிய மந்திரம்—; நமச்சிவாய வென்பாருளரேலவர், தமச்சநீங்கத் தவநெறிசார்தலால்—;அஞ்செழுத்தும் வாய்நவில வல்லார்க்கென்றும், சிறந்தானே —; மாற்றே

னெழுத்தஞ்சுமென்றனுவின்—; அஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச் சேயானே—; அஞ்செழுத்தி னுமைத்தான் காண்—; நாமவெழுத்தஞ் சாயநம்பர்போலும்—; வானவர்கோன்றிருநாம மஞ்சுஞ்சொல்லி—; அஞ்செழுத்துநினைவார்க்கென்றும், மருந்தவன்காண்—; எந்தையார் திருநாம நமச்சிவாயவென்றெழுவார்க்கிருவிசும்பிலிருக்கலாமே—; திருநாமமஞ்செழுத்துஞ் செப்பாராகில்—; நறவார்பொன்னிதழிநறுந் தாரோன் சீரார் நமச்சிவாய."

"உனைநான்மறக்கினுஞ்சொல்லுநா நமச்சிவாயவே."

என்று தேவாரங் கூறுகிறது.

"நகாரம், மகாரம், சிகாரம், வகாரம், யகாரம்" என்னும் ஐந்தெழுத்தும் முறையே "திரையெழுத்து, மலவெழுத்து, பதி (இறை)யெழுத்து, பரை(தேவி)யெழுத்து, சீவவெழுத்து" எனப்பெயர் பெறும். "திரையெழுத்து, மலவெழுத்து, பதியெழுத்து, பரையெழுத்து, சீவவெழுத்து" இவ்வைந்தும் முறையே கூடியது தூலம். பதியெழுத்து, பரையெழுத்து, சீவவெழுத்து, திரையெழுத்து, மலவெழுக்து" இவ்வைந்தும் முறையே கூடியது சூக்கமம். "பதியெழுத்து, பரையெழுத்து, சீவவெழுத்து, பரையெழுத்து, பதியெழுத்து" இவ்வைந்தும் முறையே கூடியது (இருதலைமாணிக்கம்) காரணம். "பரையெழுத்து, பதியெழுத்து" இவ்விரண்டும் முறையே கூடியது மகா காரணம். "பதியெழுத்து" இதுவே(நாயோட்டுமந்திரம்) மகாமனு. இவற்றை ஞானதேசிகரிடத்தில் முறையே பெற்றுச்செபிப்போர் இம்மையில் நன்மையையும் மறுமையில் சிவதிருவடியையு மடைவர்.

சிவதிருமேனியாகிய மூன்றெழுத்தையும், சிவதிருநாமமாகிய ஐந்தெழுத்தையும் ஒன்று சேர்த்துச் செபிப்போர் எல்லா விதப் பேற்றையும் எளிதிலடைவர்.

அஞ்சு மூன்று மெட்டதா மநாதியான மந்திரம்
நெஞ்சிலே நினைந்துகொண்டு நூறுரு செபிப்பரேல்
பஞ்சமான பாதகங்கள் நூறுகோடி செய்யினும்
பஞ்சுபோற் பறக்குமென்று நான்மறைகள் பன்னுமே.

என்று சிவ வாக்கியம் கூறுகிறது.

(தமிழ் மூன்றெழுத்தையும், ஐந்தெழுத்தையும் ஆதியாக வுடைய ஏழுகோடி மகாமந்திரங்களையுடையது).

தமிழ்மொழி "சூலைநோய் விலக்குவித்தல், நீற்றறையைக் குளிர்ச்சியாக்குவித்தல், நஞ்சை யமுதமாக்குவித்தல், யானையை வணங்கச்செய்வித்தல், கருங்கல்லைத் தெப்பமாக்குவித்தல், கதவந் திறப்பித்தல், கதவ மடைப்பித்தல், நஞ்ச மிறக்குவித்தல், என்பைப்பெண்ணாக்குவித்தல், ஆண்பனையைப் பெண்பனையாக்குவித்தல், குமரகண்டவலி நீக்குவித்தல், நளிர்சுர மகற்றுவித்தல்; ஆற்றிலெதிரேறிச்செல்லல், தீயில் வேகாதிருத்தல், பொற்கிழி கொடுத்தல், ஆற்றிலோடஞ்செலுத்துவித்தல், ஆற்றுநீரைவிலக்குவித்தல், முதலையுண்டபிள்ளையைச்சென்றவயது முதிர்ச்சியோடழைப்பித்தல், மழைபெய்வித்தல், மழை யோய்வித்தல், பொன்மழை பெய்வித்தல், அரிசி விளைவித்தல், சேலை காய்ப்பித்தல், ஆற்றிற் பால் தயிர் நெய்வருவித்தல், பனந்துண்டம் பழங்காய்ப்பித்தல், பலாத்துண்டம் பழங்காய்ப்பித்தல்" முதலிய எண்ணிறந்த திருவிளையாடல்களைச் செய்வித்துள்ளது.

ஆரிய தேயத்தினின்று சீகாழியிற் குடியேறிய கௌணிய கோத்திரத்தில் தோன்றிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தம்மை "தமிழ் ஞானசம்பந்தன், நற்றமிழ் ஞானசம்பந்தன்" எனவும்; தமிழ்மொழியை "நற்றமிழ், தண்டமிழ், செந்தமிழ், முத்தமிழ், அருந்தமிழ், ஒண்டமிழ், வண்டமிழ், இசையார்தமிழ், பண்ணார்தமிழ், பெருகியதமிழ், ஞானத்தமிழ், சீர்த்தமிழ், இன்றமிழ், குன்றாத்தமிழ், பலந்தருதமிழ், கலைமலிதமிழ், பரவியதமிழ், பலமிகுதமிழ், படமலிதமிழ், சொல்லார்தமிழ், தலமார்தமிழ், இன்புறுந்தமிழ், மறைமலிதமிழ், பந்தமார்தமிழ், தவமல்குதமிழ், சீரார்தமிழ், மறையிலங்குதமிழ், உரையார்தமிழ், நல்லசெந்தமிழ், சங்கமலிதமிழ், ஒளிர்பூந்தமிழ், செந்தண்டமிழ், ஏறினார்தமிழ், தன்னொளிமிக்குயர்ந்ததமிழ், புகழ்வண்டமிழ், இசைமலிதமிழ், சந்தமிசைதண்டமிழ், சந்தமார்தமிழ், பேரியவின்றமிழ், நிகரில்லனதமிழ், சந்தநிறைதண்டமிழ், பாரினார்

தமிழ், குற்றமில்செந்தமிழ், சந்தமின்றமிழ், பண்பொலிசெந் தமிழ்" எனவும் தமிழ்மொழியின் பெருமையை விளக்கித் தேவாரத்தில் கூறியிருக்கின்றனர். இவர் பூர்வத்தில் சுப்பிர மணியக்கடவுள். இதனைப் பின்வரும் திருப்புகழ்ப் பாடல்களா லறியலாகும்.

(உஎஅ) "பொறியுடைச் செழியன்வெப் பொழிதரப் பறிதலைப்
பொறியிலிச் சமணரத் தனைபேரும்
பொடிபடச் சிவமணப் பொடிபரப் பியதிருப்
புகலியிற் கவுணியப் புலவோனே."

(எஎசு) "சேனைக்குரு கூடலிலன்று ஞானத்தமிழ் நூல்கள்பகர்ந்து
சேனைச்சம ணோர்கழுவின்கண் மிசையேறத்
தீரத்திரு நீறுபுரிந்து மீனக்கொடி யோனுடல்துன்று
தீமைப்பிணி தீரவுவந்த வரநாதா."

(எஅரு) "கனசமண் மூங்கர்கோடி கழுமிசை தூங்கநீறு
கருணைகொள் பாண்டிநாடு பெறவேதக்
கவிதரு காந்தபால கழுமல பூந்தராய
கவுணியர் வேந்ததேவர் பெருமாளே."

(அகூச) "புத்த ரமணர்கள் மிகவே கெடவே
தெற்கு நரபதி திருநீறிடவே
புக்க அனல்வய மிகஏ டுயவே உமையாள்தன்
புத்ர னெனஇசை பகர்நூல் மறைநூல்
கற்ற தவமுனி பிரமா புரம்வாழ்
பொற்ப கவுணியர் பெருமா னுருவாய் வருவோனே."

(கூ0ரு) "பவமாய்த் தாணதுவாகும் பனைகாய்த் தேமணநாறும்
பழமாய்ப் பார்மிசை வீழும் படிவேதம்
படியாப் பாதகர்பாயன் றியுடாப் பேதைகள்கேசம்
பறிகோப் பாளிகள்யாருங் கழுவேறச்
சிவமாய்த் தேனமுதூருந் திருவாக் காலொளிசேர்வெண்
டிருநீற் றாலமராடுஞ் சிறியோனே
செழுநீர்ச் சேய்நதியாரங் கொழியாக் கோமளம்வீசுந்
திருவோத் தூர்தனில்மேவும் பெருமாளே."

(கூ0கூ) "அளகைவணி கோர்குலத்தில் வனிதையுயிர் மீளழைப்ப
அருள்பாவு பாடல்சொற்ற குமரேசா."

(கஉஉரு) "தம்பந்தம றத்தவ நோற்பவர் குறைதீரச்
சம்பந்தனெ னத்தமிழ் தேக்கிய பெருமாளே."

சிவபெருமானுடைய பிரதி பிம்பமாகிய ஆலாலசுந்தரர் திருநாவலூரிலே, ஆதிசைவர்குலத்திலே சுந்தரமூர்த்திநாயனாராகத் தோன்றி தம்மை "தமிழன்" எனவும்; திருஞானசம்பந்த மூர்த்திநாயனாரை "நற்றமிழ் ஞானசம்பந்தன்" எனவும்; தமிழ், மொழியை "செந்தமிழ், நற்றமிழ், வண்டமிழ், அருந்தமிழ், தண்டமிழ், ஒண்டமிழ், இன்றமிழ், குறையாத்தமிழ், சந்தமிகு தண்டமிழ், செஞ்சொற்றமிழ், பொய்யாத்தமிழ், பாவணத்தமிழ், சீரூர்செந்தமிழ், ஏழிசையின்றமிழ்" எனவும் தேவாரத்துட் கூறியிருக்கின்றனர்.

வில்லிபுத்தூரில் திருவவதாரஞ்செய்த பெரியாழ்வார் தாம் அருளிச்செய்த திருமொழிப்பிரபந்தத்துள் "சீர்மலிசெந்தமிழ், இன்றமிழ், தூயதமிழ், செந்தமிழ், ஒண்டமிழ், வியன்றமிழ்" எனவும்; பெரியாழ்வார் குமாரத்தியாகிய நாச்சியார் தாம் திருவாய்மலர்ந்தருளிய திருமொழிப் பிரபந்தத்துள் "சங்கத் தமிழ், இன்றமிழ், தூயதமிழ், செந்தமிழ்" எனவும்; சேரன் மரபிற்றோன்றி, கொல்லி நகரை இராசதானியாகக்கொண்டு தமிழ்ப் பூமியாகிய மும்மண்டலத்தையும் ஆண்ட குலசேகரப் பெருமாள் தாம் அருளிச்செய்த திருமொழிப் பிரபந்தத்துள் "நடைவிளங்குதமிழ், இன்றமிழ், நற்றமிழ், நல்லிசைத்தமிழ், சீரார்ந்ததமிழ், நல்லியலின்றமிழ்" எனவும்; குறுநிலமன்னர் மரபிற்றோன்றி, திருவாலிநாட்டையாண்ட சிற்றரசனாகிய திருமங்கையாழ்வார் தாம் அருளிச்செய்த திருமொழிப் பிரபந்தத்துள் "ஒலிசெய்தமிழ், இருந்தமிழ், வண்டமிழ், இன்றமிழ், தண்டமிழ், சீர்மன்னுசெந்தமிழ், ஒண்டமிழ், சங்கமுகத்தமிழ், சங்கமலிதமிழ், கோவைத்தமிழ், நாமருவுதமிழ், பாமருதமிழ், பொலிந்ததமிழ், வண்ணவொண்டமிழ், பாவளருந்தமிழ், தேனூரின்சொற்றமிழ், இருநீரின்றமிழ்" எனவும்; பாண்டியன் மரபில் தோன்றி, குருகூர்நகரை இராசதானியாகக்கொண்டு அரசாண்ட காரிமாறர்க்கு திருவவதரித்த சடகோபனாகிய நம்மாழ்வார் தாமருளிச்செய்த திருமொழிப் பிரபந்தத்துள் "ஏய்தமிழ்,

ஒண்டமிழ், செந்தமிழ், தீதிலாத வொண்டமிழ், பண்ணூர் தமிழ், சொல்லார்தமிழ்" எனவுங் கூறியிருக்கின்றார்கள். மேற் கண்ட காரணங்களினால் தமிழ்மொழி ஒப்புயர்வற்ற தனிமொழி என்பது சொல்லாமலே விளங்கும்.

தமிழ்மொழி வடக்கே திருவேங்கடமாமலையையும், தெற்கே (கடலிடைநீண்டு குவிந்தமுனையில் அலைமோதப் பெறுகின்ற திருக்கோயிலில் தேவியார் திருமணமாகாத "குமரி"யாயெழுந் தருளியிருக்கின்ற) குமரியையும் "கிழக்கும் மேற்கும்" கடலை யும் எல்லைகளாகக் கொண்டது.

"வடவேங்கடந் தென்குமரி யாயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து."

என்று பனம்பாரனாரும்;

"வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
றிந்நான் கெல்லை தமிழது வழக்கே."

என்று சிகண்டியாரும்;

"வடக்குந் தெற்குங் குடக்குங் குணக்கும்
வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
றிந்நான் கெல்லை யகவயிற் கிடந்த
நூலது முறையே வாலிதின் விரிப்பின்."

என்று காக்கைபாடினியாருங் கூறியிருக்கின்றனர்.

(தற்காலம் சேரதேயத்திற் பெரும்பாகம் தென்மொழியும் வடமொழியும்கூடி "மலையாளமொழி" என்று வழங்குகின்றது.

தமிழ்மொழி தொன்றுதொட்டுப் பேசுவோர் தமிழரெனப் படுவர். தமிழ்மொழி வழங்கும் பூமியை "தமிழ்மண்டலம், தமிழ்த்தேயம், தமிழ்நாடு, தமிழ்ப்பூமி" என்பர். தமிழ்ப் பூமியை ஆளும் அரசர் "தமிழரசர், தமிழ்மண்டலர், தமிழ்த் தேயர், தமிழ்நாடர்" என்று பெயர் பெறுவர். தமிழ்ப்பூமியை மூன்று கூறுக்கி, ஒன்றை அக்கினி மரபோரும்; மற்றொன்றை சந்திரன் மரபோரும்; இன்னொன்றை சூரியன் மரபோரும் ஆண் டனர். அக்கினி மரபோர் ஆண்ட பூமிக்கு "சேரமண்டலம்,

சேரதேயம், சேரநாடு, மலைநாடு'' என்று பெயர். சந்திரன் மரபோர் ஆண்ட பூமிக்கு “பாண்டிமண்டலம், பாண்டிதேயம், பாண்டிநாடு, வையைநாடு” என்று பெயர். சூரியன் மரபோர் ஆண்ட பூமிக்கு ''வேள்மண்டலம், வேள்தேயம், வேள்நாடு, நாக மண்டலம், நாகதேயம், நாகநாடு, சோழமண்டலம், சோழ தேயம், சோழநாடு பொன்னிமண்டலம், பொன்னிதேயம், பொன்னிநாடு, காவிரிமண்டலம், காவிரிதேயம், காவிரிநாடு, சென்னிமண்டலம், சென்னிதேயம், சென்னிநாடு, கிள்ளிமண் டலம், கிள்ளிதேயம், கிள்ளிநாடு, வளவன்மண்டலம், வளவன் தேயம், வளவன்நாடு'' என்று பெயர்.

சேரமண்டலம் என்பது “கொங்கு, கேரளம்” என்று இரண்டு பிரிவையுடையது. கொங்கை “கொங்குமண்டலம், கொங்கு தேயம், கொங்குநாடு” என்பர். கேரளத்தை “கேரளமண்டலம், கேரளதேயம், கேரளநாடு, குடமண்டலம், குடதேயம், குட நாடு” என்பர்.

பாண்டிமண்டலம் என்பது “கொற்கை, கூடல்” என்று இரண்டு பகுதியையுடையது. கொற்கையை “கொற்கைமண்ட லம், கொற்கைதேயம், கொற்கைநாடு, குமரிமண்டலம், குமரி தேயம், குமரிநாடு” என்பர். கூடலை “கூடன்மண்டலம், கூடற் றேயம், கூடல்நாடு, மதுரைமண்டலம், மதுரைத்தேயம், மதுரை நாடு, தமிழ்மண்டலம், தமிழ்த்தேயம், தமிழ்நாடு, வையைவள நாடு” என்பர்.

சோழமண்டலம் என்பது “தஞ்சை, கச்சி” என்று இரு கூறையுடையது. தஞ்சையை “இராசேந்திர சோழமண்டலம், இராசேந்திர சோழதேயம், இராசேந்திர சோழவளநாடு, விசய ராசேந்திரசோழமண்டலம், விசயராசேந்திரசோழதேயம், விசய ராசேந்திரசோழவளநாடு, புனமண்டலம், புனற்றேயம், புன னாடு, கோழிமண்டலம், கோழிதேயம், கோழிநாடு, காவிரிவள நாடு” என்பர். கச்சியை “தொண்டைமண்டலம், தொண்டை தேயம், தொண்டைநாடு, பல்லவமண்டலம், பல்லவதேயம், பல் லவநாடு, பல்லவம்” என்பர்.

தஞ்சை "மங்கலநாடு, நென்மலிநாடு, புறங்கரம்பைநாடு, புலியூர்நாடு, இங்கணாடு, இடையளநாடு, அளநாடு, நறையூர்நாடு, தேவூர்நாடு, மருகல்நாடு, வேளாநாடு, முழையூர்நாடு, பனையூர் நாடு, பாம்புரநாடு, அம்பர்நாடு, வெண்ணாடு, திரைமூர்நாடு, அழுந்தூர்நாடு, வினைநாடு, ஆக்கூர்நாடு, குறும்பூர்நாடு, குழை யூர்நாடு, பிரம்பூர்நாடு, பொய்கைநாடு, இந்நம்பர்நாடு, மிழலை நாடு, மண்ணிநாடு, விளத்தூர்நாடு, குறுக்கைநாடு, திருவாலி நாடு, திருவிந்தளூர்நாடு, வெண்ணையூர்நாடு, திருக்கழுமலநாடு, அதிகைமங்கைநாடு, நாங்கூர்நாடு, கொண்டல்நாடு, நெலுவூர் நாடு, பிடவூர்நாடு, நல்லாற்றூர்நாடு,வடவழிநாடு, குழித்தண்டலை நாடு, தட்டைகளநாடு, எரியூர்நாடு, விளாநாடு, இடையாற்று நாடு, எயிநாடு, புறக்கிளியூர்நாடு, மீய்செங்கிளிநாடு, நல்லூர் நாடு, வீரசோழவளநாடு, முடிச்சோணாடு, சுத்தவல்லிநாடு, காசாநாடு, தென்னவணாடு, உறத்தூர்நாடு, ஒக்கூர்நாடு, பைங்கா நாடு, பாப்பாநாடு, கற்பிங்கநாடு, ஊமத்தநாடு, அம்புநாடு, பெரு மாணாடு, கர்ணாடு, கோ.ணாடு, மழநாடு, மீகோழைநாடு, ஊற்றத்தூர் நாடு, மேற்காநாடு, கார்யோகநாடு" முதலிய சிறுநாடுகளையுடை யன. இந்நாடுகள் நாளடைவிலே ஆண்ட பல அரசர்களால் உண் டாக்கப்பட்டன. மேற்படி நாடுகள் "களப்பாளன்" என்னும் அரசன் காலத்தில் "வெண்டாழைவேளூர்கூற்றம், ஆர்வலக்கூற் றம், சேற்றூர்கூற்றம், பட்டினக்கூற்றம், மிறைக்கூற்றம், அண் டாட்டுக்கூற்றம், கலார்க்கூற்றம், பாச்சிற்கூற்றம், உறையூர்கூற் றம், சூரலூர்க்கூற்றம், ஆவூர்க்கூற்றம், வெண்ணிக்கூற்றம், பாம் புணிக்கூற்றம், பொய்யூர்கூற்றம், தஞ்சாவூர்கூற்றம் கிழார்கூற் றம்" என்று பல கூற்றங்களாகப் பிரிக்கப்பட்டன. இராசராச சோழன் காலத்தில் "நாடுகளையும் கூற்றங்களையும்" ஒன்று சேர் த்து "இராசராசவளநாடு, பாண்டிகுலாசனிவளநாடு, கடலடை யாதிலங்கைகொண்டவளநாடு, உய்யக்கொண்டவளநாடு, அருண் மொழிதேவவளநாடு, நித்தவிநோதவளநாடு, இராசேந்திரசிங்க வளநாடு, சத்திரியசிகாமணிவளநாடு, கேரளாந்தகவளநாடு, சய சிங்ககுலகாலவளநாடு, இராசாசிரயவளநாடு, விருதராசபயங்கர வளநாடு" என்று பன்னிரண்டு வளநாடுகளாக வகுக்கப்பட்டன.

கச்சி "புலியூர்கோட்டம், ஆமூர்க்கோட்டம், படுவூர்க்கோட்டம், பல்குன்றக்கோட்டம், காலியூர்க்கோட்டம், எயிற்கோட்டம், ஊற்றுக்காட்டுக்கோட்டம், வெண்குன்றக்கோட்டம், செங்காட்டுக்கோட்டம், புழற்கோட்டம், மணையிற்கோட்டம், களத்தூர்க்கோட்டம், இளங்காட்டுக்கோட்டம், ஈக்காட்டுக்கோட்டம், ஈத்தூர்க்கோட்டம், கடிகைக்கோட்டம், குன்றபத்திரக்கோட்டம், சிறுகரைக்கோட்டம், செந்திருக்கைக்கோட்டம், செம்பூர்க்கோட்டம், தாமற்கோட்டம், பேயூர்க்கோட்டம், வேங்கடக்கோட்டம், வேலூர்க்கோட்டம்' என்னும் இருபத்து நான்கு கோட்டங்களையுடையன. "பொன்னூர்நாடு, புரிசைநாடு, புழல்நாடு, பொத்தப்பிநாடு, ஓய்மாநாடு, களத்தூர்நாடு, புலியூர்நாடு ஆமூர்நாடு, இளங்காட்டுநாடு, ஈக்காட்டுநாடு, ஈத்தூர்நாடு, ஊற்றுக்காட்டுநாடு, எயில்நாடு, கடிகைநாடு, காலியூர்நாடு, குன்றபத்திரநாடு, சிறுகரைநாடு, செங்காட்டுநாடு, செந்திருக்கைநாடு, செம்பூர்நாடு, தாமனுடு, படுவூர்நாடு, பல்குன்றநாடு, பேயூர்நாடு, மணையினுடு, வெண்குன்றநாடு, வேங்கடநாடு, வேலூர்நாடு" முதலிய எழுபத்தொன்பது நாடுகளாக வகுக்கப்பெற்றன. சோழர்கள் பல்லவர்களோடு நீண்டகாலம் போர்செய்து வென்றபின்பு "சயங்கொண்டசோழமண்டலம்" என்னும் பெயரெய்தியது.

ஆதிகாலத்திலே, சிவதிருவுருவம் எட்டினுள் மூன்ருகிய "சூரியன், சந்திரன், அக்கினி" என்னும் முத்தேவர்களின் மரபோர்கள் "அயன், மால், ஈசன்" என்னும் மும்மூர்த்தியாகிய சிவபெருமானை "வழிபட்டு (சிவபூசைசெய்து)" உண்போம் எனவும்; சிவதிருவுருவம் எட்டினுளொன்ருகிய "ஆன்மாக்களை (சீவன்களை)" காப்போம் எனவும் "சமயம் (உடன்படிக்கை)" செய்துகொண்டனர். அதற்குச் "சிவசமயம்" என்று பெயராயிற்று. அச்சமயம் நாளடைவிலே "சைவம், வாமம், பாசுபதம், வைரவம், காளாமுகம், மாவிரத (கௌமார)ம்" என்று ஆறு பிரிவாயின. இவ்வறுசமயத்தையும் "அகச்சமயம் அல்லது உட்சமயம்" என்பர்.

சிவபெருமான் சிவலிங்கத் திருவுருக்கொண்டு தோன்றிய காலத்தில் சைவசமயமும்; தக்கனுக்கு மகவாய்த் தேவியார் திருவுருக்கொண்டு தோன்றியகாலத்தில் வாமசமயமும்; சிந்துரன் என்னும் கயமுகாசுரனைக் கொல்லும்பொருட்டு யானை முகத்தோடு விநாயகராய்த் திருவுருக்கொண்டு தோன்றிய காலத்தில பாசுபத சமயமும்; அகந்தையடைந்த அயன் சிரத்தைக் கொய்யும்பொருட்டு வைரவராய்த் திருவுருக்கொண்டு தோன்றிய காலத்தில் வைரவ சமயமும்; தக்கனை வதஞ்செய்யும் பொருட்டு வீரபத்திரராய்த்திருவுருக்கொண்டு தோன்றிய காலத்தில் காளாமுக சமயமும்; சூரபன்மாதியரைக் கொல்லும்பொருட்டுசுப்பிரமணியராய்த் திருவுருக்கொண்டு தோன்றிய காலத்தில் மாவிரத (கௌமார) சமயமு முண்டாயின.

"வெவ்வேறு யிருமூன்று சமயமாகிப் புக்கானை."

என்று தேவாரங் கூறுகிறது.

திருநீறு (விபூதி) பூசிக்கொள்வோரும், உருத்திராக்கம் அணிந்துகொள்வோரும்,ஐந்தெழுத்து உச்சரிப்போரும், புலால் (மாமிசம்) விடுத்தோரும், சீவகாருணியம் (கிருபாநோக்கம்) உடையோரும் ஆகியவர்களில் சிவபெருமானை வழிபடுவோர் "சைவர்" எனவும்; தேவியாரை வழிபடுவோர் "வாமர்" எனவும்; விநாயகரை வழிபடுவோர் "பாசுபதர்" எனவும்; வைரவரை வழிபடுவோர் "வைரவர்" எனவும்; வீரபத்திரரை வழிபடுவோர் "காளாமுகர்" எனவும்; சுப்பிரமணியரை வழிபடுவோர் "மாவிரத (கௌமார)ர்" எனவும் பெயர் பெறுவர்.

முற்கூறிய முத்தேவர்களின் மரபோர்கள் "சமயம்" என்னும் உடன்படிக்கை செய்துகொண்டகாலமுதல் எண்ணிறந்த திருக்கோயில்களைக்கட்டி, விமானத்துட் சிவலிங்கப்பெருமானையும்; அப்பெருமானே "அயன், மால், ஈசன்" என்னும் மும்மூர்த்திகளென்பதற்கறிகுறியாக அவ்விமானத்தைச் சுற்றிலும் "அயன் (பிரமன்), மால் (விட்டுணு), ஈசன் (தக்கணாமூர்த்தி)" என்னும் திருவுருவங்களையும்; சிவபெருமான் திருவிளையாட்

டாக "தேவியார், விநாயகர், வைரவர், வீரபத்திரர், சுப்பிர மணியர்" என்னுந் திருவுருக்கொண்டு தோன்றிய அவ்வக் காலங்களில் அவ்வவ்வுருவங்களையும்; சிவபெருமான் தம்மைக் கொல்லும்பொருட்டுதாருகாவனத்து முனிவர் மாரணவேள்வியி னுண்டுபண்ணியனுப்பிய "முயலகன்" என்னும் அசுரன் முது கில் வலப்பாதத்தை யூன்றி, இடப்பாதத்தைத் தூக்கி நின்று ஆநந்தத்தாண்டவஞ் செய்தருளிய காலமுதல் "சபாநாயகர்" திருவுருவத்தையும்; பரமபதி மலையரையன் திருமகளாய்த் திருவுருக்கொண்டு தோன்றி அவரைத் திருமணஞ்செய்யும் பொருட்டு சந்திரசேகரப்பெருமானாய்த் தோன்றியகாலமுதல் "சந்திரசேகரர்" திருவுருவத்தையும்; பரமசிவன் மலையத் துவச பாண்டியன் திருமகளாய்த் திருவுருக்கொண்டு தோன்றி அவரைத்திருமணஞ் செய்யும்பொருட்டு சோமசுந்தரப் பெரு மானாய்த் தோன்றியகாலமுதல் "சோமசுந்தரர்" திருவுருவத் தையும் எல்லாத் திருக்கோயில்களிலும் அமைத்தும்; பரமபதி "கண்டியூர், வழுவூர், கடவூர், கோவலூர், பறியலூர், விற்குடி, குறுக்கை, அதிகை" என்னுமிடங்களில் வீராவேசங்கொண்டு முறையே "பிரம சிரங்கொய்தல், யானையுரித்தல், காலனை யுதைத்தல், அந்தகனை வதைத்தல், தக்கன் யாகமழித்தல், சலந்தரனைப்பிளத்தல், காமனை விழித்தெரித்தல், முப்புரத்தை நகைத்தெரித்தல்" என்னுந் திருவிளையாடல்கள் செய்தருளி யதை அவ்வத் தலங்களில் அமைத்தும்;

"பூமன் சிரங்கண்டி யந்தகன் கோவல் புரமதிகை
மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாவழுவூர்
காமன் குறுக்கை யமன் கடவூ ரிந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையுந் திங்களுஞ்சூடி தன் சேவகமே."

என்பதனு லறியலாகும். சிவபெருமான் "அண்ணமலை, செங் குன்றூர், சங்கரநாராயணன் கோயில்" என்னுமிடங்களில் முறையே "அக்கினிமலையாய்த் தோன்றல், வலப்பாகம் ஆணும் இடப்பாகம் பெண்ணுமாய்த் தோன்றல், வலப்பாகஞ் சங்கரனும் இடப்பாகம் நாரணனுமாய்த் தோன்றல்" என்னுந் திருவிளை யாடல்கள் செய்தருளியதை அவ்வவ்விடங்களில் அமைத்தும்,

பரமசிவன் "திருத்தில்லை(பொற்சபை), திருவாலங்காடு (இரத்தினசபை), திருவாலவாய்(வெள்ளிச்சபை), திருநெல்வேலி(செப்புச்சபை), திருக்குற்றாலம் (சித்திரசபை), திருப்புத்தூர், திருவெண்காடு" என்னுமிடங்களில் முறையே "ஆநந்தத்தாண்டவம் காளி (ஊர்த்துவ)தாண்டவம், சந்தியா தாண்டவம், முனிதாண்டவம், திரிபுர(சங்கார) தாண்டவம், இலக்குமி தாண்டவம், கௌரிதாண்டவம்" என்னும் ஏழுவிதத் தாண்டவஞ்செய்தருளியதை அவ்வத்தலங்களில் அமைத்தும் ஆதிசைவர்களாகிய பூசகர்களைக்கொண்டு பூசனை செய்வித்துவந்தார்கள்.

தமிழ்ப்பூமியில் ஊர்களை யுண்டுபண்ணியகாலத்தில் முன்னர் திருக்கோயில்களையும்; பின்னர் "அரிஅரகுமாரன் என்னும் மாசாத்தன், பிடாரி என்னும் காளி" முதலிய கிராம காவற்றேவதை கோயில்களையு முண்டுபண்ணி அதன்பின்னர் குடியேற்றினர். இதனை ஊர்கள்தோறும் திருக்கோயில்க ளிருத்தலினாலும்; சிலவூர்களில் திருக்கோயில்கள் சிதைந்துபோய்ச் சிவலிங்கத்திருவுருவங்கள் மாத்திர மிருத்தலினாலும்; சிலவூர்கள் சிதைந்துபோய்த் திருக்கோயில்கள் மாத்திர மிருத்தலினாலும்; சிலவூர்களும், கோயில்களும் சிதைந்துபோய்த் திடலாகி சிவலிங்கத் திருவுருவங்கள் மாத்திர மிருத்தலினாலும்; கிராம காவற்றேவதைகளுக்குப் பல அரசர்களின் பெயர்களிருத்தலினாலும் அறியலாகும்.

"அக்கினி, சூரியன், சந்திரன்" என்னும் முத்தேவர்களின் மரபோர்களாகிய "சேர சோழ பாண்டியர்கள்" தொன்றுதொட்டு தங்கள் முன்னோர்கள் கைக்கொண்டிருந்த சைவசமயத்தைக் கைவிட்டு இடைக்காலங்களில் தோன்றிய (பொய்ச்சமயங்களாகிய" பௌத்த சமண சமயங்களிற் புகுந்து, அவ்வச்சமயாசிரியர்களின் துற்போதனைக் குடன்பட்டு சைவசமயத்தார்களைத் துன்புறுத்தி அதனால் பெருந்துன்பங்களையடைந்து பின்பு சைவசமயத்திற் புகுந்து சைவராயினார்கள். சுமார் ஐந்நூற்றைம்பது ஆண்டுகளாக முற்கூறிய அரசர்களின் மரபோர்கள்

"காக்கையன், காட்டேரி, காத்தன், கறுப்பன், பட்டவன், பேச்சி, மாடன், முனியன், முன்னடியன், வீரன்" முதலிய பேய்களை வழிபடும் மார்க்கங்களைக் கைக்கொண்டு "ஆடு, கோழி, பன்றி" முதலியவற்றை யறுத்து "மது மாமிசங்களைப் படைத்து" அவற்றையுண்டுகளித்து அறிவழிந்து போர்வலி குன்றி அரசிழந்து வறுமையுற்று கீழ்மையடைந்தனர். இனி மேலாவது முற்கூறிய பேய்களை வழிபடுவதையும், மது மாமிசம் புசித்தலையும்விட்டு மும்மூர்த்தி சொரூபாகிய கடவுளை வழிபடு வார்களாயின் மேன்மையடைவார்களென்பது திண்ணமேயாகும். பேய்களை வழிபடுவோர் பேய்பிடித்தோரேயாவர். பேய்பிடித் தோரடையும் பிரயோசனந்தான் பேய்களைவழிபடுவோரடைவர்.

சூரியன் மரபோர்களே பெரும்பான்மையும் சக்கரவர்த்தி களாயிருந்தனரெனினும், "சந்திரன்மரபோர்களும் அக்கினி மரபோர்களும்" ஒவ்வொருகாலத்தில் சக்கரவர்த்திகளாயிருந் திருக்கின்றனர். இதனைப் பின்வரும்சுந்தரபாண்டியன் கல்வெட்டு கட்டுரையாலும்; "கோமாறவன்மா திரிபுவனசக்கரவர்த்திகள் குலசேகரதேவர், கோக்கட்பன்மரான திரிபுவன சக்கரவர்த்தி கள் வல்லபதேவர்" என்று திருக்களர் கல்வெட்டு கூறுதலி னாலும்; கோமாறவன்மா திரிபுவனசக்கரவர்த்திகள் பராக்கிரம பாண்டியதேவர்" என்று பத்தூர் கல்வெட்டு கூறுதலினாலும்; திருவானைக்காவில் சுந்தரபாண்டியன் மதிலிருத்தலினாலும்; "மீனவனல்லூர், விக்கிரபாண்டியம், சுந்தரபாண்டியம், மாற நகரி, மாறன்பாடி, குலசேகரபாண்டீச்சுரம், அதிவீரராம பாண்டியன்பட்டினம் (அதிராம்பட்டினம்), பூழியூர், சேரன் குளம், உதியத்தூர்" என்னுமூர்கள் சோழநாட்டிலிருத்தலி னாலும் நன்கறியலாகும்.

### சுந்தரபாண்டியன் கட்டுரை.

"பொன்னிசூழ் நாட்டுப் புலியாணை போயகல
கன்னிசூழ் நாட்டிற் கயலாணை கைவளர
வெஞ்சின விவுளியும் வேழமும் பரப்பித்
தஞ்சையு முறந்தையுஞ் செந்தழல் கொளுத்திக்

காவியு நீலமும் நின்றுகவி னிழப்ப
ஆவியு மாறு மணிநீர் நலனழித்துக்
கூடமு மாமதிளுங் கோபுரமு மாடரங்கும்
மாடமு மாளிகையு மண்டபமும் பலவிடித்துத்
தொழுது வந்தடையா நிருபர்தந் தோகைய
ரழுத கண்ணீ ராறு பரப்பிக்
கழுதை கொண்டுழுது கவடிவிச்சுச் செம்பியனை
சினம்பிரியப் பொருது சுரம்போக வோட்டி
பைம்பொன்மணி முடிபறித்துப் பாணனுக்குக் கொடுத்தருளி
பாடருஞ் சிறப்பிற் பருதிவான் ஞேயு
மாடகப் புரிசை யாயிரத் தளியில்
சோழவளவன் அபிடேகமண்டபத்து வீராபிடேகம் பண்ணிக்
கூராழியுஞ் செய்ய தோளுமே கொண்டுபோய்
ஐயப்படாத அருமறைதே ரந்தணர் வாழ்
தெய்வப் புலியூர்த் திருவெல்லை யுட்புக்கு
பொன்னம் பலம்பொலிய நின்றுடுவார் பூவையுடன்
மன்னுந் திருமேனி கண்டு மனங்களித்து
****** ****** ****** ******
***** சோதி மண்டபத் திருந்து
சோலைமலிபுனற் சோணுடு தானிழந்த
தார்மாலை முடியுந் தரவருக வென்றழைப்ப
வானநிலை குலைய வாளரிக் கப்புறத்துப்
போனவளவ னுரிமை யுடன் புகுந்து
பெற்றபுதல் வனைநின் பேறென்று முன்காட்டி
வெற்றியரி யணைக்கீழ் வீழ்ந்து தொழுதிரப்பக்
காணுேடிமுன் னிகழ்ந்த வெம்மையெலாங் கையகல
தானுேதகம் பண்ணி இதுபிடிபா டாகவெனப்
பொங்குதிரை ஞாலத்துப் பூபாலர் தொழவிளங்குஞ்
செங்கயல் கொண்டுன் றிருமுகமும் பண்டிழந்த
சோள பதியென்னு நாமமுந் தொன்னகரு
மீள வழங்கி விடைகொடுத் தருளி
முன்ன நமக்கு முடிவழங்குஞ் சேவடிக்கீழ்
இன்னம் வழிபடுவோ மென்ஞது பின்ஞெருநாள்
காவல னதுபுனநா டெனுங் களியா
வேவ லெதிர்செல்லா திறைமறுத்த சென்னிவிடு
தூசியும் பேரணியும் ஒக்கச் சுருண்டொதுங்கி
வாசியும் வாரணமுந் தேரு மடற்கருவக்

கூலனும் வெட்டுண்ண ****** ******
****** ******* ******* *******
கொடிகொண்ட நெற்றி நிரைத்தகோ புரஞ்சூழ்
முடிகொண்ட சோழபுர மண்டபத்துப் புகுந்து
திசைதொறும்******* சயத்தம்ப நாட்டிய
கோமாறவன்மரான திரிபுவனச்
சக்கரவர்த்திகள் சோணடு கொண்டு
முடிகொண்ட சோழபுரத்து வீராபிடேகம் பண்ணியருளிய
சுந்தர பாண்டிய தேவர்க்கு யாண்டு—"

சந்திரன் மரபோர் பெயர் "உசிதன், கவுரியன், குமரிச் சேர்ப்பன், கூடற்கோமான், கைதவன், கொற்கைவேந்தன், செழியன், தமிழ்நாடன், தென்னவன், பஞ்சவன், பாண்டியன், பூழியர்கோன், பொதியவெற்பன், மாறன், மீனவன், வழுதி, வேம்பின்றுரோன், வையைத்துறைவன்" என்பன. இற்றைக்கு ஐந்நூற்றைந்து ஆண்டுகளுக்குமுன் கருநடதேசத் தாசனேடு பெரும்போர்செய்து அரசிழந்தனர் இதனை "மகாமண்டலேசுவரன் ஆரியராசவிபாடன் பாடைக்குத் தப்புவாராதகண்டன் மூவராய கண்டன் பூர்வ தட்சிண பச்சிம சமுத்திராதிபதி விருப்பண்ணவுடையார் பிருதிவிராச்சியம் பண்ணியருளாநின்ற சகாப்தம் ௬௩௱௭௰௩-ன் மேல் செல்லாநின்ற சார்வரிவருடத்து மகர நாயிற்று பூர்வபக்கத்து உத்திரமுந் துவாதசியும் பெற்ற வெள்ளிக்கிழமை நாள்" என்று திருக்களர் கல்வெட்டு கூறுதலினலறியலாகும். "மாறன்" என்னும் பதமானது திரிந்து "மறவன்" என்று வழங்குகிறது. "மறவன்" என்னும் பட்டமுடையோர் சந்திரன் மரபோரேயாவர்.

(சந்திரன் மரபோரை "முக்கோணக்குன்றமுடி நாகன்றெல்லகப்பா" பின்வருமாறு கூறுகிறது):—

"பதுமதுரையாட் டையிரண்டீரா யிரத்தறு நூற்றறுபான்
அதுகழிந் தஞ்சாட் டானது மதுரையும்
பஃறெளி யாற்றின் தக்கண முற்ற
மதுரைப் பதியோன் மதுதுரை மன்னேன்
மாபிற் றேன்றிய மன்னர்முப் பத்தெண்மர்
ஆண்டவ் வாட்டை யாயிரத் தெண்ணூறு
மதுதுரை மைந்தன் மதுவராய்ச் சூலன்

பதுமன் புள்ளிக் களியன் கோமான்
வேற்கை யாவணன் விருதன் களரிக்கோன்
பார்க்கவன் பழையன் பஞ்சவன் முடியன்
வயவன் திமிரரி வசுதையன் வளவன்
கயவன் காரி கந்துகன் முடவன்
அரையன் திரையன் அஞ்சாத்தேவன்
ஆரலன் வீரன் அழகன் உக்கிரன்
வழுதியன் வண்டன் அசலையன் கள்வன்
பழுதிலான் அணியற்றுன் அஞ்சிக்கிஞ்சி திட்டாணியன்
அத்தாணிக் கோமான் அம்புலிக் கூவிரியன்
இத்தரையாண் டவரில் எந்துபுள் ளிக்களியன்"

அக்கினி மரபோர் பெயர் "உதியன், குடகன், குடக்கோன், குட்டுவன், கோளன், கொங்கன், கொங்கர்கோன், கொல்லிவெற்பன், கோதை, சேரமான், சேரலன், சேரலாதன், சேரன், பனந்தாரான், பூழியன், பொருநைத்துறைவன், பொறையன், போந்தின்றுரோன், மலையமான், மலையன், முத்தரையன், வஞ்சிவேந்தன், வன்னியன், வானவரம்பன், வானவன், வில்லவன்" என்பன. அவர் படைத்தலைவர் பெயர் "படையாட்சி, கமிண்டன்" என்பன. இற்றைக்கு ஆயிரத்துநூறு ஆண்டுகளுக்குமுன் ஆரியரோடு போர்செய்து அரசிழந்தனர். இதனை "கொல்லமாண்டு ஆயிரத்துநூறு" என்று பஞ்சாங்கங் கூறுதலினு லறியலாகும். "வன்னியன், பொறையன், முத்தரையன், படையாட்சி, கமிண்டன்" என்னும் பட்டமுடையோர் அக்கினி மரபோரேயாவர். "முத்தரையன்" என்பதை "முத்திரியன், முத்துராசா" எனவும்; "கமிண்டன்' என்பதை "கவண்டன், கண்டியன்" எனவுங் கூறுவாருமுளர். (சூரியன் மரபோர்க்கும் "வன்னியன், படையாட்சி" என்னும் பட்டமுண்டு).

சூரியன் மரபில் "மனு, இக்குவர்கு, நல்லுத்தான், புறஞ்சயன், மாந்தாதா, மணவாளன், வேள், தலைவன் (தலைமன்), சேறன் (சேறைமன்), பழையன், தளியன் (தளிமன்), நாகன் (நாகமன்), ஆய், நள்ளி, சூரன், மறையன், கார்யோகன் (கார்மன்), இராப்பட்டி (இராயன்), ஆச்சன், அரசன் (அரசதேவன்), ஓமாம்புலி (ஓமாம்புலிமன்), முசுகுந்தன், பனையன் (பனைமன்),

பருதி(பருதிமன்), விசலன்(விசலமன்), வாளமான்,நெல்வி(நெல்விமன்),பத்தாளன்,மங்கலன்,நியமி,சேய்ஞலன்(சேய்ஞன்),கருப்பன் (கருப்பைமன்) உறையன் (உறந்தைமன்), ஒளி (ஒளிமன்), கொற்றவன் (கொற்றமன்), நன்னி(நன்னிமன்), நீலன் (நீலமன்), வைகன் (வைகமன்), சாத்தன் (சாத்தமன்), மருங்கன் (மருங்கமன்), பூவன் (பூமன்), வேங்கைமார்பன் (வேங்கமன்), விடையன் (விடையமன்), அன்னி, கஞ்சன் (கஞ்சமன்), குறுக்கன் (குறுக்கைமன்), தில்லே(தில்லேமன்), வேலன்(வேலமன்), பட்டி (பட்டிமன்), சத்தி, செட்டி, சிவயோகன் (சிவமன்), கரும்பன் (கரும்பூரன்), கிழன் (கிழைமன்), இடையன் (இடைமன்), கன்னன், சாயாபதி(சாய்மன்), நம்பன், வாமனன், பாச்சிலன் (பாச்சில்மன்), ஓரி, காரி, சமயன், சோணன் (சோணேமன்), காசிபன் (காசிமன்), நாசிங்கன், காம்பயன், மானங்காத்தான், மண்டலன், செம்பியன்(சிபி), வன்கொற்றன் (வங்காரமன்), மலேயன், புள்ளன் (புள்ளமன்), துறையப்பன் (துறைமன்), கச்சியப்பன் (கச்சிமன்), கூழையன் (கூழைமன்), நந்தியன், கீரன் (கீரமன்), கத்தரியன் (கத்தரிமன்), வண்டயன்(வண்டமன்), வடுகன்(வடுகமன்), புன்னுகன்(புன்னுகமன்), மழவன், மன்னன் (மன்னயன்), அச்சுதன், பிரமன், வேணு, ஆத்தியன் (ஆத்திமன்), பரங்கிலி (பரங்கிமன்), தாமிரன், கல்லன் (கல்லமன்), வேம்பன் (வேம்பமன்), நெய்தலன், (நெய்தமன்), திட்டாணியன் (திட்டைமன்), ஒக்கலன் (ஒக்கமன்), நாச்சியார், கண்ணன், அந்தனன், நாரணசிவன் (நாணசேவன்), குற்ருலன் (குத்தாலன்), ஆனேயன் (ஆனேமன்), கண்டியன், வில்லியன் (வில்லிமன்), கோவலன், பயற்றன், இறைவன் (இறைமன்), இரும்பன் (இரும்பமன்), அம்பன், காவலன், சக்கரன் (சக்கரமன்), கூத்தன் (கூத்தமன்), பள்ளியன் (பள்ளிமன்), மின்னலன் (மின்னெளியன்), காடுவெட்டி, முதுவன், விட்டுணு(விட்டுணுமன்), பெண்ணுகடன்(பெண்ணேமன்), புனலன் (புனமன்), நார்த்தன் (நார்த்தேவன்), குண்டன் (குண்டைமன்), வலன் (வலமன்), ஒற்றன் (ஒற்றைமன்), சிக்கலன் (சிக்கமன்), நீடன் (நீடமன்), வாட்டன் (வாட்டமன்), வேட்டன் (வேட்டமன்), வன்னியன் (வன்னிமன்), மாதவன் (மாதயன்), புதுவன் (புதுவைமன்), மேலன்(மேலேமன்), கோட்டன் (கோட்

டமன்), வாணன், கொட்டன் (கொட்டமன்), அம்மையன், துண்டரன், தண்டகன், செல்லன் (செல்லமன்), வீரபோகன், மல்லியன், வல்லபன், முல்லையன் (முல்லைமன்), விசயன், தெலிங்கன் (தெலிங்கமன்), வழுவன் (வழுவைமன்), கள்ளியன்(கள்ளிமன்), வலிவலன், கோடியன், விழியன் (விழிமன்), குழையன் (குழைமன்), ஆரியன், சாந்தன்(சாந்தமன்), அலிவலன், சோழன் (சுராதிராசன்), குமார சோழன், பாப்பன சோழன், அத்திரி சோழன், (அத்திசோழன்), காங்கமசோழன் (காந்தமசோழன்), பஞ்சநதசோழன், கொள்ளிசோழன், முள்ளிசோழன், பாண்டு சோழன், வெண்ணிசோழன், அரியசந்திரசோழன், விளப்ப சோழன், சித்தசோழன், புத்திகழிசோழன், வளவசோழன், பசுபோகசோழன், மண்ணிசோழன், அண்டசோழன், வீரவாதித்த சோழன், புகழ்ச்சோழன், பெரும்பற்றசோழன், கூரசோழன், பாம்பசோழன், மயில்சோழன் (மயிலாடுசோழன்), சந்திரசோழன், நீவசோழன், வாஞ்சிசோழன், பொன்னசோழன், ஐவசோழன், வெட்டுவசோழன், பூதசோழன், ஓடம்போகிசோழன், சாளுவசோழன், வடமசோழன், மறவசோழன், அடைவளை சோழன், சொக்கநாதசோழன் (சொக்கசோழன்), உலகநாத சோழன், மாந்தைசோழன், கவிக்காமசோழன், ஈசசோழன், வெண்டசோழன், தக்கோலசோழன், அன்னசோழன், அன்ப சோழன், குருசோழன், பெரியசோழன், பைஞ்ஞீலசோழன், பாலையசோழன், கடம்பசோழன், கடையசோழன், செங்கமல சோழன், குடசோழன், பேரெயில்சோழன் (பேர்சோழன்), சிரசோழன், பாதிரிசோழன், மஞ்சசோழன், புலவசோழன், ஆந்தைசோழன், நல்லுருத்திரசோழன், திருமலைசோழன், ஆதனழிசிசோழன், கிள்ளிசோழன், கண்டர்கிள்ளிசோழன், சிறுகிள்ளிசோழன், நெடுங்கிள்ளிசோழன், ஆலங்கிள்ளிசோழன் (ஆலசோழன்), வாலிசோழன், ஏனாதிதிருக்கிள்ளி சோழன், "குராப்பள்ளிதுஞ்சிய" பெருந்திருமாவளவசோழன், "இலவந்திகைப்பள்ளிதுஞ்சிய" நலங்கிள்ளிசேட்சென்னிசோழன், "குளமுற்றத்துத்துஞ்சிய" கிள்ளிவளவசோழன், நலங்கிள்ளிசேட்

சென்னிசோழன், "காரியாற்றுத்துஞ்சிய" நெடுங்கிள்ளி சோழன், "கருவூரெறிந்த குராப்பள்ளிதுஞ்சிய" கிள்ளிவளவசோழன், "இராசசூயம்வேட்ட" பெருநற்கிள்ளிசோழன், தித்தசோழன், "போர்வைக்"கோப் பெருநற்கிள்ளிசோழன், "பாமுளூரெறிந்த நெய்தலங்கானல்" இளஞ்சேட்சென்னி சோழன், "செருப்பாழியெறிந்த்" இளஞ்சேட்சென்னி சோழன், தஞ்சையிராசராசசோழன், "முடித்தலைக்"கோப் பெருநற்கிள்ளிசோழன், கோப்பெருஞ்சோழன், சூரவாதித்தசோழன், கோச்செங்கட்சோழன் (செங்கண்சோழன்), "வேற்பஃறடக்கைப்" பெருநற்கிள்ளிசோழன், அழிசிசோழன், சேந்தசோழன், "உருவப்பஃறேர்" இளஞ்சேட்சென்னிசோழன், கரிகாற்பெருவளவசோழன் (கரிகாலன்), இராசராசசோழன் (உலகுடை முக்கோக்கிழானடிகள் கணவன்), மூவசோழன் (மும்முடி சோழன்), "பொன்மாளிகைதுஞ்சிய" பராந்தகசோழன், விக்கிரமசோழன் (முக்கோக்கிழானடிகள் கணவன்), இராசராச சோழன் (புவனமுழுதுடையாள் கணவன்), 'மதுரையும் ஈழமுங் கொண்ட" வீரநாராயண பராந்தகசோழன், கண்டராதித்தசோழன், மதுராந்தகசோழன் (உத்தமசோழன்), இராசராச சோழன் (திரைலோக்கிய மாதேவியார் கணவன்), கங்கைகொண்ட சோழன் (இராசராசசோழன் தம்பி), தொண்டைமான், தொண்டைமானிளந்திரையன், மாவலி, புல்லி, ஆதனுங்கன், பல்லவன், ஒணன், காடவன், ஐயடிகள் காடவர்கோன், கழற்சிங்கன், செஞ்சிக்காடவன், இராசேந்திரசோழன் (விசயராசேந்திர சோழன்), இராசாதிராசசோழன், வீரசோழன், மதுராந்தக சோழன் (சோழகங்கன்), பராந்தகசோழன் (சோழவயோத்திய ராசன்), இராசேந்திரசோழன் (உத்தமசோழன்), "பூமாலை முடிகொண்ட" ஆதிராசேந்திரசோழன், இராசமகேந்திர சோழன் (சோழகேரளன்), "கடாரங்கொண்ட" இராசேந்திரசோழன், "புகழ்முடிகொண்ட" சுந்தரசோழன், "இரட்டபாடிகொண்ட" வீரராசேந்திரசோழன், மதுராந்தகசோழன் (சோழவல்லபன்), ஆனைச்சேவகசோழன் (நிருபேந்திரசோழன்),

குலோத்துங்கசோழன் (புவனமுழுதுடையாள் கணவன்), கங்கைகொண்டராசராசசோழன், "விசயதரானை" குலோத்துங்க சோழன் (தியாகவல்லி, ஏழிசைவல்லபி கணவன்), விக்கிரம சோழன் (திரிபுவனமுழுதுடையாள், தரணிமுழுதுடையாள் கணவன்), குலோத்துங்கசோழன் (புவனமுழுதுடையாள் கணவன்), இராசராசசோழன், குமாரமகீதரசோழன், சங்கர சோழன், இராசேந்திரசோழன், இராசாதித்தசோழன், கோனேரின்மைகொண்ட சோழன், அபயகுலசேகரசோழன், கோனேரிமேல்கொண்ட குலோத்துங்கசோழன், அனபாயசோழன், "மதுரையும் பாண்டியன் முடித்தலையும் ஈழமுங் கருவூருங் கொண்டருளிய" குலோத்துங்கசோழன், இராசராசசோழன் (கோப்பரகேசரி), கோனேரிமேல்கொண்டான், அதியமான், களப்பாளன் (கூற்றுவன்), இடங்கழி, அருவன், பூழியன், ஊமத்தன், கருணுகரத்தொண்டைமான், சேதிபன், மெய்ப்பொருள், நரசிங்கமுனையரையன், வரபதியாட்கொண்டான், பிரபுடதேவன், திருமங்கைமன்னன்" முதலிய பல்லாயிரங்கோடி அரசர்கள் தோன்றி "திருவாரூர், தேவூர், புறம்பயம், மாங்கோட்டை, மணவைநகர், பெருவேளூர், பழையாறு, தளிக்கோட்டை, நாகபட்டினம், ஆய்க்கோட்டை, நள்ளிக்கோட்டை (நல்லிக்கோட்டை), சூரக்கோட்டை, மறைப்புரம் (வேதபுரம்), காரைக்கோட்டை, இராயபுரம், ஆச்சாபுரம், அரசபுரம் (அரிச்சிய புரம்), ஓமாம்புலியூர், புகார்ப்பட்டினம் (காவிரிப்பூம்பட்டினம்), பனையங்கோட்டை, பருதிக்கோட்டை (பருத்திக்கோட்டை), விசலூர், வாளமரன்கோட்டை, நெல்லிக்கோட்டை (கீழாநெல்லிக்கோட்டை), பத்தாளன்கோட்டை, (திரு)மங்கலக்கோட்டை, சேய்ஞலூர், கருவூர், உறையூர், ஒளிக்கோட்டை (உள்ளிக்கோட்டை), கொற்றமங்கலம் (கொற்றங்குடி), நன்னிப்பள்ளி (நனிப்பள்ளி), நீலப்பாடி, மருங்காபுரி, பூவாளூர், வேங்கைநகர் (உழுவூர்), விடையபுரம், அன்னியூர், கஞ்சனூர் (கஞ்சபுரம்), குறுக்கை (ஆய்மூர்), தில்லை (சிதம்பரம்), பிச்சபுரம் (பிச்சவரம்), வேலூர் (இராயவேலூர்), பட்டுக்கோட்டை, சிவபுரம், கரும்

பூரான்கோட்டை, கீழைக்கோட்டை, இடைங்கான்கோட்டை, கன்னபுரம், சாய்க்கோட்டை (கலயநல்லூர்), நம்பன்கோட்டை (நம்மக்கோட்டை), வாகோட்டை, பாச்சிற்கோட்டை, காரிகோட்டை, சமயபுரம், சோணுகோட்டை, காசாங்கோட்டை, நரசிங்கபுரம், கரம்பயன்கோட்டை, (கரமுண்டான்கோட்டை). மண்டலகோட்டை, செம்பியபுரம் (செம்புவரம்), வங்கநகர், திருமலைராயன்பட்டினம், புள்ளன்பாடி, துறைக்கோட்டை, (துறையாண்டான்கோட்டை), கச்சிநகர் (காஞ்சீபுரம்), நந்திபுரம், கீரநகரம் (நகரம்), கத்திரிநகர், வண்டைநகரம், வடுகூர், புன்னையூர், மழவன்கோட்டை (மகழன்கோட்டை), மன்னிப்பள்ளி, அச்சுதபுரம், பிரமபுரம் (சீகாழி), வேணுபுரம் (சீகாழி), ஆத்திக்கோட்டை, பரங்கிலிகோட்டை (பரக்கலக்கோட்டை), தாமிரன்கோட்டை, கல்லாகோட்டை, நாச்சிகோட்டை (நாஞ்சிகோட்டை), கண்ணபுரம், அந்தனபுரம், இறையூர் (மாரன்பாடி), இரும்புதல், அம்பர், காவலகுடி, சக்கரப்பள்ளி, மின்னொளிக்கோட்டை (மின்னுளிக்கோட்டை), விட்ணுபுரம், வலம்புரம், வாட்டாட்சிகோட்டை, (வாவாசிகோட்டை), வன்னிநகர், மாதயபட்டினம், புதுக்கோட்டை, மேலைக்கோட்டை, கோட்டைப்பட்டினம், வாணரையன்பட்டினம் (வாணுதரையன்பட்டினம்), துண்டீரன்பாடி (துண்டாராயன்பாடி), வீரயன்கோட்டை (வீரியன்கோட்டை), மல்லிபட்டினம், வல்லம், விசயபுரம், தெலிங்காபுரி, வழூவூர், வலிதாயம் (பாடி), சோழபுரம், குமாரபுரம், பாப்புக்கோட்டை (பாப்புநகாரம்), அத்திக்கோட்டை, காங்கயம், பஞ்சநதிக்கோட்டை (பஞ்சினிக்கோட்டை), வெண்ணிமங்கலம் (வெண்ணமங்கலம்), அரியசந்திரபுரம் (அரிச்சந்திரபுரம்), விளநகர், சித்தரபாடி (சித்தலபாடி), புத்திகழிச்சான்கோட்டை (கழிச்சான்கோட்டை), ஆவூர், மண்ணிநகர், அண்டபுரம், மயிலாளிகோட்டை (மயில்கோட்டை), சந்திரப்பாடி, வெள்ளநகர், வாஞ்சியம், பொன்னவராயன்கோட்டை, கூராட்சிகோட்டை (கூப்பாட்சிகோட்டை), பாம்புரம், ஐயனுபுரம், வெட்டுவாகோட்டை, பூதலூர், சாளுவன்பட்டினம் (சாளுவராயன்பட்டினம்), வடகுடி

(காட்டுமன்னார்கோயில்), மறக்காணம், அடைக்கப்பட்டு, சொக்க நாதபுரம், உலகுய்யகொண்டான் (உலயக்குண்டம்), மாந்தை நகர், கலியாணபுரம், ஈச்சன்கோட்டை, (ஈங்கைநகர்), வெண்டா கோட்டை, தக்கோலம், (ஊறல்), அன்னவாயில், அன்பதுமே நகரம், குருபாடி (குருவாடி), பெரியகோட்டை, பைஞ்ஞீலி, பாலையக்கோட்டை, பெருங்கடம்பனூர், கடையம், செங்கப் பட்டு, குடவாயில், பேரெயில் (பேரையூர்), சிராப்பள்ளி, பாதி ரங்கோட்டை, மஞ்சகுப்பம், புலஞ்சி, எயிலுவான்கோட்டை, ஆதனக்கோட்டை, கிள்ளிகோட்டை, கண்டர்கோட்டை, சிறு கோட்டை, நெடுவாக்கோட்டை, வாலிகண்டபுரம் (வாலிகொண் டாபுரம்), ஏனாதி, சேண்டாகோட்டை, இளநகர், தஞ்சைநகர், தென்னூர், ஆக்காடு, மூவரையன்கோட்டை, பராக்கோட்டை, விக்கிரமசோழபுரம், கங்கைகண்டசோழபுரம் (கங்கைகொண்ட சோழபுரம்), மாவலிபுரம், திருவேங்கடம் (திருப்பதி), பல்லவ புரம் (பல்லாவரம்), செஞ்சிக்கோட்டை, சோழபாண்டி, மது ராந்தகம், உத்தமசோழபுரம், மல்லாகோட்டை, மகேந்திரப் பள்ளி, சுந்தரகோட்டை (சுன்றரகோட்டை), கோனேரிராச புரம், கோனூர், அதியரையமங்கை (அதிகை), களப்பாள் (களந்தை), கொடும்பாளூர், அருவாநகர், பூழியூர், ஊமத்தநகர், திருக்கோவலூர், திருநாவலூர், திருவண்ணாமலை, திருவாலி" முதலிய பல்லாயிரம் நகரங்களை யுண்டுபண்ணி இராசதானிக ளாகக்கொண்டும்; "கோயில்கள், ஊர்கள், ஆறுகள், ஏரிகள், கால்வாய்கள்" முதலியவற்றை யுண்டுபண்ணியும்; "கடலைப் பருப்புப் பருமனுள்ள பொன்பணம், கோழியின் உருவம் அமை க்கப்பெற்ற செப்புக்காசு, வீரராசேந்திரப் பெருவிலையாகிய பெரும்பணம்" முதலிய பலவகை நாணயங்களை யமைத்தும்; வேற்றரசர்களைப் போரில்வென்று தன்னடிப்படுத்தியும், அரசா ண்டுவந்தனர். அவ்வரசர்களின் பெயர்களும், அவர்கள் உண்டு பண்ணிய நகரங்களின் பெயர்களும், அவர்கள் ஆண்ட நாடுக ளின் பெயர்களும், அவர்கள் காட்டிய வீரபராக்ரமங்களின் பெயர்களும், அவர்கள் கவர்ந்த நாடுகளின்பெயர்களும் அவர்கள்

உண்டுபண்ணிய கோயில்களின் பெயர்களும், அவ்வவ்வரசர்களின் மரபோர்களுக்கு தனித்தனி பட்டப்பெயர்களாகி வழங்குகின்றன.

"மால், சூரியன், தேவன், தேவராயன் (தேசிராயன்), தேவாண்டான் (தேவண்டான்), தேவாளன், தேவாளி தேவாட்சி, தேவப்பிரியன், தேவுடையன், தேவுகொண்டான், புறம்பயன் (பொறையன்), புறம்பயத்தான் (பொறைபொறுத்தான், பொய்ந்தான்), புறம்பயாண்டான், புறம்பயாளன், புறம்பயாளி, புறம்பயாட்சி, புறம்பயப்பிரியன், புறம்பயமுடையன், புறம்பயங்கொண்டான் (பொய்கொண்டான்), மாங்காடன், மாங்காட்டான், மாவாண்டன், மாவாளன், மாவாளி, மாவாட்சி, மாப்பிரியன், மாவுடையன். மாகொண்டான், மாநாடன், மணவாளன், வேள், வேள்ராயன், வேளுடையன், வேளுரன், வேளாண்டான், வேளாளன், வேளாளி, வேளாட்சி, வேட்பிரியன், வேட்கொண்டான், வேணுடன், தலையன், தலைராயன் (தலைசைராயன், தனசைராயன், தனராயன்), முதலி, பழையாற்றான் (பழத்தான், மாம்பழத்தான்), பழையாற்றரையன், பழைசையுடையன், பழைசையாண்டான், பழசையாளன், பழசையாளி, பழசையாட்சி, பழைசைப்பிரியன், பழைசைகொண்டான் (பழங்கொண்டான், பழனங்கொண்டான்), பழைசைநாடன், தளியன், தளிராயன், தளியுடையன், தளியாண்டான், தளியாளன், தளியாளி, தளியாட்சி, தளிப்பிரியன், தளிகொண்டான், தளிநாடன், நாகன் (நாயக்கன்), நாகராயன், நாகுடையன், நாகாண்டான், நாகாளன், நாகாளி (நாக்காடி, நாவிளங்கி), நாகாட்சி, நாகப்பிரியன், நாகங்கொண்டான், நாகநாடன், நாகதேவன், கார்யோகன், கார்யோகராயன், காருடையன், காராண்டான், காராளன், காராட்சி (காரைக்காச்சி), கார்ப்பிரியன், கார்கொண்டான், பனையன் (பன்னையன்), பனைராயன், பனையுடையன், பனையாண்டான், பனையாளன், பனையாளி, பனையாட்சி, பனைப்பிரியன், பனைகொண்டான், (பன்னிகொண்டான், பண்ணிகொண்டான், பன்றிகொண்டான், பண்ணிமுண்டான், பணிகொண்டான், பணிபூண்டான்),

தாளியன் (தாளிதியன்), பனைநாடன், பனையதேவன், பருதியன், பருதிராயன், பருதியுடையன், பருதியாண்டான், பருதியாளன், பருதியாளி, பருதியாட்சி, பருதிப்பிரியன், பருதிகொண்டான் (பருத்திகொண்டான்), பருதிநாடன், பருதிதேவன், விசலன், விசலராயன், விசலுடையன், விசலாண்டான் (விசலண்டான், பிசலண்டான், வீசண்டான்), விசலாளன், விசலாளி (விச்சாடி), விசலாட்சி, விசலப்பிரியன், விசல்கொண்டான் (விசலுண்டான், பிசலுண்டான்), விசல்நாடன், விசல்தேவன், வாளமரன், வாள் ராயன், வாளுடையன், வாளாண்டான், வாளாளன், வாளாளி, வாளாட்சி, வாட்பிரியன், வாட்கொண்டான், வாள்வெட்டி, அரசன், அரசுடையன் (அரசுக்குடையன், அரசுக்குழைச்சான், அரச்சுக்குழைச்சான்), அரசாண்டான், அரசாளன், அரசாளி, அரசாட்சி, அரசப்பிரியன், அரசுகொண்டான், அரசதேவன், ஆச்சன், ஆச்சராயன், ஆச்சுடையன், ஆச்சாண்டான், ஆச் சாளன், ஆச்சாளி, ஆச்சாப்பிரியன் (ஆட்சிப்பிரியன்), ஆச்சங் கொண்டான், ஆச்சதேவன், இராயன், (இராங்கியன்) இரா யாண்டான். இராயாளன், இராயாளி (இராசாளி), இராயப்பிரி யன் (இராசப்பிரியன், இராங்கிப்பிலியன்), இராயங்கொண்டான் (இராயமுண்டான்), இராயதேவன், ஓமாமரையன் (ஓமசையன், ஓமனுயன், ஓசையன், ஓனுயன்), ஓமாமுடையன் (ஓட்டம் பிடிக்கியன்), ஓமாந்தரையன் (ஓந்தரையன், ஓந்திரியன்), ஓமாம் பிரியன் (ஓயாம்பிலியன்), நெல்லியன், நெல்லிராயன், நெல்லி யுடையன், :நெல்லியாண்டான், நெல்லியாளன், நெல்லியாளி, நெல்லியாட்சி, நெல்லிப்பிரியன் (நல்லிப்பிரியன்), நெல்லிகொண் டான், நெல்லிதேவன், பத்தாளன், பத்தாண்டான், பத்தாளி, பத்தாட்சி (பெத்தாசசி), பத்துடையன், பத்துகொண்டான், மங்கலன், மங்கலராயன், மங்கலாண்டான், மங்கலாளன், மங்க லாளி, மங்கலாட்சி, மங்கலப்பிரியன், மங்கல்கொண்டான், மங் கலதேவன் (மங்கதேவன்), மங்கலநாடன், சேய்ஞலரையன் (செம்மைக்காரன்), சேய்ஞலாண்டான், சேய்ஞலாளன், சேய்ஞ லாளி, சேய்ஞலாட்சி, சேய்ஞற்பிரியன் (சேய்ப்பிளன்), சேய் ஞற்கொண்டான் (செம்மைகொண்டான்), கருப்பையன் (கருப் பட்டியன்), கருவூரான் (கருப்பூரான்), கருவுடையன்,

கருவாண்டான், கருவாளன், கருவாளி, கருவாட்சி, கருப்பிரியன், கருக்கொண்டான் (கருப்பூண்டான்), உறந்தைராயன், உறந்தையுடையன், உறந்தையாண்டான், உறந்தையாளன், உறந்தையாளி, உறந்தையாட்சி, உறந்தைப்பிரியன், உறந்தைகொண்டான், ஒளிராயன், ஒளியுடையன், ஒளியாண்டான், ஒளியாளன், ஒளியாளி, ஒளியாட்சி, ஒளிப்பிரியன் (ஒண்டிப்பிலியன்), ஒளிகொண்டான், கொற்றரையன், கொற்றுடையன், கொற்ருண்டான், கொற்ருளன், கொற்ருளி, கொற்ருட்சி, கொற்றப்பிரியன் (கொத்தப்பிரியன்), கொற்றங்கொண்டான், நன்னியன் (நயினியன்), நீலங்கொண்டான் (நெறிமுண்டான்), வைகராயன் (வயிராயன், வயிரவன்), சாத்தயன் (சாதகன்), சாத்தரையன் (சாமுத்தரையன், சாமுத்திரியன்), மருங்கராயன் (பருங்கைராயன், கைராயன்). பூவன், பூவுடையன், பூவாண்டான், பூவாளன், பூவாளி, பூவாட்சி, (பூட்சி, திருப்பூட்சி), பூப்பிரியன், பூக்கொண்டான், வேங்கைராயன் (வேங்கிராயன்), உழுவுடையன், உழுவாண்டான் (உழுவண்டான்), உழுவாளன், உழுவாளி, உழுவாட்சி, உழுப்பிரியன், உழுக்கொண்டான், கஞ்சராயன் (கஞ்சன்), குறுக்கையன், குறுக்குடையன், குறுக்காண்டான் (குறுக்கண்டான்), குறுக்காளன், குறுக்காளி, குறுக்காட்சி, குறுக்கைப்பிரியன், குறுக்கொண்டான், பட்டுராயன் (பவட்டுரான்), பட்டுடையன், பட்டாண்டான், பட்டாளன், பட்டாளி, பட்டாட்சி, பட்டுப்பிரியன், பட்டுகொண்டான், செட்டி, கரும்பூரான், கரும்புடையன், கரும்பாண்டான், கரும்பாளன், கரும்பாளி, கரும்பாட்சி, கரும்புகொண்டான், கீழையன், கீழுடையன், கீழாண்டான் (கீழண்டான் , கீழாளன், கீழாளி, கீழாட்சி, கீழ்ப்பிரியன், கீழ்க்கொண்டான், இடங்காப்பிறந்தான், கன்னமுடையன், (கன்னப்படையன்), கன்ருண்டான், கன்ருளன், கன்ருளி, கன்ருட்சி, கன்னப்பிரியன், கன்னகொண்டான், கன்னதேவன், நள்ளிப்பிரியன் (நல்லிப்பிரியன்), கலயன், வாவுடையன், வாயாண்டான், வாயாளன், வாயாளி (வாயாடி), வாயாட்சி, வாப்பிரியன் (வாப்பிலியன்), காரி, பிச்சயன், பிச்சாளி (பிச்சாடி), சமயன், சமயாளி (சவுளி, சவுட்டி, சமட்டி), சோணயன், சோணுடுகொண்டான் (சோணுருண்டான்), காசிராயன், காசிநாடன்,

நரசிங்கன் (நரங்கியன்), நரசிங்கப்பிரியன் (நரங்கிப்பிலியன்), கரம்பையன், கரம்பைகொண்டான் (கரமுண்டான்), மானங்காத்தான், மானத்தரையன் (மானமுத்தரையன்), மானம்விழுங்கி (மானமுழுங்கி), மண்டலராயன் (மண்டராயன்), மண்கொண்டான் (மங்கொண்டான், மங்கண்டான்), செம்பியன் (செம்பன்), செம்பியரையன் (செம்பரையன், செம்படையன்), செம்பியத்தரையன் (செம்பியமுத்தரையன், செம்பியமுத்தரசு, செம்பியமுத்திரியன்), வங்கன் (வங்கணன்), வங்கராயன் (அங்கராயன்), வங்கத்தரையன் (வங்காரமுத்தரையன், வங்காரமுத்திரியன்), மலைராயன் (மலையரான்), புள்ளராயன், துறையாண்டான் (துறவாண்டான்), ஆய்ப்பிரியன் (ஆளற்பிரியன்), கச்சிராயன், கூழையன், கூழாக்கி, மண்வெட்டிக் கூழ்வாங்கி (மண்வெட்டியில் கூழ்வாங்கி), நந்தியன் (நந்தன்), கீரரையன் (கீரையன், கீரைக்கட்டையன்), கீரமுடையன் (கீருடையன்), கத்தரியன் (கத்தூரியன்), கத்தரிகொண்டான் (கத்தூரிமுண்டான்), கத்தரிநாட்டன் (கத்திநாடன்), வண்டன், வண்டயன் (வாண்டையான்), வண்டப்பிரியன் (வாண்டாப்பிரியன்), வண்டதேவன், வடுகராயன் (வடுராயன்), புன்ஞுகன் (புண்ணுக்கன்), புன்னையன் (பூனையன்), புன்னைகொண்டான் (பின்னுண்டான்), மழவன், மழவராயன், மழவாளி, (மழுவாடி), மழநாடன், மன்னயன் (மன்னியன்), அச்சுதன் (அச்சுதபண்டாரம்), அச்சுததேவன் (அச்சுத்தேவன்), பிரமன், வேணுடையன், ஆரக்கண்ணியன், ஆரம்பூண்டான் (ஆரமுண்டான்), ஆரஞ்சுற்றி (ஆர்ச்சுத்தி), மாலையிட்டான், பரங்கிலிராயன் (பரங்கிராயன்), வேம்பன், நாணசிவன் (நாணசேவன்), கண்டியன், வில்லன், வில்லவராயன், பயிற்றுராயன் (பதுங்கரான்), இறையாண்டான் (இராரண்டான்), அம்பராண்டான் (அமரண்டான்), அம்பர்த்தேவன் (அம்மலத்தேவன்), காவலகுடியன் (காலாக்குடியன்), காவலாளி (காவாலி, காலாடி), சக்கரன் (சக்கரை), சக்கரராயன் (சக்கராயன்), சக்கரநாடன் (சக்கரையப்ப நாடாள்வான், சக்கரநாட்டான்), கூத்தப்பராயன் (கொத்தப்பராயன்), மின்கொண்டான், மின்னுளி, காடுவெட்டி, நார்த்தேவன் (நார்த்தவான்), குண்டையன் (கொன்றையன்), ஒற்றையன், வாட்டாட்சி, (வாட்டாச்சி, வாச்சி,

வாச்சான்), வன்னியன், வன்னிகொண்டான் (வன்னிமுண்டான்), மாதவராயன், மாதராயன் (மாதுராயன், மாத்துராயன்), மாதையன், மாதையாண்டான், மேனாட்டுராயன், மேனாட்டரையன், மேனாட்டுத்தேவன் (மெட்டத்தேவன்), மேனாடன் (மெனக்கடன்), மேல்கொண்டான் (மேற்கொண்டான்), கோட்டரையன், கோட்டையாண்டான் (கொட்டையண்டான்), வாணரையன் (வாணதரையன், வாணதிரியன், வாணுதரையன், வாணுதிரியன், வீணுதரையன், வீணுதிரியன்), அம்மையத்தரையன் (அசையாத்துரையன்), துண்டன் (தொண்டன்), துண்டயன் (தொண்டையன்), துண்டராயன் (துண்டுராயன்), வீரப்பிரியன் (வீர்ப்பிலியன்), வீரங்கொண்டான் (வீரமுண்டான்), மல்லிகொண்டான், வல்லத்தரையன், வல்லாண்டான் (வல்லண்டான்), வல்லாளதேவன், வல்லாளி (வல்லாடி, வல்லிடி), விசராயன் (விசுவராயன்), விசயதேவன் (விசாதேவன்), தெலிங்கராயன், தெலிங்கதேவன், வழுவாளி (வழுவாடி), குழந்தைராயன், சோழன் (சோழவன்), சோழரையன் (சோழதரையன், சோழதிரியன், சோதிரையன்), சோழராசன், (சோமராசன்), சோழநாயகன் (சோமநாயக்கன், சோமணநாயக்கன்), சோழாட்சி (சோமாசி), சோழதேவன் (சோமதேவன்), சோழகோன் (சோழகன்), சோழப்பிரியன், சோழங்கொண்டான், சோழநாடன் (சோமநாடான்), குமாராண்டான் (குமரண்டான்), பாப்பரையன், பாப்புடையன், பாப்பிரியன், பாப்புவெட்டி (பாப்புரெட்டி), அத்திரியன், அத்திரியாக்கி (அத்திரிமாக்கி), அத்திப்பிரியன், காங்கயன் (காங்கியன்), பஞ்சநதரையன் (பஞ்சரையன்), காவிரிவெட்டி (காவெட்டி), பாண்டராயன், அரியதன், அரிப்பிரியன் (அரியப்பிள்ளை), விளப்பன் (விற்பனன்), சித்தாட்சி (சிற்றுட்சி), புத்திகழிந்தான் (புறில்கழிந்தான்), வளவன் (வளம்பன்), பசுபதி (பசும்படி), மண்ணிராயன் (மணிக்கராயன்), மண்ணியன் (மண்ணையன், மணியன்), அண்டப்பிரியன் (அண்ணுப்பிரியன், அண்ணுத்திப்பிரியன்), அண்டங்கொண்டான் (அண்ணுண்டான்), கோழியன் (கோழயன்), புலிராயன், புலிகொண்டான் (பிலிமுண்டான்), புலிக்கொடியன் (புலிக்குட்டியன்), புலிக்கொடியோன், கூராராயன் (கூராராசன், கூர்சான்), பாம்பாளி (பம்பாளி, வம்பாளி),

மயிலாண்டான் (மயிலண்டான்), சந்திரங்கொண்டான், சந்திர தேவன் (சம்பிரதேவன்), வெள்ளங்கொண்டான், வாஞ்சிராயன் (விஞ்சிராயன்), பொன்னங்கொண்டான் (பொன்னமுண்டான்), பொன்னுண்டான் (பொன்னுப்பூண்டான்), பொன்னுளி (பொன் னுனி). ஐயப்பிரியன் (ஐரைப்பிரியன்), வெட்டுவராயன் (வெட் டுவன்), பூதரையன் (போதரையன்), ஒடம்போகி (ஒட்டம் பிடிக்கி), சாளுவன், அடைக்கப்பட்டான், அடைவளைந்தான், சொக்கராயன் (சுக்கிரன்), உலகுடையன், உலகங்காத்தான், மாந்தையரையன் (மாந்தரையன்), கலியன், கலிராயன், கலி யாட்சி (கலிச்சி), ஈச்சங்கொண்டான் (ஈங்கொண்டான்), வெண் டன் (வென்றுன்), தக்கோலன், தக்கோலாட்சி (தாக்கலக்கி), அன்னவாயில்ராயன் (அன்னவாசல்ராயன்), பெரியாட்சி (பெரி ச்சி), பாலையன் (பாலியன்), பாலைராயன் (பால்ராயன்), பாலை யாண்டான் (பாலாண்டான்), பாலையுடையன் (பாலுடையன், பாவுடையன்), பாலைநாடன் (பாளுடன்), பாலைநாட்டான் (பா ளுட்டான்), கடம்பன், கடம்பையன், கடம்பராயன் (கடம்பரான்), பேரரையன் (பேதரையன்), ஆதனழிசி (ஆதாழி), கிள்ளி (கிளா க்கன்), கிள்ளிராயன் (கிளிராயன்), கிள்ளிகொண்டான் (கிளி கண்டான்), கிள்ளியாண்டான் (கிளியண்டான்), கண்டன், கண்ட ராயன் (கண்டவராயன்), கண்டர்கிள்ளி (கண்டர்சில்வி), கண்டப் பிரியன் (கண்டப்பிள்ளை), சிறுராயன் (சிறுநாட்டுராயன்), சிறு நாடன் (சிறுமடான்), சிறுப்பிரியன் (சிலுப்பி), நெடுவாண்டான் (நெடுவண்டான்), நெடுவாளி (நெடுங்காளி), நெடுந்தரையன் (நெடுத்தன்), நெடுங்கொண்டான் (நெடுமுண்டான்), ஆலத்த ரையன் (ஆவத்தயன்), ஆலங்கொண்டான் (ஆலத்தொண்டான்), ஆலம்பிரியன் (ஆளம்பிரியன்), வாலியன், வாலிராயன், ஏனுதி கொண்டான் (ஏத்தொண்டான்), ஏனுதிப்பிரியன் (ஏத்திப்பிரி யன், எத்திப்பிரியன், ஏத்திரிப்பிரியன்), ஏனுதிநாட்டுப்பிரியன் (ஏனுட்டுப்பிரியன், என்னுட்டுப்பிரியன்), சேண்ராயன் (செனவ ராயன்), சேணரையன் (சாணரையன்), சேணன் (சாணன், சாணை), சேண்கொண்டான் (சேனக்கொண்டான், சேனைகொண் டான்), சேணுண்டான் (சென்னண்டான்), சேண்பிரியன்

(சேண்டப்பிரியன்), சேணடன் (சேனைநாடான், சென்னடான்), குளந்தைராயன், இளங்கொண்டான் (இளமுண்டான்), தஞ்சைராயன் (தஞ்சிராயன்), சூரக்கோட்டையன் (சுரக்குடையன்), சூரப்பிரியன் (சுரப்பிடுங்கியன்), தென்னன், தென்னவராயன், தென்னரையன், தென்கொண்டான் (தெங்கொண்டான், தெங்கண்டான், தெங்கிண்டான்), தென்னப்பிரியன் (தின்னப்பிரியன், திண்ணப்பிரியன்), ஆக்காட்டரையன் (ஆக்காட்டியன்), சேந்தராயன் (சிந்துராயன்), சேந்தமுடையன் (சேந்தமடையான்), கோபாலன், மூவரையன்(மூரியன்,மூங்கிலியன்),விக்கிரமத்தான், விக்கிரமத்தரையன், அருண்மொழிதேவன் (அருமொழிதேவன்), விருதராசபயங்கரன் (விருதலான்), உய்யக்கொண்டான், கொங்கணன், நாடன் (நாடான், நாடாள்வான்), நாட்டரையன் (நாட்டரசன், நாட்டான்), கங்கன், கங்கைராயன், கங்கைநாடன் (கங்கநாடான்) மாவெற்றி (மாவெட்டி), தொண்டைமான், தொண்டையன், தொண்டைப்பிரியன் (தொண்டாப்பிரியன்), மாவலி, பல்லவன், பல்லவராயன், பல்லவாண்டான், காடவராயன், கொடிகொண்டான் (கொடிக்கமுண்டான்), கொடிராயன் (கொடிக்கிராயன், கொடிக்கவிராயன்), கொடியாளன் (கொடிபாலன்), சோழபாண்டியன் (பாண்டியன்), போரிற்கொளுத்தி (போரைக்கொளுத்தி), சயங்கொண்டான் (சேங்கொண்டான்), சோழகங்கன் (சோழங்கன்), சோழகங்கதேவன் (சோழங்கதேவன்), சோழகங்கநாடன் (சோழங்கநாடான்), சிங்களராயன் (சிங்களான்), சிங்களப்பிரியன் (சிங்கப்பிலியன்), சிங்களாளி (சிங்காரிக்கன்), உத்தமாண்டான் (உத்தமண்டான்), உத்தமங்கொண்டான் (உத்தமுண்டான்), உத்தமப்பிரியன் (யுத்தப்பிரியன்), பூக்கட்டி, சாளுக்கியன், கொல்லத்தரையன், கொங்கரையன், சோழசனகராசன் (சனகராயன்), போரிற்பொறுக்கி (பொரிப்பொறுக்கி), கடாரத்தலைவன் (கடாத்தலையன்), கடாரந்தாங்கி, சினத்தரையன், சுந்தரராயன் (சுந்தன், சுன்றையன்), கன்னகுச்சிராயன் (குச்சிராயன்), போரிற்சுற்றி (போரைச்சுற்றி), திராணி, கலிங்கராயன் (காலிங்கராயன்), பூழியர்பிரான்

(பூழியூரான்), சங்கரன், சங்கரராசன், சங்கரதேவன் (சங்கத்தியன்), கோனேரிகொண்டான் (கொன்னமுண்டான்), கோனேரிப்பிரியன் (கோதண்டப்பிரியன்), ஈழத்தரையன், ஈழங்கொண்டான், முடியைக்கொண்டான், கோட்டைசுருட்டி, கோட்டைமீட்டான், அதியமான், அதிகமான், களப்பாளன் (களப்பளான்), களப்பாளி (களப்பாடி), களந்தையாண்டான் (களந்தண்டான்), இருங்களன் (இருங்கள்ளன்), களன் (களாவன்), களத்துவென்ருன் (தெத்துவெண்டான்), களமுடையன் (களக்குடையன், சுக்குடையன், களக்கடையன், கிளாக்கடையன், கிளாக்கட்டையன், கிளாக்கன்), கொடும்பன், கொடும்பையன், கொடும்பைராயன், கொடும்பையரையன், கொடும்பைப்பிரியன் (கொடும்புலியன், கொடுப்புலியன், கொடும்பிரியன்), அருவாத்தலைவன் (அருவாத்தலையன்), அருவாநாடன் (அருமைநாடான், அருமடான்), அருவாநாட்டான் (அருமநாட்டான்), பூழிராயன், பூழிநாடன் (பூழிநாடான்), ஊமத்தரையன், ஊமத்தயன் (ஊரத்தியன்), ஊமப்பிரியன் (ஊரான்பிலியன்), ஊமத்தநாடான் (ஊரத்திநாடான்), சேதிராயன் (சேதிரான், சேதுரான்), சேதிநாடன் (சேதுநாடான்), முனையரையன் (முனைதரையன்), முனையதரையன் (முனைதிரியன்), முனைகொண்டான் (முண்டான்), முனையாளி, (முனுக்காட்டி), தண்டநாயகன், தண்டத்தலைவன் (தண்டத்தலையன்), படைத்தலைவன் (படைத்தலையன்), சேனைத்தலைவன் (சேனைத்தலையன்), சேனாதிபதி (சேனாபதி, சேனாதி, சேனாதிபன்), தானைத்தலைவன் (தானைத்தலையன்), தானாதிபதி (தானாபதி, தானாதி, தானாதிபன்), படையாட்சி (படையெழுச்சி), கருடி (காடி), திருக்கட்டியன் (திருக்காட்டியன்), மாளிகைசுற்றி (மாளிச்சுத்தி, மான்சுத்தி), போர்க்கட்டியன் (போக்காட்டி, போர்மூட்டி), சம்பிரதி" முதலிய பட்டமுடையோர் சூரியன் மரபோரேயாவர்.

"இராசராசசோழன், இராசேந்திரசோழன், இராசாதிராசசோழன், 'உத்தமசோழனாகிய' இராசேந்திரசோழன், ஆதிராசேந்திரசோழன், இராசமகேந்திரசோழன், 'கடாரங்கொண்ட' இராசேந்திரசோழன், 'இரட்டபாடிகொண்ட' வீரராசேந்திர

சோழன்" என்னும் அரசர்களுக்கு "உடையார்" என்னும் பட்டமிருத்தலினால் "உடையார்" என்னும் பட்டமுடைய "மலையமான், நத்தமான்" என்னும் சாதியார் அவ்வரசர்களின் மரபோரேயாவர். இதனை "சிலாசாதனம், செப்புச்சாதனம்" என்பவற்றினாலறியலாகும். "சேதிநாடு, முனைப்பாடிநாடு" என்பவற்றை ஆண்ட அரசர்களின் பட்டப்பெயர்கள் கள்ளர்களுக்கிருத்தலினாலும், "மலையமான், நத்தமான்" என்பவர்களுக்கின்மையாலும் திருக்கோவலூர்ப்புராணங் கூறுவது பொருத்தமுடையதன்று.

பிரமதேவன் "முகம், மார்பு, தொடை, பாதம்" என்னுமிடங்களில் முறையே தோன்றிய "பிரம, சத்திரிய, வைசிய, சூத்திர" என்னும் நான்கு சாதிகளுள் "சூரியன், சந்திரன், அக்கினி" என்னும் முத்தேவர்களின் மரபோரை "ஓதல், பொருதல், உலகோம்பல், ஈதல், வேட்டல், படைபயிறல்" என்னும் அறுதொழிலையுடைய இரண்டாஞ்சாதியாகிய "சத்திரியர்" என்று ஆரியநூற்கள் கூறுகின்றன. இதனையுணராத சிலர் நான்காஞ்சாதியாகிய சூத்திரரெனக் கருதியிருக்கின்றனர்.

சிவபெருமான் சுந்தர வேடங்கொண்டு, தாருகா வனத்து நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களுடைய மனைவியர்களிடஞ் சென்று "ஐயம்" ஏற்று அவர்களுடைய மனத்தைக் கவர்ந்த காரணத்தினாலும்; சீகாழியில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் மனதைக் கவர்ந்த காரணத்தினாலும் "கள்வன்" என்னும் பெயர் பெற்றார்.

"—உள்ளங் கவர் கள்வன்—"

என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரங் கூறுகிறது.

திருமால் மோகினி வேடங்கொண்டு தாருகாவனத்து நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களிடஞ்சென்று அவர்களுடைய மனதைக் கவர்ந்த காரணத்தினாலும்; கிருட்ணவதாரத்தில் ஆயர்ப்பாடியில் கோபியர்களுடைய மனதைக்கவர்ந்த காரணத்தினாலும் "கள்வன்" என்னும் பெயர் பெற்றார்.

"—கள்ள மாதவா கேசவா.—"

"—காரகத்தாய் கார்வானத்துள்ளாய் கள்வா.—"

"—விரிபொழி லரங்கந்தன்னுள் கள்வனூர் கிடந்தவாறும்.—"

என்று திருமொழிப் பிரபந்தங்கள் கூறுகின்றன.

சேர சோழ பாண்டியர்கள் முத்தமிழ்ப்புலவராகிய இரவலர்க்கு இல்லையெனாது கொடுத்து அவர்களுடைய மனதைக் கவர்ந்த காரணத்திலும்; போரிற் பகைவருடைய "உயிர், நாடு, நகர், பொருள், மனைவி வாகனம், படை, கொடி, முடி" முதலியவற்றைக் கவர்ந்த காரணத்தினாலும் "கள்வன்" என்னும் பெயர் பெற்றனர்.

(௧0௨) "இவனென் னலங்கவர்ந்த கள்வ னிவனெனது
நெஞ்ச நிறையழித்த கள்வனென்—றஞ்சொலாய்
செல்லு நெறியெலாஞ் சேரலர்கோக் கோதைக்குச்
சொல்லும் பழியோ பெரிது."

என்று முத்தொள்ளாயிரம்(சேரமானைக்) கூறுகிறது.

"வல்லக்கோன் தஞ்சைக்கோன் கள்வர் கள்வன்."

என்று சந்திரலேகை (செந்தலை) கல்வெட்டு (சோழனைக்) கூறுகிறது

(௬௧) "கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம்."

என்று அகநானூறு (சோழமரபிற் பிரிந்த தொண்டைமான் மரபோனைக்) கூறுகிறது.

(௩௪௨) "கள்வர் பெருமகன் தென்னன்."

என்று அகநானூறு (பாண்டியனைக்) கூறுகிறது.

மேற்கண்ட அரசர்களுக்கேற்பட்ட "கள்வன்" என்னும் பெயரானது மிகுதிபற்றி சோழர் மரபோர்களுக்கு வழங்கலாயிற்று. இதனையறியாத சிலர் கள்ளர்களைத் திருடர் என்கின்றனர். புதுக்கோட்டை இராச்சியத்தை ஆளும் அரசரையும்; "கண்டர் கோட்டை, கல்லாகோட்டை, பாதரங்கோட்டை, பாப்பாநாடு,

செல்லத்தூர், மதுக்கூர், சேந்தன்குடி, நெடுவாயில், புனவாயில், சிங்கவனம், பாலைவனம்" என்னும் பதினொரு பாளையதாரர்களாகிய குறுநில மன்னர்களையும்; நான்கு குதிரைபூட்டிய இரதத்தில் ஆரோகணஞ்செய்யும் பெருமைவாய்ந்த "பூண்டி வாண்டையார்" என்னும் குபேரரையும்; "ஒள்கடை(உக்கடை)தேவர்" என்னும் கற்பகத்தருவையும்; கணக்கிறந்த சீமான்களையும்; எண்ணிறந்த வள்ளல்களையும், அளவற்ற அம்பலவர்களையும்; கணக்கில்லாத கல்விமான்களையும்; பல்லாயிரம் பத்திமான்களையும்; எண்ணில்லாத பேரறிவாளர்களையுமுடைய பெருந்திரளான "கள்ள சாதியார்கள்" சிறுதிரளான இதர சாதியார்களிடம் எங்ஙனம் திருடக்கூடுமோ தெரியவில்லை. இக்காலத்தில் திருடித் தண்டனையடையும் எல்லாச்சாதியார்களுக்கும் "கள்ளச்சாதி" என்னும் பெயருண்டாகவின்மையால் கள்ளச்சாதியாரைத் திருடரென்று சொல்வது கற்புக்கரசியைக் "கள்ளி" என்பதுபோலாகும்.

"மனு" என்னும் அரசன் காலமுதல் "சோழன்" என்னும் அரசன் காலம் வரையில் "சூரியகுலம்" எனவும்; சோழன் காலந்தொடங்கி "இராசேந்திரசோழன்" என்னும் அரசன் காலம் இறுதியாக "சோழகுலம்" எனவும்; இராசேந்திர சோழன காலந்தொடங்கி "கோனேரிமேல்கொண்டான்" என்னும் அரசன் காலம் முடிவாக "இராசேந்திரகுலம்" எனவும் பெயர் வழங்கின. கோனேரிமேல்கொண்டான் கருநடதேயத் தாசனுகிய வீரஅரிஅரவுடையான் குமாரன் "வீரவிருப்பண்ண வுடையான்" என்பவனேடு பெரும்போர்செய்து, அரசிழந்து திருச்சிராப்பள்ளியை விட்டு நீங்கிய பின்னர் இற்றைக்கு ஐந்நூற்றுமுப்பத்திரண்டு ஆண்டுகளாக "இராச" என்னும் பதம் நீங்கி "இந்திரகுலம்" என்று வழங்குகின்றது. இதனையறியாத சிலர் தேவேந்திரன் கௌதமருடைய மனைவியாகிய அகலிகையைக்கூடியகாலத்தில் மூன்று குழந்தைகள் பிறந்ததாயும்; கௌதமர் அக்குழந்தைகளின் செய்கையை நோக்கி "கள்ளன், மறவன், அகம்படியன்" என்று பெயரிட்டதாயும்; அம்மூவர் மாபோர்க்கும் "இந்திரகுலம்" என்று குலப்பெயரும், "கள்ளர், மறவர், அகம்படியர்" என்று சாதிப்பெயரும் வழங்குவதாயும்;

அவர்களிற் சிலர் வேளாளரானதாயும்; அதனை முன்னிட்டு "கள்ளன் மறவன் கனத்ததொரு அகம்படியன்,—மெள்ள மெள்ளவந்து வேளாளனானான்" என்னும் பழமொழி வழங்கு வதாயும் கண்டபடி பிதற்றுகின்றனர். ஆரிய தேயத்திலே, மிதிலை நகர்க்குச் சமீபத்திலே, கங்காநதிக்கரையிலே, தன் மனைவியாகிய அகலிகையோடு தவம்புரிந்துகொண்டிருந்த கௌதமருடைய பன்னசாலைக்கருகிலே, தேவேந்திரன் ஒரு நாள் நள்ளிருளில் காகவடிவங்கொண்டு "கா, கா" என்று கத்தி னதாயும்; கௌதமர் விழித்து பூக்குடலையை எடுத்துக்கொ ண்டு கங்கைக்குச் சென்றதாயும்; தேவேந்திரன் கௌதமரைப் போல் வடிவங்கொண்டு அகலிகையைச் சேர்ந்ததாயும்; கௌத மர் கங்கை விழிக்காதிருப்பதையும், பூ மலராதிருப்பதையுங் கண்டு திரும்பி பன்னசாலைக்கு வந்ததாயும்; தேவேந்திரன் கௌதமர் வருவதையறிந்து, பூனைவடிவங்கொண்டு சென்றதா யும்; கௌதமர் தேவேந்திரனுடைய தேகத்தில் ஆயிரம் பெண் குறியுண்டாகவும், அகலிகை கல்லாகவும் சபித்ததாயும்; தேவே ந்திரனும் அகலிகையும் கௌதமரை வணங்கி மன்னிப்புக் கேட்டதாயும்; கௌதமர் மனமிரங்கி தேவேந்திரன் பெண் குறிகள் மற்றையோர்க்குக் கண்களாகத் தோன்றவும், அகலிகை இராமன் பாததூளிபட்டு கல்லுரு நீங்கவும் பிரதிசாபங்கொடுத் ததாயும் இராமாயணம் மிதிலைப்படலங் கூறுகிறது. மகப்பே றுண்டானதாகக் கூறவில்லை. "சூரியன் மரபோராகிய கள்ளர், சந்திரன் மரபோராகிய மறவர், கள்ளர் மரபிற்பிரிந்த (கோட் டைப்பற்று, இராசகுலம், இரும்புதலை, ஐவூர்) அகம்படியர்" என்பவர்கள் தங்களுடைய "அரசுரிமையையும், போர்த் தொழிலையும்" இழந்தபின்னர் வேறுதொழிற்செய்ய முடியாத வர்களாகி, நாளடைவிலே வேளாளருக்குரிய "குடியுரிமையை யும், உழவுதொழிலையும்" கைக்கொண்டு உழுதுண்பாராயினர். இக்காரணத்தினால் "கள்ளன் மறவன் கனத்ததொரு அகம் படியன்,—மெள்ள மெள்ள வந்து வேளாளனானான்" என்னும் பழமொழி வழங்கலாயிற்று. கௌதமர் தேவேந்திரனும் அகலி கையும் புணர்ச்சியிலிருக்கும்போதே வந்துவிட்டபடியாலும், வந்தவுடனே சாபங்கொடுத்தபடியாலும் மகப்பேற்றிற்குச்

சிறிதும்இடமில்லை. தொன்றுதொட்டு தமிழ்ப்பூமியில்தோன்றி, தமிழ்மொழியே பயின்று, தமிழ்மொழியே பேசும் பூர்வீகத் தமிழராகிய "கள்ளர், மறவர், அகம்படியர்" என்போரை ஆரியதேயத்திலே பிறந்து, ஆரியதேயத்திலே வளர்ந்து, ஆரிய மொழியே பயின்று ஆரிய தேயத்திலே தவம்புரிந்துகொண்டிருந்த பூர்வீக ஆரியராகிய கௌதமருடைய மனைவி அகலிகை வயிற்றில் தேவேந்திரனுக்குப் பிறந்தார்களென்பதும்; கௌதமர் ஆரியமொழிப் பெயரிடாது "கள்ளன், மறவன், அகம்படியன்" என்னும் தமிழ்மொழிப் பெயரிட்டாரென்பதும் "குதிரைக்குக் கொம்புண்டு" என்பதுபோலாகும்.

உலகின்கணுள்ள எண்பத்துநான்குநூறுயிரஞ் சீவபேதங்களுள் "எறும்பைவிடச் சிறிதும் யானையைவிடப் பெரிதும்" இல்லையென்பதற்கறிகுறியாக "எறும்புகடை யானைதலை எண்பத்துநான்குநூறுயிரஞ்சீவபேதம்" என்னும் பழமொழி வழங்குவதுபோல "தோட்டியைவிடத் தாழ்ந்தவர்களும், தொண்டைமானைவிட உயர்ந்தவர்களும்" இல்லையென்பதற்கறிகுறியாக "தோட்டி முதல் தொண்டைமான் வரையில்" என்னும் பழமொழி வழங்கலாயிற்று. "தொண்டைமான்" என்னும் பட்டம் கள்ளச்சாதியில் மாத்திரமிருத்தலினால் "கள்ளர்களே" உலகினையாண்ட முதற்சாதியார் என்பது திண்ணமேயாகும்.

மனு என்னும் அரனுக்குப் பின்னும், சோழன் என்னும் அரசனுக்கு முன்னும், மனு மரபில் தோன்றி "பெருவேளூர்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்ட "வேள்" என்னும் அரசன் மரபோர்க்கு "வேளிர்" எனவும்; வேள்மரபில் தோன்றி "நாகபட்டினம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்ட "நாகன்" என்னும் அரசன் மரபோர்க்கு "நாகர்" எனவும்; நாகன்மரபில் தோன்றி "புகார்ப்பட்டினம் என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்ட "முசுகுந்தன்" என்னும் அரசன் மரபில் தோன்றி "செம்பியபுரம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்ட "செம்பியன் (சிபி)" என்னும் அரசன் மரபோர்க்கு "செம்பியர்" எனவும்; செம்பியன்

மரபில் தோன்றி "மழவன்கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்ட "மழவன்" என்னும் அரசன் மரபோர்க்கு "மழவர்" எனவும்; மழவன் மரபில் தோன்றி "வாணுதரையன்பட்டினம்" என்னும நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக்கொண்ட "வாணன்" என்னும் அரசன் மரபோர்க்கு "வாணர்" எனவும் பெயர் வழங்கலா யிற்று. செம்பியன் மரபில்தோன்றிய "கோசலசிங்கன்" என்னும் அரசன் வடக்கே இமையமலைக்குச் சமீபத்தில் "கோசலநாடு" என்னும் தேயத்தை யுண்டுபண்ணிக்கொண்டு அரசாள்வானுயினுன். அன்றுமுதல் சூரியகுலம் இரண்டு பிரிவா யிற்று. இதனை மனு முதல் செம்பியனுகிய சிபி இறுதியாக "கலிங்கத்துப்பரணி" என்னும் தென்மொழி நூலும், "இராமா யணம், பாகவதம்" என்னும் வடமொழிநூற்களுங் கூறுதலி னுலும்; அவ்வரசர்கள் தென்மொழிப் பெயருடையோர்களா யிருத்தலினுலும்; அவர்கள் பெயர் கோசலநாட்டிற்கின்மையா லும் நன்கறியலாகும். ஆரியர்கள் "கோசலநாடு" உண்டான காலமுதல் நாளடைவிலே நந் தமிழ்த்தேயத்தில் குடியேறி "பஞ்சதந்திரம்" முதலிய கதைகளைப்போலவும்; தற்காலம் "தமிழ், ஆங்கில" மொழிகளில் எழுதும் நாவல்களைப்போலவும் ஆரியமொழியில் புராணங்க ளெழுதுவாராயினர்.

"சூரியன், சந்திரன், அக்கினி" என்னும் முத்தேவர்களின் மரபோர்களாகிய மூவரையர்கள் ஆதிகாலத்தில் ஒருவர்க்கொரு வர் "பெண்" கொடுத்துக்கொண்டனர். இடைக்காலத்தில் வெவ்வேறு பட்டப் பெயருடைய தங்கள் தங்கள் மரபிலுங் கொண்டு கொடுத்தனர். அரசிழந்தபின்னர் தங்கள்தங்கள் மரபி லேயே கொண்டு கொடுக்கின்றனர். இதனை கங்கைகொண்ட சோழன் மகள் குந்தவையை பாண்டியன் மணஞ்செய்து கொண் டதாக கலிங்கத்துப்பரணி கூறுதலினுலும்; குலோத்துங்க சோழன் பாண்டியன் மகளை மணஞ்செய்துகொண்டதாக ஒட்டக் கூத்தர் சரித்திரங் கூறுதலினுலும்; நெடுமாற பாண்டியன்

மனைவியாகிய மானியாரை சோழன் மகள் என்று தேவாரங் குறிப்பித்தலினாலும்; உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னி சோழன் அழுந்தூர்வேளிர் மகளையும், கரிகாற்பெருவளவசோழன் நாங்கூர் வேளிர் மகளையும் கொண்டதாக தொல்காப்பியம் அகத்திணையியல் ௩௰-ம் சூத்திரம் நச்சினார்க்கினியருரையுணர்த்தலினாலும்; சூரவாதித்தசோழன் நாகர் மகளைக்கொண்டதாக கலிங்கத்துப்பரணி கூறுதலினாலும்; கரிகாற்பெருவளவசோழன் நாகர்மகளைக்கூடி "தொண்டைமான்" என்போனைப் பெற்றதாக தொண்டைமண்டல சதகவுரை கூறுதலினாலும்; கண்டராதித்த சோழன் மனைவியாகிய செம்பியன்மாதேவியாரை மழவன் மகளெனவும், இராசராசசோழன் மனைவியாகிய புவனமுழுதுடையாளை வாணன்மகளெனவும் கல்வெட்டுகள் கூறுதலினாலும்; இக்காலத்தில் சூரியன் மரபோராகிய கள்ளர்கள் தங்கள் மரபில் வெவ்வேறு பட்டப்பெயருடையோரிடத்தில் கொண்டு கொடுத்தலினாலும்; சந்திரன் மரபோராகிய மறவர்கள் தங்கள் மரபோரிடத்தில் கொண்டு கொடுத்தலினாலும்; அக்கினிமரபோராகிய வன்னியர் அல்லது பொறையரென்போர் தங்கள் மரபோரிடத்தில் கொண்டு கொடுத்தலினாலும் நன்கறியலாகும்.

சூரியன் மரபோர் ஆதிகாலத்தில் இரத்தினங்களினால் "திருமணமண்டபம் (மணவரை)" அமைத்து "வாழை, கமுகு, கொடி, மகரதோரணம், பூரணகும்பம்" முதலியவைகளினால் அலங்காரஞ்செய்து; பொன்னாற்செய்த "ஆயிரப்பெருந்தகழி (ஆயிரப்பெருந்தாழி)" என்னுந் திருவிளக்கேற்றி; ஒருபுறம் யானையும், ஒருபுறம் குதிரையும், ஒருபுறம் மயிலும், ஒருபுறம் ஒட்டையும் தாங்குகின்ற "பந்தமுட்டி" என்னும் பீடத்தில் "சித்திரம்" எழுதப்பெற்ற "சால், கரகம் (குடம்), கும்பம் (சிகரம்)" என்பவற்றை ஒன்றின்மேலொன்றாக முறையே அடுக்கி, அம்மூன்றையும் "அயன், மால், ஈசன்" என்னும் மும்மூர்த்தியாகிய சிவபெருமானாகப்பாவித்துப் பூசனைசெய்து; "பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை,

காடிகை, திமிலை, குடமுழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தடாரி, அந்தரி, முழவு, சந்திரவளையம், மொந்தை, முரசு, கண்விடு தூம்பு, நிசாளம், துடுமை, சிறுபறை, அடக்கம், தகுணிச்சம், விரலேறு, பாகம், உபாங்கம், நாழிகைப்பறை, துடி, பெரும்பறை" முதலிய தோற்கருவிகளும்; "காகளம், காளம், கொம்பு, நாகசுரம், புல்லாங்குழல், சங்கு" முதலிய துளைக்கருவிகளும்; "தாளம்" முதலிய கஞ்சக்கருவிகளும்; "வீணை" முதலிய நரம்புக்கருவிகளுமாகிய வாச்சியங்கள் முழங்க மாதர் குரவையிட; "மணமகனையும், மணமகளையும்" மங்கலநீராட்டி, "பட்டு, பீதாம்பரம், கவசம், முடி, மகரகுண்டலம், வாகுவலையம், கடயம், காப்பு, மோதிரம், பதக்கம், சரப்பளி, நாகபடம், பூச்சிக்கூடு, தண்டொட்டி, நெற்றிச்சுட்டி, உச்சிச்சுட்டி, சடைப்பில்லை, வயிரமாலை, முத்துமாலை, பவளமாலை, ஒட்டியாணம், தண்டை, சிலம்பு, பாதசரம், காலாழி, பீலி" முதலிய ஆடையாபரணங்கள்; "கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ" முதலிய பூமாலைகள்; "சந்தனம், புனுகு, சவாது" முதலிய வாசனுதிரவியங்கள் என்பவைகளால் அலங்காரஞ்செய்து, முற்கூறிய மணவரையில் எழுந்தருளப்பண்ணி, கங்கணங்கட்டி, பொற்கம்பிக்காரையில் தாலியைக்கோத்து, மணமகன் கையிற்கொடுத்து, மணமகள் கழுத்தில் (நெஞ்சுக்குழியாகிய மனசில் தாலியிருக்கும்வண்ணம்) தரிப்பித்து, இருவரையும் சிவபெருமானை வலம்வந்து வணங்கச்செய்வித்து திருமாளிகையினுள் எழுந்தருளப்பண்ணி வாழ்த்துக்கூறுவர். அராசாணிக்காலென்பது பந்தமுட்டி ஆடாவண்ணம் அதற்குதவியாக சமீபத்தில் நடுவது. ஆரியர் நம்முடைய தேயத்தில் குடியேறியபின்னர், ஆரியதேய வழக்கம்போல் "நவக்கிரக பூசை செய்தல், ஓமம்வளர்த்தல், அம்மிமிதித்தல், அருந்ததிபார்த்தல்" முதலிய கோட்பாடுகளுண்டாயின. அரசிழந்தபின்னர் பொற்கம்பிக்காரை செய்யத்தகுதியற்றவர்கள், நூற்கயிற்றில் தாலியைக்கோத்து, முன்னோர் அணிந்ததானமாகிய உட்கழுத்தில் கட்டிவந்தனர். தற்காலத்தில் பெரும்பகுதியோர் முன்னோர் வழக்கத்தைக் கைவிட்டு, அரசபரம்பரையினர் என்பதை அறியா

தவர்களாகி "முலைப்பாற்கூலி முப்பத்திரண்டு பொன் (ஐந்து ரூபாய்)" பாலிற்போடும் வழக்கத்தை நிறுத்தி இதர சாதியாரைப்போல் "பரிசங்கொடுத்தல், நகைபோடல், பந்தமுட்டி வைக்காதிருத்தல், அரசாணிக்காலுக்கு ஒருபக்கத்தில் சாலையும் மற்றொரு பக்கத்தில் குடத்தையும் வைத்தல், பொற்சரட்டில் அல்லது நூற்கயிற்றில் தாலியைக்கோத்துத் தழையக்கட்டல், வெள்ளாழசாதியென்று சொல்லல், பிள்ளை அல்லது சேர்வை என்று பட்டம் வைத்துக்கொள்ளல்" முதலிய துற்பழக்கத்தைக் கைக்கொண்டு, சாதிக்குத் தாழ்வையுண்டாக்குகின்றனர். மேற்கண்டவற்றையெல்லாம் கள்ளர் நாடுகளில் "பந்தமுட்டி என்னும் பீடத்தில் சால்குடம் சிகரம் என்பவற்றை ஒன்றின் மேலொன்றாக முறையே வைத்தல், பொற்கம்பிக்காரையில் தாலியணிதல், உட்கழுத்தாகிய நெஞ்சுக்குழியில் தாலியணிதல், முலைப்பாற்கூலி முப்பத்திரண்டு பொன் அதாவது முப்பத்திரண்டு பணமாகிய ஐந்து ரூபாய் பாலிற்போடல்" முதலிய வழக்கங்கள் இன்று மிருத்தலினால் நன்குணரலாகும். சிலர் உட்கழுத்தில் தாலியணிவதை இழிவாகக்கூறுகின்றனர். இங்ஙனங் கூறுவோர் பொற்கம்பிக்காரையில் அணியுந்தாலி, உட்கழுத்தாகிய நெஞ்சுக்குழியிலிருக்கு மென்பதையும்; நெஞ்சுக்குழியில் தாலியிருந்தால் கணவன் ஞாபகம் மனதைவிட்டு நீங்காதென்பதையும் நன்கறிவார்களாக. அன்றியும் சூரியன் மரபோனும் கள்ளர் முன்னோன் மரபோனுமாகிய "அரிச்சந்திரன்" என்னும் அரசன் காசியில் வீரபாகுக்கடிமையாகி, அவ்வீரபாகைப்போல் வேடங்கொண்டு, மயானங்காக்குங்காலத்தில் பாம்புகடித்து இறந்துபோன தன் மகனைத் தகனஞ்செய்யும்பொருட்டு இராத்திரியில் எடுத்துக்கொண்டு மயானத்துக்கு வந்த (காலகண்டையர் வீட்டுவேலைக்காரியாக அடிமைப்பட்டிருந்த) சந்திரமதி கழுத்திலிருந்த தாலியை முற்கூறிய அரிச்சந்திரன் கண்டதாக "அரிச்சந்திரபுராணங் கூறுவதால்" அரசபரம்பரையோர் பொற்கம்பிக்காரையில் தாலியணிவரென்பதும், அந்தத்தாலி உட்கழுத்தாகிய நெஞ்சுக்குழியிலிருக்குமென்பதும் சொல்லாமலே விளங்கும். ஆகையால் கள்ளர்கள் யாவரும் "பந்தமுட்டியையும், கம்பிக்காரையையும்" மறந்துங் கைவிட

லாகாது. ஒரு சமயம் கைவிடுவார்களாயின் அரசபரம்பரையி னின்று நீங்கியோராவது நிச்சயமேயாகும். பழமையைக் கை விடலாகாது! பழமையைக் கைவிடலாகாது!! பழமையைக் கைவிடலாகாது!!!

கள்ளர்கள் தங்களைக் "கிளைவழிக்கள்ளர், அம்புநாட்டுக் கள்ளர், செங்களநாட்டுக் கள்ளர், மீய்செங்கிளிநாட்டுக் கள்ளர், ஏழுநாட்டுக் கள்ளர், நாலுநாட்டுக் கள்ளர், பிரம்பூர்நாட்டுக் கள்ளர், மாகாணக் கள்ளர்" என்று பலவகுப்பாக்கிக்கொண்டு ஒவ்வொருவகுப்பாரும் தங்கள் தங்கள் வகுப்பிலேயே கொண்டு கொடுத்து தங்கள் தங்கள் வகுப்பையே உயர்த்திக் கூறுகின் றனர். இங்ஙனங் கூறுவதில் உயர்ந்தவர் யாவர்? தாழ்ந்தவர் யாவர்? எல்லாச்சாதியும் ஒன்றாகக்கொண்டுகொடுத்து, உண்டு வுறங்கக்கருதும் இக்காலத்தில் தம் வகுப்பை உயர்த்தியும் பிற வகுப்பைத் தாழ்த்தியுங் கூறலாமா? எல்லாக் கள்ளர்களும் ஒரேவகுப்பினரல்லவா? முன்னேற்றமடைவதற்கு இஃது அழ காகுமா? முன்னேற்றம் அடையவேண்டுமானால் "பழமை, படி ப்பு, ஒழுக்கம், நீதி, சாதியபிமானம், கைத்தொழில், தேவபத்தி" என்பவற்றைக் கைவிடலாகாது. கைவிட்டால் முன்னேற்றம் அடையமுடியாது.

பிரம்பூர் நாட்டுக்கள்ளர்கள் நாடன்வீட்டிலே நாடன்கொண்டு கொடுப்பதாயும்; "நாடன்பாதி, நாடுபாதி" எனவுங் கூறுகின்ற னர். "நாடன்" என்னும் பட்டமுடையோர் பலர். அதாவது "வேணாடன், நாகநாடன், மழநாடன், சோணாடன், சோழ நாடன், சோழகங்கநாடன், காசிநாடன், சிறுநாடன், அருவா நாடன், பாலைநாடன், சக்கரநாடன், கத்தரிநாடன், சேதிநாடன், பூழிநாடன், ஊமத்தநாடன், சேணாடன், நாடன்" என்பன. "நாடன்" என்னும் பட்டமுடைய ஒவ்வொருவரும் "இன்ன நாடன்" என்று தெரிந்துகொள்ளல் வேண்டும். அங்ஙனந் தெரிந்துகொள்ளாது "நாடன்பாதி, நாடுபாதி" என்போர் பட் டப்பெயரின் முதலிழந்தோராவர்.

கள்ளர்கள் தொன்றுதொட்டு இறக்கும் பிணங்களில் ஆண் பாலரைப் பச்சைத்தேரிலும், பெண்பாலரைப் பச்சைப் பல்லக்கி

லும் "பறை, கொம்பு, எக்காளம், சின்னம், சங்கு" முதலிய வாச்சியங்கள் ஒலிக்க, சுடுகாட்டுக்குக் கொண்டுபோய் விறகு சதையில் ஏற்றுவித்துத் தீயிட்டுத்தகிப்பர்.

"ஐயினுன்மிடறடைப்புண்டாக்கைவிட்டு
ஆவியார்போவதுமேயகத்தார்கூடி
மையினுற்கண்ணெழுதிமாலைசூட்டி
மயானத்திலிடுவதன் முன்மதியஞ்சூடும்
ஐயனுர்க்காளாகியன்புமிக்கு—"

"எத்தாயரெத்தந்தை யெச்சுற்றத்தார்
எம்மாடுசும்மாடாமேவர்நல்லார்
செத்தால்வந்துதவுவாரொருவரில்லை
சிறுவிறகாற்றீமூட்டிச்செல்லாநிற்பர்—"

"மணமென மகிழ்வர்முன்னே மக்கடாய்தந்தைசுற்றம்
பிணமெனச்சுடுவர்பேர்த்தே பிறவியை வேண்டேனுயேன்—"

என்று தேவாரமும்;

"வாயொருபக்கம்வாங்கிவலிப்பவார்ந்தநீர்க்குழிக்கண்கள்மிழற்றத்
தாயொருபக்கம்தந்தையொருபக்கந்தாரமுமொருபக்கமலற்றத் [சுற்ற
தீயொருபக்கஞ்சேர்வதன்முன்னஞ்செங்கண்மாலொடுஞ்சிக்கெனச்
மாயொருபக்கம்நிற்கவல்லார்கட்காவதண்டத்தினுய்யலுமாமே—"

என்று திருமொழிப்ரபந்தமும்;

"நாட்டுக்குநாயகனம்மூர்த்தலைமகன்
காட்டுக்குச்சிவிகையொன்றேறிக்கடைமுறை
நாட்டார்கள்பின்செல்ல முன்னேபறைகோட்ட
நாட்டுக்குநம்பிநடக்கின்றவாறே."

"ஆர்த்தெழுசுற்றமும்பெண்டிருமக்களு
மூர்த்துறைகாலேயொழிவாரொழிந்தபின்
வேர்த்தலைபோக்கிவிறகிட்டெரிமூட்டி
நீர்த்தலைமூழ்குவர்நீதியிலோரே."

என்று திருமந்திரமும்;

"அத்தமும்வாழ்வு மகத்துமட்டே விழியம்பொழுக
எத்தியமாதருந் தெருவீதிமட்டே விம்மிவிம்மியிரு
கைத்தலமேல் வைத்தழுமைந்தருஞ் சுடுகாடுமட்டே
பற்றித்தொடரு மிருவினை புண்ணியபாவமுமே"

"கட்டியணைத்திடும் பெண்டிருமக்களுங் காலதச்சன்
வெட்டிமுறிக்கு மரம்போற்சரீரத்தை வீழ்த்திவிட்டால்
கொட்டிமுழக்கி யழுவார் மயானங்குறுகியப்பால்
எட்டியடியவைப்பரோ விறைவா கச்சி யேகம்பனே."

என்று பட்டினத்தடிகள் பாடலுங் கூறுகின்றன.

சிவபெருமான் மயானத்தில் தகனஞ்செய்த சாம்பரினின்று சங்கார தாண்டவஞ் செய்தருளுவர். அவர் சரீரம் முற்றும் சாம்பர்ப் பறந்து தோய்ந்து உத்தூளனமாகும். அக்காலத்தில் அவர்க்கு "மயானவுருத்திரன்" என்று பெயர். இக்காரணத்தினால் அவர்க்கு "சுடலையாடி, ஈமத்தாடி" என்னும் பெயர்களுண்டாயின.

"தோடுடையசெவியன்விடையேறியோர்தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிபூசி—"

"—பொடியேறுதிருமேனிபொலிந்துதோன்றும்
பொழில்திகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே."

"—துடியனையவிடைமடவாள்பங்காவென்றுஞ்
சுடலைதனிநடமாடுஞ்சோதியென்றும்—"

என்று தேவாரமும்;

"கோயில்சுடுகாடுகொல்புலித்தோனல்லாடை
தாயுமிலிதந்தையிலிதான்றனியன்காணேடீ—"

என்று திருவாசகமுங் கூறுகின்றன.

மேற்கண்டவற்றை யறியாதசிலர் "கைப்பாடையிற் பிணமெடுத்தல், பறையடிக்காது பிணமெடுத்தல்" முதலியவற்றைக்கைக்கொண்டிருக்கின்றனர். வேறுசிலர் "புதைப்பது நான்காம்பதவி" எனக்கருதிப் புதைத்துவிடுகின்றனர். ஞானியாயிருந்தால் புதைக்கலாம். புதைத்தவிடத்தில் "திருக்கோயிற்கட்டி, சிவலிங்கம் அமைத்து" பூசனைசெய்தல்வேண்டும். இல்லையேல் தகனஞ்செய்தல் வேண்டும். ஆண்பாலரைப் பச்சைத்தேரிலும், பெண்பாலரைப் பச்சைப் பல்லக்கிலும், பறையடித்து எடுக்கவேண்டுமென்பதை மறந்துவிடலாகாது. மறப்போர் அரசபரம்பரையினின்று நீங்கியோராவர். தம்மை அரசபரம்பரையினர் அல்லவென்று நினைப்போர் எப்படியுஞ் செய்யலாம். அரசபரம்பரையினரல்லாத வேறுசாதியாருடைய நடை வுடை பாவனைகளைக் கைக்கொண்ட காரணத்தினால் "சாதியபிமானத்தை மறந்து, வீரத்தையிழந்து" தாழ்வையடைந்து வறுமையுற்றனர். கணவனிழந்த பெண்கள் தாலி கோத்திருந்த கம்பிக்காரையைப் பட்டைக்காரையாக்கிக் கழுத்தில்அணிந்துகொள்வது வழக்கம். இதனை நாடுகளில் இன்றுங் காணலாகும்.

கள்ளர்கள் "கருப்பை, முட்டை, நிலம், வியர்வை" என்பவற்றினின்று நால்வகைத்தோற்றமாய் "தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்" என்பனவாகிய எழுவகைப்பிறப்பாய் "தேவர்பதினுன்குநூறுயிரம்*, மக்கள் ஒன்பது நூறுயிரம், விலங்கு பத்துநூறுயிரம், பறவை பத்துநூறுயிரம், ஊர்வன பதினொருநூறுயிரம், நீர்வாழ்வன பத்துநூறுயிரம், தாவரம் இருபதுநூறுயிரம்" என்னும் எண்பத்துநான்குநூறுயிரஞ்சீவபேதமாய் "ஆண், பெண்" என்ற இரண்டு சாதியை உலகம் நடைபெறும்பொருட்டு "கடவுள்" உண்டாக்கினுரென்பதையும், அவ்விருசாதிக்கும் "ஆகாரம், நித்திரை, மைதுனம்" என்பன பொதுவென்பதையும் நன்குணர்ந்து "கலியாணமாகாத ஆணுக்கு கலியாணமாகாதபெண்ணையும், மனைவியிழந்த ஆணுக்கு கணவனிழந்த பெண்ணையும்" தொன்றுதொட்டு கலியாணஞ்செய்துவந்தனர். தாரமிழந்த ஆணுக்கு தாலியிழந்த பெண்ணைக் கலியாணஞ்செய்துவந்தகாரணத்தினுல் "தாரமிழந்தவனுக்குப் பொங்கிப்போடத் தாலியிழந்தவளிருக்கிறுள்", என்ற பழமொழி வழங்கலாயிற்று. தாரமிழந்த ஆணுக்குத் தாலியிழந்த பெண்ணைக் கலியாணஞ்செய்வதால் "வியபசாரஞ்செய்தல், கருச்சிதைத்தல், சிசுவதைத்தல், பொய்சொல்லல், துன்மரணமடைதல், கொலைசெய்தல், மானங்கெடுதல், ஈனமடைதல்" முதலிய பாவத்தொழில்கள் சிறிதுமின்றி, மக்கட்பேற்றையடைந்து, வயது முதிர்ந்த காலத்தில் அம்மக்களாற் சுகசீவனஞ்செய்து, மறுமையிற் சுவர்க்கலோகமடைவர்.

தற்காலம் கள்ளர்களிற் சிலர் இதரசாதியார்களைப்போல் "ஆகாரம், நித்திரை, மைதுனம்" என்பவற்றை ஆண்களுக்குரியது போலவும், பெண்களுக்கில்லாதது போலவும் நினைத்து "கலியாணமாகாதவர்களும், மனைவியிழந்தவர்களும்" ஆகிய ஆண்களுக்கு கலியாணமாகாத பெண்களைக் கலியாணஞ்செய்வதும்; கணவனிழந்தபெண்களுக்கு "தலையைச்சிரைத்தல், வெள்ளுடைகொடுத்தல்" முதலிய ஆக்கினை செய்வதும் நீதியெனக்

---

* தேவர் பதினுறுநூறுயிரம், தாவரம் பதினெட்டுநூறுயிரம் எனவும் கூறும்.

கொண்டிருக்கின்றனர். "மனைவியரிழந்தோர் மாலையிடுவதும், ஆடவரிழந்தோர் ஆக்கினைப்படுவதும்" நீதியாகுமா? "தாரமிழந்தோரைவிடத் தாலியிழந்தோர்" எந்த வகையில் தாழ்ந்தோராவர்? கணவனையிழந்தவள் காமநோய் இழந்தவளா? மஞ்சளிழந்தவள் மன்மதநோய் இழந்தவளா? வெள்ளையுடுத்தவள் வேளுபாதியிழந்தவளா? மயிர்நீங்கினால் மன்மதோபாதிநீங்குமா? மனைவியரையிழந்த ஆண்கள் வாலிபத்தில் காமநோயினாலும், முதிர்ந்த வயதில் பசிநோயினாலும் வருந்துவதுபோல கணவரையிழந்த பெண்கள் வாலிபத்தில் காமநோயினாலும், முதிர்ந்த வயதில் பசிநோயினாலும் வருந்துவர். மனைவியரையிழந்த ஆண்கள் மனைவியரையடைந்தால் வாலிபத்தில் சிற்றின்பசுகத்தையும், முதிர்ந்த வயதில் பேரின்ப சுகத்தையும் அடைவதுபோல கணவரையிழந்த பெண்கள் கணவரையடைந்தால் வாலிபத்தில் சிற்றின்ப சுகத்தையும், முதிர்ந்த வயதில் பேரின்ப சுகத்தையும் அடைவர். தாலியிழந்த பெண்களுக்கு "கணவனிழந்த கவலையொருபுறம், கூந்தலிழந்த கொடுமையொருபுறம், ஆபரணமிழந்த அயர்ச்சியொருபுறம், மஞ்சளிழந்த மயக்கமொருபுறம்" எந்தத் துன்பத்திற்கீடுசெய்யமுடியும்? ஆண்களைவிடப் பெண்களுக்குக் "காமநோய்" எண்மடங்கதிகமன்றோ? காமநோயினால் வியபசாரமும்; வியபசாரத்தினால் சிசுவதைப்பாவமும்; சிசுவதைப்பாவத்தினால் மானஈனமும்; மானஈனத்தினால் இகத்தில் துன்பமும் பரத்தில் நரகவாதையுமுண்டாகும். மனைவியரையிழந்த ஆண்களுக்கு மாதரிச்சையுண்டாவது போல், கணவரையிழந்த பெண்களுக்கு காதலரிச்சையுண்டாகுமல்லவா? மனைவியரிழந்த ஆண்களையும், கணவரிழந்த பெண்களையும் சமமாகப்பாவிப்போர் இவ்வுலகில் புகழையும் அவ்வுலகில் சுவர்க்கத்தையுமடைவர். தாரமிழந்த ஆண்களை உயர்வாகவும், தாலியிழந்த பெண்களைத் தாழ்வாகவும் வைப்போர் இவ்வுலகில் ஈனத்தையும், அவ்வுலகில் நரகத்தையுமடைவர்.

பெண் கொடுக்குங்காலத்தில் "தகப்பன் படித்தவனுக்கும், தாய் பணக்காரனுக்கும், பந்துக்கள் நல்லகுலமுடையவனுக்கும், கொடுக்கவேண்டுமென்பர். அந்தப்பெண் "அழகுடையவனை" அடையவேண்டுமென்பள். இக்காரணத்தினால் "கை

நிறைந்த பணத்தைப்பார்க்கிலும், கண்ணிறைந்த கணவனேயதிகம்'' என்னும் பழமொழி வழங்கலாயிற்று. "அழகீனனுக்கும், நோயாளனுக்கும், முதிர்ந்தவனுக்கும், மூடனுக்கும்" பெண் கொடுக்கில் அப்பெண்ணினால் "பிறந்த குலத்துக்கும், புகுந்த குலத்துக்கும்'' ஈனமுண்டாகும் "நல்லகுலமுடையவனும், படித்தவனும், பெண்ணுக்கேற்றவனும்'' உள்ளவனுக்குப் பெண் கொடுக்கல்வேண்டும். பணத்தையுத்தேசித்து "மூடனுக்கும், நோயாளனுக்கும், கிழவனுக்கும், அங்கஈனனுக்கும்'' பெண்கொடுப்பது, அருமையாகப்பெற்றுவளர்த்த பெண்ணை ஆற்றுவெள்ளத்தில் தள்ளுவதுபோலாகும். மணமகளைவிட மணமகன் பத்துவயது முதிர்ந்தவனாயிருத்தல் நலமாகும். ஆண்கள் "அறிவில்லாதவளையும், நோயுடையவளையும், வயது முதிர்ந்தவளையும்'' கலியாணஞ்செய்ய உடன்படுவார்களா? அதுபோலவே பெண்களுக்குந் தோன்றுமல்லவா? வாலிபப்பெண்கள் எக்காரணத்தை முன்னிட்டும் பந்திபரிமாறலாகாது. சமையக்காரர் அல்லது வயதுமுதிர்ந்த பெண்கள் பந்திபரிமாறுவது வழக்கம். இதனை நாடுகளில் ஒவ்வொரு குடும்பத்திலுமுள்ள கிழவிகள் அகப்பையைப் பிறரிடத்தில் கொடுக்கமாட்டேனென்று சொல்வதனலறியலாகும். அங்ஙனஞ்சொல்வது மானத்தைக்காப்பாற்றும்பொருட்டேயாகும்.

கள்ளர்களிற் பெரும்பாலர் படிக்காமையால் வறுமையுற்று முன்னேற்றமடையாமல் விழிக்கின்றனர். படிக்காத குற்றத்திற்காக ஒருவகைக்கண்டிப்பு ஏற்படுத்திக் கட்டாயப்படுத்திப் படிக்கச்செய்தாலொழிய வறுமைநீங்கித் திருத்தமடைந்து முன்னேற்றமடைவார்களென்று நம்புவதற்குச் சிறிதும் இடமில்லை.

கள்ளர்கள் யாவரும் தங்கள் இனத்தவர்களாகிய "செங்கண்சோழன் (கோச்செங்கட்சோழநாயனர்), புகழ்ச்சோழன் (புகழ்ச்சோழ நாயனர்), ஐயடிகள் காடவர்கோன் (ஐயடிகள் காடவர்கோனயனர்), கழற்சிங்கன் (கழற்சிங்க நாயனர்), களப்பாளன் (கூற்றுவநாயனர்), இடங்கழி (இடங்கழிநாயனர்), மெய்ப்பொருள் (மெய்ப்பொருணயனர்), நரசிங்கமுனையரையன் (நரசிங்கமுனையரையநாயனர்), திருமங்கைமன்னன் (திருமங்கையாழ்வார்)'' என்பவர்களுக்கு அவரவர்களுடைய திருநட்சத்திரதினத்தில் குருபூஜைசெய்வது பெரும்பேறாகும்.







சிவமயம்.

# சூரியகுலக் கள்ளர் சரித்திரம்.

## சூரியகுல வரலாறு.

திருமாலின் மகன் பிரமன்; பிரமதேவன் மகன் மரீசி; மரீசிமுனிவன் மகன் காசிபன்; காசிபமுனிவன் மகன் சூரியன்.

(க) ஆதிமாலமல நாபிகம லத்தயனுதித்
தயன்மரீசியெனு மண்ணலை யளித்தபரிசுங்
காதல்கூர்தரு மரீசிமக னாகிவளருங்
காசிபன்கதி ரருக்கனை யளித்தபரிசும்.

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

மனு (சக்ரவர்த்தி)—சூரியன்மகன்; "ஆரூர்" என்னும் (தேவாரம்பெற்ற சிவதல) நகரத்தை யூண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; எண்ணிறந்த யாகங்களைச்செய்தவன்; ஆவின் கன்றின்மேல் தேரைச்செலுத்திக்கொன்ற தன் மகனாகிய இக்குவாகுவைத் தேர்க்காலிலிட்டு அரைத்துக் கொன்றவன்; (பரமசிவன் திருவருளினால் "இக்குவாகுவும், ஆவின்கன்றும், மந்திரியும்" உயிர்பெற்றெழுந்தனர்).

(உ) அவ்வருக்கன்மக னாகிமனு மேதினிபுரந்
தரிய காதலனை யாவினது கன்றுநிகரென்
றெவ்வருக்கமும்வியப்ப முறை செய்தகதையு
மிக்குவாகு விவன்மைந்த னெனவந்தபரிசும்.

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

விட்டுணு மரபில் சூரியனும்; சூரியன் மகனாக இவனும் தோன்றிய காரணத்தினால் இவன்மரபோர்க்கு "மால், சூரியன்" என்னும் பட்டப்பெயர்களும், "சூரிய குலம், மனுகுலம்"

என்னும் குலப்பெயர்களும் வழங்கலாயிற்று. இவனுடைய நீதியைச் சோதிக்கும்பொருட்டு "பரமசிவன் ஆவின் வடிவங் கொண்டும், இயமன் கன்றின் வடிவங்கொண்டும் வந்தனர்".

"ஈசன் பசுவாகி இயமனிளங் கன்றாகி
வீசுபுக ழாரூரின் வீதிவந்தா ரம்மானை
வீசுபுக ழாரூரின் வீதிவந்தா ராமாகில்
காசளவு பால்தான் கறக்குமோ வம்மானை
கன்றை யுதைகாலி கறக்குமோ வம்மானை."

என்று மூவரம்மானை கூறுகிறது.

ஆரூர்த் திருநகரமுஞ் சிவதலமு முண்டானகாலத்தைத் தேவாரம் பின்வருமாறு கூறுகிறது :—

ஒருவனு யுலகேத்த நின்ற நாளோ
ஓருருவே மூவுருவ மான நாளோ
கருவனாய்க் காலனைமுன் காய்ந்த நாளோ
காமனையுங் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனாய் மண்ணும்விண்ணுந் தெரித்த நாளோ
மான்மறிக் கையேந்தியோர் மாதோர் பாகம்
திருவினள் சேர்வதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளே.

**இக்குவாகு** :—மனுவின் மகன்; "தேவூர்" என்னும் (தேவாரம் பெற்ற சிவதல) நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "தேவராயன், தேவாண்டான், தேவன்" எனவும் வழங்கும். "தேவன்குடி, தேவனூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "தேவன்குடி, தேமங்கலம், தேவராயன் பேட்டை, தேவராய நல்லூர், தேவனூர், தேவதானம்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "தேவராயன் (தேசிராயன்), தேவாண்டான், (தேவண்டான்) தேவன்" என்னும் பட்டப் பெயர்கள் வழங்குகின்றன.

**நல்லுத்தரன்** :—இக்குவாகு மகன்; தேவூரை இராசதானியாகக்கொண்டவன்; இவன் தேவூரின் தென்புறம் அமைத்த நல்லுத்தரேச்சரம் சிதைந்திருக்கிறது; "நல்லூர், நல்லாற்றூர்,

நல்லக்குடி" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "நல்லூர்" என்னு மூர்களையுமுண்டுபண்ணினவன்.

**புறஞ்சயன்**(சக்ரவர்த்தி):—நல்லுத்தரன்மகன்; "புறம்பயம்" என்னும் (தேவாரம்பெற்ற சிவதல) நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; ஆயிரங்கண்ணுடைய புரந்தரனைப் போல தானவரைவென்றவன்; இவன் பெயர் "புறம்பயத்தான், புறம்பயங்கொண்டான், புறம்பயன்" எனவும் வழங்கும்; "புறவம் (சீகாழி), புறக்குடி" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "புறவநதி" என்னும் சிற்றாற்றையும்; "புறவச்சேரி, புறங்கரம்பை, புறமங்கலம்" என்னுமூர்களையும் உண்டுபண்ணினவன்; இவன்மரபோர்க்கு "புறம்பயத்தான், (பொறைபொறுத்தான், பொய்ந்தான்), புறம்பயங்கொண்டான் (பொய்கொண்டான்), புறம்பயன் (பொறையன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

(கக) இக்குவாகுவின் மகன்புதல்வ னனவரவோ
ளிகலுவோனிக லூஞ்செய்து புரந்தரனெனுஞ்
சக்குவாயிர முடைக்களிறு வாகனமெனத்
தானிருந்து பொரு தானவரை வென்றசயமும்.

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

**மாந்தாதா** (சக்ரவர்த்தி):—புறஞ்சயன் மகன்; "மாங்கோட்டை (மாங்காடு)" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; மானும் புலியும் ஒரு துறையில் நீருண்ணும்படி அரசாண்டவன்; இவன் பெயர் "மாங்காட்டான்" எனவும் வழங்கும்; மாவூர், மாகுடி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "மாங்குடி, மாவூர், மாம்பட்டி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "மாங்காட்டான்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

(கஉ) ஒருதுறைப்புனல் சினப்புலியு மானுமுடனே
யுண்ணவைத்தவரவோ னுலகில் வைத்தவருளும்.

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

**மணவாளன்** :—மாந்தாதா மரபில் வந்தவன்; "மணவை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "மணஞ்சேரி, மணற்கால்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "மணக்கரை, மணக்கரம்பை, மணக்காடு, மணக்குடி, மணம்பூண்டி, மணலி, மணப்பாறை, மணமேற்குடி, மணவூர், மணலூர், மணவயல், மணமங்கலம், மணவாளன் பேட்டை" என்னுமூர்களையு முண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு "மணவாளன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**வேள்** :—மாந்தாதா மரபில் வந்தவன்; "பெருவேளூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதல நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; மருதநிலமாக்களுக்கு "வேளாளர்" என்னும் பட்டங்கொடுத்தவன்; இவன் பெயர் "வேளூரன், வேளுடையன்" எனவும் வழங்கும்; "வேளூர், (வைத்தீஸ்வரன்கோயில்), கீழ்வேளூர், வேட்களம், "வேள்விக்குடி" (என்னும் தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "வேளூர், வேளுக்குடி, வேளாங்கண்ணி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "வேளூரன்(வேளூரான்), வேளுடையன்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**தலைமன்** :—மாந்தாதா மரபில் வந்தவன்; இவன் பெயர் "தலைராயன், முதலி" எனவும் வழங்கும்; "தலையாலங்காடு, தலைச்சங்காடு" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "தலைஞாயிறு, தலையூர், தலைக்காடு, தலையாமங்கலம், தலைக்குடி, தலைச்சேரி, முதலிகுத்தே" என்னுமூர்களையுமுண்டுபண்ணினவன்; இவன்மரபோர்க்கு "தலைராயன் (தலைசைராயன், தனசைராயன், தனராயன்), முதலி" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**சேறைமன்** :—"சேறை (சேற்றூர்)" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "சேற்றூர்" என்னும் சிவதலத்தையும் "சேற்றுப்பட்டு" முதலியவூர்களையுமுண்டாக்கினவன்.

பழையன் :—மாந்தாதா மரபில் வந்தவன் ; "பழையாறு" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; இவன் பெயர் "பழையாறு கொண்டான், பழையாற்றரையன்" எனவும் வழங்கும் ; "பழையாற்றுவடதளி, பழையாற்றுத்தென்றளி, பழையாற்று மேற்றளி, பழையாற்றுக் கீழ்த்தளி, பழையங்குடி, பழையாறு, பழையனூர், பழனம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும் ; "பழையபுரம், பழையவலம், பழமங்கலம், பழங்களத்தூர், பழவனக்குடி" என்னுமூர்களையும் ; "பழையாறு" என்னும் சிற்றூற்றையும் உண்டுபண்ணினவன் ; இவன்மரபோர்க்கு "பழையாறுகொண்டான், (பழங்கொண்டான், பழங்கண்டான்), பழையாற்றரையன் (பழையாற்றூன், பழத்தான், மாம்பழத்தான்)" என்னும் பட்டப் பெயர்கள் வழங்குகின்றன.

தளிமன் :—மாந்தாதா மரபில் வந்தவன் ; "தளிக்கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; "தளிச்சேரி, தளிக்குளம், தளிச்சாத்தங்குடி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும் ; "தளிமங்கலம், தளிக்குடி" முதலியவூர்களையுமுண்டுபண்ணினவன்.

குடமன் :—மாந்தாதா மரபில் வந்தவன் ; "குடவாயில்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதல நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன் ; "குடமூக்கு" (கும்பகோணம்) என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையுண்டுபண்ணினவன்.

நாகமன் :—மாந்தாதா மரபில் வந்தவன் ; "நாகபட்டினம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதல நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன் ; இவன் பெயர் "நாகாளி" எனவும் வழங்கும் ; சிவராத்திரி முதல் யாமத்தில் திருக்குடந்தைக் கீழ்க்கோட்டத்திலும், இரண்டாம் யாமத்தில் திருநாகேச்சரத்திலும், மூன்றாம் யாமத்தில் திருப்பாம்புரத்திலும், நான்காம் யாமத்தில் திருநாகூரிலும் திருக்கோயிலமைத்துச் சிவலிங்கபூசை செய்தவன் ; "நாகேச்சரம்" என்னும் சிவதலங்களையும் ; "நாகன்பாடி, நாகன்குடி, நாகன்பேட்டை, நாகமங்

கலம், நாகனூர், நாகளூர், நாகபட்டினம், நாகலாபுரம்" என்னு மூர்களையுமுண்டாக்கினவன்; இவன்மரபோர்க்கு "நாகாளி (நாக்காடி, நாவிளங்கி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**மறையன்** :—மாந்தாதா மரபில் வந்தவன்; "மறைக்காடு (வேதாரணியம்), மறைக்குடி (வேதிகுடி)" என்னும் சிவதலங்களையும்; "மறைப்புரம் (வேதபுரம்), மறையனூர், மறையூர்" முதலிய வூர்களையுமுண்டாக்கினவன்.

**கார்மன்** :—மாந்தாதா மரபில் வந்தவன்; "காரைக்கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "காரையாட்சி" எனவும் வழங்கும்; காரைவாயில் (காராயில்), காரைமேடு (கழிப்பாலை), காரைக்காடு, "காரைக்கால்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "காரைவாயில், காரையூர், காரைப்பாக்கம், காரைப்பட்டு, காரைப்பட்டி, காரைக்குடி, காரைப்பள்ளம், காரப்பன்காடு, காரைமங்கலம்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "காரையாட்சி (காரைக்காச்சி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**முசுகுந்தன்** (சக்ரவர்த்தி) :—முற்பிறப்பில் திருக்கயிலாயமலைச்சாரலில் குரங்கு வடிவாயிருந்து "பரமசிவன் பார்வதியார்" திருமேனிகளில் வில்வ இலைகளைப் பறித்துச் சிந்தியகாரணத்தினால் மாந்தாதாமரபில் வந்தவன்; புகாரப் பட்டினத்தை யுண்டு பண்ணி இராசதானியாகக் கொண்டவன்; முசுரி என்னுமூர்களையுமுண்டுபண்ணினவன்; இந்திரனுக்குதவியாகத் தேவலோகஞ்சென்று வலாசுரன்முதலிய அவுணர்களைக்கொன்றவன்.

(கஉ) பொருதுறைத்தலை புகுந்துமுசு குந்தனிமையோர்
புரமடங்கலு மரண்செய்து புரந்தபுகழும்,

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

இவன் புரந்தரன் விட்டுணுவிடம் பெற்றுப் பூசித்துக்கொண்டிருந்த வீதிவிடங்கத்தியாகரையும்; அவனமைத்த "நகவிடங்கத்தியாகர், சுந்தரவிடங்கத்தியாகர், நீலவிடங்கத்தியாகர், ஆதி

விடங்கத்தியாகர், அவனிவிடங்கத்தியாகர், புவனிவிடங்கத்தியாகர்" என்னும் தியாகமூர்த்திகளையும்பெற்றுக்கொண்டு நல்லூரையடைந்து, அங்கிருந்து "பழையாறு, சேற்றூர் (சேறை,) தலையாலங்காடு, பெருவேளூர், இராப்பட்டீச்சரம், மணற்கால், தளிச்சாத்தங்குடி (பொன்னுக்கொளிச்சார்கோயில்)" என்னும் தலங்களின் வழியாய்த் திருவாரூருக்குக் கொணர்ந்தவன்.

"நல்லூரே நன்றாக நட்டமிட்டு
நரையேற்றைப் பழையாறே பாயவேறிப்
பல்லூரும் பலிதிரிந்து சேற்றூர்மீதே
பலர்காணத் தலையாலங் காட்டினூடே
இல்லார்ந்த பெருவேளூர் தளியேபேணி
யிராப்பட்டீச்சரங் கடந்து மணற்கால்புக்கு
எல்லாருந் தளிச்சாத்தங் குடியிற்காண
விறைப்பொழுதிற் றிருவாரூர் புக்கார்தாமே."

என்று திருவாரூர்த் தேவாரம் கூறுகிறது.

ஆரூரில் வீதிவிடங்கத்தியாகரையும்; நள்ளாற்றில் நகவிடங்கத்தியாகரையும்; நாகபட்டினத்தில் சுந்தரவிடங்கத்தியாகரையும்; காரைவாயிலில் ஆதிவிடங்கத்தியாகரையும்; கோளிலியில் அவனிவிடங்கத்தியாகரையும்; வாய்மூரில் நீலவிடங்கத்தியாகரையும்; மறைக்காட்டில் புவனிவிடங்கத் தியாகரையும் தாபித்தவன். (இவ்வேழும் சத்தவிடங்கமென்பர்). வீதிவிடங்கத்தியாகர் அசபா நடனமும், நகவிடங்கத்தியாகர் உன்மத்த நடனமும், சுந்தரவிடங்கத்தியாகர் பாராவாரதரங்க நடனமும், நீலவிடங்கத்தியாகர் கமல நடனமும், ஆதிவிடங்கத்தியாகர் குக்குட நடனமும், அவனிவிடங்கத்தியாகர் வண்டு நடனமும், புவனிவிடங்கத்தியாகர் அன்ன நடனமுங் காட்டியருளப்பெற்றவன். அன்றியும் புரந்தரன் கொடுத்த (திருட்டு வெளியாக்கும்) வெள்ளிடைமன்றம்; (கூன், குறள், ஊமை, செவிடு, பெருவியாதி போக்கும்) இலஞ்சிமன்றம்; (நஞ்சருந்தல், பாம்பு கடித்தல், பேய்பிடித்தல் நீக்கும்) நெடுங்கல் நின்ற மன்றம்; (பொய்த்தவஞ் செய்வோர், வியபசாரஞ் செய்வோர், வருவதுரையா வமைச்சர், பிறர்மனை நயப்போர், பொய்யுரைப்போர்,

புறங்கூறுவோர் என்பவர்களை நான்குகாதங்கேட்கும்படி கடுங்குரலெழுப்பிப் பூதம் புடைத்துண்ணும்) பூதசதுக்கம்; (அரசன் நீதி தவறினாலும், அரசனுக்குத் தீங்கு நேரிடுவதாயிருந்தாலும் பாவைநின்றழும்) பாவைமன்றம் என்னும் ஐவகை மன்றங்களையும் புகார்ப்பட்டினத்தில் தாபித்தவன்.

"அமரா வதிகாத் தமரனிற் பெற்றுத்
தமரிற் றந்து தகைசால் சிறப்பிற்
பொய்வகை யின்றிப் பூமியிற் புணர்த்த
வைவகை மன்றத் தமைதியுங் காண்குதும்."

"கட்பொ ருளரொளிற் கடுப்பத் தலையேற்றிக்
கொட்பி னல்லது கொடுத்தலி னீயா
துள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும்."

"கூனுங் குறளு மூமுஞ் செவிடு
மழுகுமெய் யாளரு முழுகின ராடிப்
பழுதில் காட்சி நன்னிறமும் பெற்று
வலஞ்செயாக் கழியு மிலஞ்சி மன்றமும்."

"வஞ்ச முண்டு மயற்பகை யுற்றோர்
நஞ்ச முண்டு நடுங்குதுய ருற்றோ
ரழல்வாய் நாகத் தாரெயி றழுந்தினர்
கழல்கட் கூளிக் கடுநவைப் பட்டோர்
சுழல வந்து தொழத் துயர்நீங்கு
நிழல்காலனெடுங்க னின்ற மன்றமும்."

"தவமறைத் தொழுகுந் தன்மையி லாள
ரவமறைந் தொழுகு மல்லவைப் பெண்டி
ரறைபோ கமைச்சர் பிறர்மனை நயப்போர்
பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளரென
கைக்கொள் பாசத்துக் கைப்படு வோரெனக்
காத நான்குங் கடுங்குர லெழுப்பிப்
பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்."

"அரசுகோல் கோடினு மறங்கூ றவையத்
துரைநூல் கோடி யொருதிறம் பற்றினு
நாவொடு நவிலாது நவைநீ ருகுத்துப்
பாவை நின்றழூஉம் பாவை மன்றமும்."

என்று சிலப்பதிகாரங் கூறுகிறது.

பனையமன் :—முசுகுந்தன்மரபில் வந்தவன்; பனையக் கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "பனைகொண்டான், தாளியன்" எனவும் வழங்கும்; "பனையூர், பனந்தாள், பனங்காடு, பனங் காட்டூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவ தலங்களையும்; "பனையூர், பனையப்பட்டி, பனங்காடி, பனங்குடி, பனம்பாக்கம், பனங்குளம், பனமங்கலம், பனம்பட்டி" என்னுமூர்களையுமுண் டாக்கினவன்; இவன்மரபோர்க்கு "பனையன் (பன்னையன்), பனைகொண்டான் (பன்னிகொண்டான், பண்ணிகொண்டான், பன்றிகொண்டான், பண்ணிமுண்டான், பணிகொண்டான், பணி பூண்டான்), தாளியன் (தாளிதியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

பருதிமன் :—முசுகுந்தன் மரபில் வந்தவன்; "பருதி (பருத்தி) கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசு தானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "பருதிகொண்டான், பருதியாண்டான், பருதிப்பிரியன்" எனவும் வழங்கும்; "பரு தீச்சரம் (பருத்தியப்பர்கோவில்), மிகைச்சூர்" என்னும் (தேவா ரம்பெற்ற) சிவ தலங்களையும்; "பருத்திக்கோட்டை" என்னும் மற்றொரு நகரத்தையும்; பருத்திகுடி, பருத்தியூர், பருத்திச் சேரி, பருத்திமங்கலம், பருத்திப்பள்ளம்" என்னுமூர்களையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பருத்திகொண்டான்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

விசலமன் :—முசுகுந்தன் மரபில் வந்தவன்; "விசலூர்" என்னும் (தேவாரம் பெற்ற சிவதல) நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "விசலாண் டான், விசலாளி, விசல்கொண்டான்" எனவும் வழங்கும். இவன் மரபோர்க்கு "விசலாண்டான் (விசலண்டான், பிசலண் டான், வீசண்டான்) விசலாளி (விச்சாடி), விசல்கொண்டான் (விசலுண்டான், பிசலுண்டான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**வாளமரன்** :—முசுகுந்தன் மரபில் வந்தவன்; "வாளமரன் கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; வாட்போரிற் சிறந்தவன்; மிக்க வீரமுடையவன்; இவன் பெயர் "வாளால்வெட்டி" எனவும் வழங்கும்; "வாள் கொளிபுத்தூர், வாட்போக்கி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவ தலங்களையும்; "வாள்மங்கலம், வாளையங்கண்ணி' என்னுமூர் களையுமுண்டாக்கினவன்; இவன்மரபோர்க்கு "வாளால்வெட்டி (வாள்வெட்டி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**அரசதேவன்**:—முசுகுந்தன்மரபில் வந்தவன்; "அரசபுரம்" என்னும் நகரத்தை அமைத்து இராசதானியாகக்கொண்டவன்; அரசரிற் சிறந்தவன்; இவன் பெயர் "அரசாண்டான், அரசுக் குடையன்" எனவும் வழங்கும்; "அரசிலி, அரநெறி, அர தைப்பெரும்பாழி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களை யும்; "அரங்குளம்" என்னும் சிவதலத்தையும்; "அரசூர், அர சங்குடி, அரசமங்கலம், அரசங்குளம்" என்னுமூர்களையுமுண் டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "அரசாண்டான், அரசுக் குடையன் (அரசுக்குழைச்சான், அரச்சுக்குழைச்சான்)" என் னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**ஆச்சன்**:—முசுகுந்தன் மரபில் வந்தவன்; "ஆச்சாபுரம் (பெருமணநல்லூர்)" என்னும் (தேவாரம்பெற்ற சிவதல) நகரத் தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; ஆதிசைவர் களுக்கும், கம்மியர்களுக்கும் "ஆச்சாரி" என்று பட்டம் கொடுத்தவன; "இவன் பெயர்" ஆச்சாப்பிரியன்" எனவும் வழங்கும்; "ஆச்சபுரம் (ஆதிச்சபுரம்), ஆச்சமங்கலம், ஆச்ச னூர், ஆச்சங்குடி, ஆச்சான்பட்டி" என்னுமூர்களையுமுண்டாக் கினவன்; இவன் மரபோர்க்கு "ஆச்சாப்பிரியன் (ஆட்சிப்பிரி யன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**இராயன்**:—முசுகுந்தன் மரபில் வந்தவன்; இராயபுரம் என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன்பெயர் "இராயங்கொண்டான், இராயாளி, இராயப்பிரியன்" எனவும் வழங்கும்; "இராயநல்லூர் (இராயந்தூர்), இராயன்

பேட்டை, இராயமங்கலம், இராயன்குடி, இராயன்பட்டி (இராங்கியன்பட்டி)" என்னுமூர்களையுண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு "இராயன்(இராங்கியன்), இராயங்கொண்டான் (இராயமுண்டான்), இராயாளி (இராசாளி), இராயப்பிரியன் (இராசப்பிரியன், இராங்கிப்பிலியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**ஓமாம்புலிமன்:**— முசுகுந்தன் மரபில்வந்தவன்; "ஓமாம்புலியூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதல நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன்பெயர் "ஓமாமரையன், ஓமாந்தரையன், ஓமாம்பிரியன், ஓமாமுடையன்" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "ஓமாமரையன் (ஓமசையன், ஓமனுபன்), ஓமாந்தரையன் (ஓந்தரையன், ஓந்திரியன் ஓமாம்பிரியன் (ஒயாம்பிலியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**நெல்லிமன்:**—முசுகுந்தன் மரபில்வந்தவன்; "நெல்லிக்கோட்டை" என்னும் நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன்பெயர் "நெல்லிப்பிரியன்" எனவும் வழங்கும்; "நெல்வாயில் (சிவபுரி), நெல்வாயிலரத்துறை நெல்வெண்ணெய், நெல்லிக்கா" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "மேலநெல்வேலி (மீனவல்லி)' என்னும் சிவதலத்தையும்; "நெல்லி, நெல்லிச்சேரி, நெல்மலி, நெல்லூர்' என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "நெல்லிப்பிரியன் (நல்லிப்பிரியன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**பத்தாளன்:**—முசுகுந்தன் மரபில் வந்தவன்; "பத்தாளன் கோட்டை" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; "பத்தூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; பத்தூர், பத்தகுடி, பத்தமங்கலம், பத்தாளன்பட்டி என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன்மரபோர்க்கு "பத்தாளன், பத்தாட்சி (பெத்தாச்சி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

மங்கலன்:—முசுகுந்தன் மரபில்வந்தவன். "திருமங்கலக் கோட்டை" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; "மங்கலக்குடி" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "மங்கலம், மங்கலூர், மங்கநல்லூர்" என்னூர்களையுமுண்டாக்கினவன்; இவன்பெயர்"மங்கலதேவன்"எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "மங்கலன், மங்கலதேவன் (மங்கதேவன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

நியமி (சக்ரவர்த்தி):—முசுகுந்தன் மரபில்வந்தவன்; புகார்ப் பட்டினத்தை இராசதானியாகக்கொண்டவன்; "நியமம்" என்னும் (தேவாரம்பெற்ற)சிவதலத்தையும்; "நியமம்" என்னும் சிவதலத்தையும்; "நியமம், நியமித்தான்பட்டி" என்னூர்களையுமுண்டாக்கினவன்; திருப்பாற்கடல் கடைந்தகாலத்தி லெழுந்த அமுதத்தை(தானவர்களருந்தாமல்) வானவர்களருந்த வுதவி செய்தவன்.

(௧௩) "கடல்கலக்கவெழு மின்னமுது தன்னையொருவன்
கடவுள்வானவர்க ளுண்ணவருள் செய்தகதையும்."

என்று கலிங்கத்துப் பரணி(இராசபாரம்பரியம்) கூறுகிறது.

சேய்ஞன்:—நியமி மரபில்வந்தவன்; "சேய்ஞலூர்" என்னும் (தேவாரம் பெற்ற சிவதல) நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "சேய்ஞற்கொண்டான், சேய்ஞலரையன், சேய்ஞற்பிரியன்" எனவும் வழங்கும்; "சேயாறு" என்னும் பேராற்றையும்; "சேயூர், சேய்க்குடி, சேய்மங்கலம்" என்னூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "சேய்ஞற்கொண்டான் (செம்மைகொண்டான்), சேய்ஞலரையன் (செம்மைக்காரன்), சேய்ஞற்பிரியன் (சேப்பிளன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

கருப்பைமன்:—நியமி மரபில்வந்தவன்; தூங்கெயிலென்னுமரணும், (தேவாரம் பெற்ற) சிவதலமு முடைய "கருவூர்" நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "கருவூரான்; கருக்கொண்டான்" எனவும் வழங்கும்; "கருகாவூர், கருக்குடி, கருப்பறியலூர், கருவிலி" என்னும்

(தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "கருப்பூர்" என்னும் சிவ தலத்தையும்; "கருப்பூர், கருப்புக்களர், கருப்பஞ்சேரி, கருப் பட்டிமூலை, கருங்குளம், கருங்கண்ணி, கருவாக்குரிச்சி, என்னு மூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கருப்பை யன் (கருப்பட்டியன்), கருவூரான் (கருப்பூரான்) கருக்கொண் டான்(கருப்பூண்டான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்கு கின்றன.

**உறந்தைமன்:**—நியமி மரபில்வந்தவன்; "உறையூர்" என் னும்(தேவாரம்பெற்ற)சிவதல நகரத்தையுண்டுபண்ணிஇராசதா னியாகக் கொண்டவன்; இவன்பெயர் "உறந்தைராயன், உறந் தை கொண்டான், உறந்தைப்பிரியன்" எனவும்வழங்கும்; "உறத்தூர்" என்னுமூர்களையெல்லாமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "உறந்தைராயன்" என்னும் பட்டப்பெயர் வழங்கு கின்றது.

**ஒளிமன்:**—நியமி மரபில்வந்தவன்; "ஒளி (உள்ளி) கோ ட்டை" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதனியாகக்கொண் டவன்; இவன் பெயர் "ஒளிராயன், ஒளிகொண்டான், ஒளிப் பிரியன், எனவும் வழங்கும்; அறிவிலும் புகழிலும் சிறந்தவன்; "ஒளியூர், ஒளிமதி, ஒளிமங்கலம், ஒளிக்குடி, ஒளிக்கடை (உள்ளிக்கடை)" என்னுமூர்களையுண்டாக்கினவன்; இவன்மர போர்க்கு"ஒளிராயன், ஒளிகொண்டான், ஒளிப்பிரியன் (ஒண்டி ப்பிலியன்) என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**கோற்றமன்:**—நியமி மரபில் வந்தவன்; "கொற்றன்குடி" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்ட வன்; வீரத்திலும் வெற்றியிலும் சிறந்தவன்; இவன் பெயர் "கொற்றங்கொண்டான், கொற்றப்பிரியன்" எனவும் வழங்கும்; "கொற்றமங்கலம் (கொத்தமங்கலம்), கொற்றன்குடி (கொத்தங் குடி), கொற்றூர் (கொத்தூர்)" என்னுமூர்களையெல்லாமுண்டாக் கினவன்; இவன் மரபோர்க்கு "கொற்றங்கொண்டான் (கொன் னமுண்டான்), கொற்றப்பிரியன் (கொத்தப்பிரியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**நன்னிமன்:**—நியமி மரபில் வந்தவன் "நன்னிபள்ளி" என்னும் (தேவாரம் பெற்ற சிவதல) நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "நன்னியன்" எனவும் வழங்கும்; "நன்னிலம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "நன்னிமங்கலம், நன்னிகுடி, நன்னி(நயினுன்) குத்தே" என்னுமூர்களையு முண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு "நன்னியன் (நயினியன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**நீலமன்:**—நியமி மரபில் வந்தவன்; "நீலப்பாடி" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "நீலங்கொண்டான், நீலப்பிரியன்" எனவும் வழங்கும்; "நீலக்குடி" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "நீலவெளி" என்னும் சிவதலத்தையும்; "நீலநல்லூர் (நீலத்தநல்லூர்), நீலமங்கலம்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "நீலங்கொண்டான் (நெறிமுண்டான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**வைகமன்:**—நியமி மரபில் வந்தவன்; இவன் பெயர் "வைகராயன்" எனவும் வழங்கும்; "வைகாவூர், வைகல்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "வைகளத்தூர், வைகச்சேரி, வைகம்பட்டி" என்னுமூர்களையுமுண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு "வைகராயன் (வயிராயன், வயிரவன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**சாத்தமன்:**—நியமி மரபில் வந்தவன்; இவன் பெயர் "சாத்தயன், சாத்தரையன்" எனவும் வழங்கும்; "சாத்தமங்கை (சாத்தமங்கலம்)" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "சாத்தனூர், சாத்தங்குடி, சாத்தமங்கலம், சாத்தூர்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "சாத்தயன் (சாதகன்), சாத்தரையன் (சாமுத்தரையன், சாமுத்திரியன்) என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

ம்ருங்கமன்:—நியமி மரபில் வந்தவன்; "மருங்காபுரி" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "மருங்கராயன்" எனவும் வழங்கும்; "மருதூர், மருகல், மருத்துவக்குடி" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; மருதவனம், மருதூர், மருதங்குடி, மருதங்காவளி, மருதம்பட்டி, மருவூர், மருங்கூர், மருங்குப்பள்ளம்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "மருங்கராயன் (பருங்கைராயன், கைராயன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

பூமன்:—நியமி மரபில் வந்தவன்; "பூவாளூர்" என்னும் சிவதலநகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "பூவாட்சி" எனவும் வழங்கும்; "பூந்துருத்தி, பூவனூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "பூங்குடி, பூங்குளம், பூவத்தூர், பூவத்தகுடி, பூவலூர், பூந்தோட்டம், பூண்டி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பூவாட்சி (பூட்சி, திருப்பூட்சி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

வேங்கைமன்:—நியமி மரபில் வந்தவன்; "வேங்கை (உழுவூர்)" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன்பெயர் "வேங்கைராயன், உழுவாண்டான்" எனவும் வழங்கும்; "வேங்கூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "வேங்கூர், உழுவூர், உழுமங்கலம், உழுந்தூர்ப்பேட்டை" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "வேங்கைராயன் (வேங்கிராயன்), உழுவாண்டான் (உழுவண்டான்) என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

விடையமன்:—நியமி மரபில் வந்தவன்; "விடையபுரம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "விடைவாய்(க்குடி)" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "விடைக்கழி" என்னும் (திருப்புகழ் பெற்ற) சுப்பிரமணியதலத்தையும்; "விடைமங்கலம், விடைக்குடி" என்னுமூர்களையு முண்டாக்கினவன்.

அன்னி:—நியமி மரபில் வந்தவன்; "அன்னியூர்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; அன்னியூர்'' என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும், "அன்னி மங்கலம், அன்னிகுடி'' என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

கஞ்சமன்:—நியமி மரபில்வந்தவன்; "கஞ்சனூர்" என்னும் (தேவாரம்பெற்ற)சிவதலநகரத்தையுண்டாக்கிஇராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "கஞ்சராயன்'' எனவும் வழங்கும்; "கஞ்சனூர்'' என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கஞ்சராயன்'' (கஞ்சன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

குறுக்கைமன்:—நியமி மரபில் வந்தவன்; "குறுக்கை" என்னும் (இரு) சிவதலநகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "குறுக்கையாண்டான் எனவும் வழங்கும்; "குறுக்கை, குறுமாணிகுடி" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "குறுங்குடி, குறும்பூர், குறுங்களம், குறுங்குளம்" என்னுமூர்களையு முண்டாக்கினவன்; வேளாளரில் ஒருவகுப்பாருக்கு "குறுக்கையர்'' என்னும் பட்டங்கொடுத்தவன்; இவன் மரபோர்க்கு "குறுக்கையாண்டான் (குறுக்கண்டான்)'' என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

தில்லைமன்:—செம்பியன் மரபில் வந்தவன்; "தில்லை (சிதம்பரம்)'' என்னும் (தேவாரம் பெற்ற)சிவதல நகரததையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "தில்லைராயன், தில்லைகொண்டான், தில்லையாண்டான், தில்லைப்பிரியன், தில்லையாளி" எனவும் வழங்கும்; "தில்லைவிடங்கன், தில்லையாளிநல்லூர், தில்லைவளாகம், தில்லையம்பூர்'' என்னுமூர்களையுண்டாக்கினவன்.

வேலமன்:—செம்பியன் மரபில் வந்தவன்; "வேலூர்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "வேல்ராயன், வேலாண்டான், வேற்கொண்டான், வேற்பிரியன், வேலாளி'' எனவும்வழங்கும்; "வேற்காடு" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "வேலூர் "

என்னும் (திருப்புகழ் பெற்ற) சுப்பிரமணிய தலத்தையும்; "வேலன்குடி, வேலன்காடு, வேற்குடி" என்னுமூர்களையு முண்டாக்கினவன்.

பட்டிமன்:—நியமி மரபில் வந்தவன்; "பட்டுக்கோட்டை" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "பட்டுராயன், பட்டுகொண்டான், பட்டாண்டான், பட்டுப்பிரியன், பட்டாளி" எனவும் வழங்கும்; "பட்டீச்சரம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "பட்டிமங்கலம், பட்டவெளி, பட்டம், பட்டுராயன்பட்டி (பவட்டுரான்பட்டி)" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பட்டுராயன் (பவட்டுரான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

சத்தி:—நியமி மரபில் வந்தவள்; "பழையாறு" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலநகரத்தை இராசதானியாகக் கொண்டவள்; "சத்திமுத்தம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "சத்திமுத்தம், சத்திமங்கலம், சத்திவேடு, சத்திகுடி" என்னுமூர்களையு முண்டாக்கினவள்.

செட்டிமன்:—நியமி மரபில் வந்தவன்; "செட்டிமங்கலம், செட்டியகாடு, செட்டிபுலம், செட்டிகுத்தே, செட்டியமூலை, செட்டிகுளம், செட்டிகுடி" என்னுமூர்களை யுண்டாக்கினவன்.

சிவமன்:—நியமி மரபில் வந்தவன்; "சிவபுரம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதல நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; "சிவப்பள்ளி" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தை யுண்டாக்கினவன்.

கரும்பூரன்:—நியமி மரபில் வந்தவன்; "கரும்பூரான்கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "கரும்பூர்" முதலிய வூர்களை யுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கரும்பூரான்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**கீழைமன்:**—நியமி மரபில் வந்தவன்; "கீழக்கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "கீழாண்டான், கீழ்கொண்டான், கீழுடையன், கீழ்ப்பிரியன், கீழாளி" எனவும் வழங்கும்; வேளாளரில் ஒருவகுப்பாருக்கு "கிழார்" என்னும் பட்டங் கொடுத்தவன்;"கீழையிலரன்(கீழையூர்), கீழைவழி, கீழையம்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "கீழையூர்" முதலிய வூர்களையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கீழாண்டான் (கிழண்டன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**இடைமன்:**—நியமி மரபில் வந்தவன்; "இடங்கான் கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன்பெயர் "இடங்காப்பிறந்தான்" எனவும் வழங்கும்; இடைமருதூர், இடையாறு, இடைவாய் (விடைவாய்) இடைக்குளம், இடைப்பள்ளி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; இடையாத்திமங்கலம், இடைக்கோரை, இடையூர், இடையகாடு, இடைக்குடி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; முல்லைநிலமாக்களுக்கு "இடையர்" என்னும் பட்டங்கொடுத்தவன்; இவன்மரபோர்க்கு "இடங்காப்பிறந்தான்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**கன்னன்:**—நியமி மரபில் வந்தவன்; "கன்னபுரம்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன்பெயர் கன்னுண்டான், கன்னகொண்டான், கன்னமுடையன், கன்னப்பிரியன், கன்னுளி" எனவும் வழங்கும்; வரையாது கொடுத்த "இடையெழுவள்ளல்"களி லொருவன்; "கன்றாப்பூர், (கன்னப்பூர்)" என்னும் சிவதலத்தையும்; "கன்னாரப்பேட்டை, கன்னன்குளம், கன்னந்தகுடி, கன்னக்கொடையான்" என்னுமூர்களையும்; "கன்னாறு" என்னும் காட்டாற்றையுமுண்டாக்கினவன்; இவன்மரபோர்க்கு "கன்னமுடையன் (கன்னப்படையன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**நள்ளி**:—நியமி மரபில் வந்தவன்; "நள்ளிக்கோட்டை (நல்லிக்கோட்டை)" என்னும் நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; வரையாது கொடுத்த "கடையெழு வள்ளல்" களிலொருவன்; இவன் பெயர் "நள்ளிப்பிரியன்" எனவும் வழங்கும்; "நள்ளாறு" என்னும்(தேவாரம்பெற்ற)சிவதலத்தையும்; "நள்ளி" என்னுமூரையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "நள்ளிப்பிரியன் (நல்லிப்பிரியன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**சாய்மன்**:—நியமி மரபில் வந்தவன்; "சாய்க்கோட்டை(கலயநல்லூர்)" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலநகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "கலயன்" எனவும்வழங்கும்; "சாய்க்காடு" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "சாய்க்களூர்" என்னும் சிவதலத்தையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கலயன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**நம்பன்**:—நியமி மரபில் வந்தவன்; "நம்பன்கோட்டை (நம்மக்கோட்டை)" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; "நம்பன்குடி (நம்மங்குடி), நம்பன்குரிச்சி (நம்மங்குரிச்சி)" என்னுமூர்களை யுண்டாக்கினவன்; (திருவுசாத்தானம் கல்வெட்டு நம்பன்குரிச்சி என்று கூறுகிறது).

**வாமன்**:—நியமி மரபில் வந்தவன்; "வாகோட்டை" என்னும் நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "வாகொண்டான், வாயாண்டான், வாப்பிரியன், வாயாளி" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "வாப்பிரியன் (வாப்பிலியன்), வாயாளி (வாயாடி)" என்னும் பட்டப்பெயர்கள், வழங்குகின்றன.

**பாச்சில்மன்**:—நியமி மரபில் வந்தவன்; "பாச்சிற்கோட்டை" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "பாச்சிற்கொண்டான், பாச்சிலாண்டான், பாச்சிற்பிரியன், பாச்சிலாளி" எனவும் வழங்கும்; "பாச்சிலாச்சிராமம், பாசூர் (பாச்சூர்)" என்னும் (தேவாரம் பெற்ற)

சிவதலங்களையும்; "பாச்சூர், பாச்சிமங்கலம்" என்னுமூர்களையு முண்டாக்கினவன்; இவன்மரபோர்க்கு "பாச்சிலாளி (பிச்சாடி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

ஓரி:—நியமி மரபில் வந்தவன்; "ஒத்தூர், என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும் "ஓரியூர், ஓரிக்குடி, ஓரிமங்கலம், ஓரிச்சேரி" என்னுமூர்களையு முண்டாக்கினவன்; வரையாது கொடுத்த "கடையெழுவள்ளல்" களிலொருவன்.

காரி:—நியமி மரபில் வந்தவன்; "காரிகோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; வரையாது கொடுத்த "கடையெழு வள்ளல்" களிலொருவன்; "காரிக்கரை" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "காரிமங்கலம், காரிகுடி, காரியூர், காரிபட்டி" என்னுமூர்களையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "காரி" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

சமயன்:—நியமி மரபில் வந்தவன்; "சமயபுரம்" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "சமயன், சமயதேவன், சமயாளி" எனவும் வழங்கும்; "சமயனூர், சமயன்குடிக்காடு" என்னுமூர்களையுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "சமயன், சமயாளி (சவுளி, சவுட்டி, சமட்டி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

சோணமன்:—நியமி மரபில் வந்தவன்; "சோணகோட்டை" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "சோணயன், சோணடுகொண்டான்" எனவும் வழங்கும்; இவன்மரபோர்க்கு "சோணயன், சோணடுகொண்டான் (சோணருண்டான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

காசிமன்:—நியமி மரபில் வந்தவன்; "காசாங்கோட்டை" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "காசிராயன், காசிநாடன்" எனவும் வழங்கும்; "தென்காசி, சிவகாசி" என்னும் பிரபல சிவதலங்க

ளையும்; "தென்காசி, காசாங்காடு" என்னுமூர்களையுமுண்டாக்கி னவன்; இவன் மரபோர்க்கு "காசிராயன், காசிநாடான்" என் னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**நரசிங்கன்:**—நியமி மரபில் வந்தவன்; "நரசிங்கபுரம்" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "நரசிங்கப்பிரியன்" எனவும் வழங்கும்; "நரசிங்க மங்கலம், நரசிங்கம்பேட்டை" என்னுமூர்களையுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "நரசிங்கன் (நரங்கியன்), நரசிங்கப்பிரியன் (நரங்கிப்பிலியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**கரம்பைமன்:**—நியமி மரபில் வந்தவன்; "கரம்பைக் கோட்டை (கரமுண்டான் கோட்டை)" என்னும் நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "கரம்பைகொண்டான்" எனவும் வழங்கும்; "காவீரம், கர புரம் என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; கரம்பை, கரம்பையம், கரம்பைக்குடி, காஞ்சிப்பட்டி" என்னு மூர்களை யுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கரம்பையன், கரம் பைகொண்டான் (கரமுண்டான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**மானங்காத்தமன்:**—நியமி மரபில் வந்தவன்; ஒரு பெண்ணி னுடைய மானத்தைக் காத்தவன்; இவன் பெயர் "மானத்தரை யன், மானம் விழுங்கி" எனவும் வழங்கும்; "மானகாத் தான்கோட்டகம், மானலூர், மானூர்" முதலியவூர்களையுண்டாக் கினவன்; இவன் மரபோர்க்கு "மானங்காத்தான், மானத்தரை யன் (மானமுத்தரையன்), மானம்விழுங்கி (மானமுழுங்கி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**மண்டலன்:**—நியமிமரபில் வந்தவன்; "மண்டலகோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்ட வன்; உலகமெல்லாம் வென்றுகொண்டவன்; இவன் பெயர் "மண்டலராயன், மண்கொண்டான்" எனவும் வழங்கும்; மண்ட ளியென்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; "மண்கொண்

டான்" என்னுமுரையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "மண்டலராயன் (மண்டராயன்), மண்கொண்டான் (மங்கொண்டான், மங்கண்டான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

சிபியன்—செம்பியன் (சக்ரவர்த்தி) :—நியமி மரபில் வந்தவன்; "செம்பியபுரம்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; கிள்ளைவிடுதூதாகக் குறிஞ்சியைச் சிறப்பித்துப் பாடினவன் ; (இப்பாடல் நற்றிணையில் கOஉ-ம் பாடலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது). சேரநாட்டுக் கழுமலத்தை வென்றவன்; (இதனைச்சிறப்பித்து மாமூலனார் பாடியபாடல் நற்றிணையில் கச-ம் பாடலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது). சரண்புகுந்த புறவுக்காக, அதனைத்துறத்தி வந்த வல்லூறுகிய பருந்துக்கு, தன்தசைமுற்று மரிந்துகொடுத்தும், அப்புறவினிடைக்குச் சமனுகாமையால் தானுந்துலையிலேறிச் சமனுக்கிக்கொடுத்த "முதலெழுவள்ளல்களி" லொருவனுவன்;(பரமசிவன் வல்லூறுகவும், தேவியார் புறவாகவும் வந்தனர்).

(கரு) "உடல் கலக்கற வரிந்துதசை யிட்டுமொருவ
னொருதுலைப்புறவொடொக்கநிறை புக்கபுகழும்."
என்றுகலிங்கத்துப்பரணியும்;

(நஎ) "புள்ளுறு புன்கண் டீர்த்த வெள்வேற்
சினங்கெழு தானைச் செம்பியன்."

(நகூ) "புறவி னல்லல் சொலியக் கறையடி
யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக்
கோனிறை துலாஅம் புக்கோன்."

(சகூ) "புறவி னல்ல லன்றியும் பிறவும்
பலவும் விடுத்தோன்."

(உஉஅ) "சேண்விளங்கு சிறப்பிற் செம்பியன்."
என்று புறநானூறுங்கூறுகின்றன.

குடவாயிற் கீரத்தனர் என்னும் புலவர்பெருமான் புகழ்ந்து பாடப்பெற்றவன் ; (இப்பாடல் அகநானூறில் சச-ம் பாடலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது). இவன் பெயர் "செம்பியரையன்,

செம்பியத்தரையன்" எனவும் வழங்கும்; "செம்பியன்பள்ளி (செம்பொன்பள்ளி), செம்பியன்குடி, (செம்பன்குடி)" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "செம்பியன்மங்கலம், செம்பியன்குடி (செம்பன்குடி), செம்பியன்களர்" என்னுமூர் களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "செம்பியன் (செம்பன்), செம்பியரையன் (செம்பரையன், செம்படையன்), செம்பியத்தரையன் (செம்பியமுத்தரையன், செம்பியமுத்தரசு, செம்பியமுத்திரியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**வங்காரமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "வங்கநகர்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "வங்கன், வங்காரயன், வங்கத்தரையன்" எனவும் வழங்கும்; மிகுதியான பொன்னையுடையவன்; "வங்காரம் பேரையூர், வங்காரம்பேட்டை, வங்கத்தான்குடி, வங்கமங்கலம்" என்னுமூர்களையுண்டாக்கினவன்; இவன்மரபோர்க்கு "வங்கன் (வங்கணன்), வங்கராயன் (அங்கராயன், அங்கரான்), வங்கத்தரையன் (வங்காரமுத்தரையன், வங்காரமுத்திரியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**மலையன்** (சக்ரவர்த்தி) :—செம்பியன்மரபில் வந்தவன்; "திருமலைராயன் பட்டினம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "மலையரையன், மலைராயன், வரைராயன், வரையன், வரையரையன், வெற்பரையன், பொருப்பரையன், இமவான், வெற்பரசு, கல்லரையன்" எனவும் வழங்கும்; பார்வதிதேவியாரை மகளாகப் பெற்றவன்; அப்பார்வதி தேவியார் பரமசிவனைக் கணவனாக அடையும் பொருட்டு, "திருத்துருத்தி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தில் தவம்புரிந்தகாலத்தில், திருமணக்கோலங்கொண்டு வந்த சிவபெருமானை "எதிர்கொள்பாடி" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தில் எதிர்கொண்டழைத்து, "திருமணஞ்சேரி" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தில் "திருமணஞ்செய்து" கொடுத்தவன்.

" மலைமகடோள் புணர்வாயருளாய்—; மையாடிய கண்டன் மலைமகள் பாகம துடையான்—; அரன்மலையான்மருகன்—;மலையான்மகள் கணவன்—; மலையார்தரு மடவாளொரு பாகம் மகிழ்வெய்தி, நிலையார்தரு நிமலன்—; மலைமகடனை யிகழ்வது செய்த மதியறுசிறுமனவனதுயர், தலையினொடழலுருவன காமறமுனிவு செய்தவனுறைபதி—; வரையார்மகளோடு மகிழ்ந்தான்—;வரைக்கும்மகளோடு மகிழ்ந்தான்—; மலையான்மளோடுடனுய்மதிளெய்த, சிலையார்–; மலையாளொரு பாகமமர்ந்தார்—; அந்தமு மாதியுமாகிய வண்ணலா ரழலங்கை யமர்ந்திலங்க, மந்தமுழவ மியம்ப மலைமகள்காணநின்றுடி—; வரை மாமலைவேந்தன் மகண் மகிழநுண்பொடிச்சேரநின்றுடி—;வரைகெழுமங்கைய தாகமோர்பாகமாயவன்—; மாமலைமங்கையொர் பாகமாயவன்—; மாமலையாட்டியுந் தாமும், பன்னு நான்மறைகள் பாடிடவருவார்—; வண்டுசேர் குழலி மலைமக ணடுங்க வாரண முரிசெய்து போர்த்தார்—; மலைமகளோ டிருகூறொன்று யிசைந்தாரும்—; மலைபுரிந்த மன்னவன்றன் மகளை யோர்பான் மகிழ்ந்தாய்—; செழுங்கல் வேந்தன் செல்வி காண—; மணிநீலகண்டமுடைய பிரான்மலைமகளுந்தானு மகிழ்ந்து வாழும்—; மலைமகளோர் பாகமாம் மெய்யினன்—; எந்தைபெருமா னிமவான் மகளோடும்—; மென் கூந்தன் மலையான் மகளோடும்—; வரியார்புலியி னுரிதோலுடையான் மலையான் மகளோடும்—; மலையார்மங்கைபங்கரங்கையனலர்—; மலைமகளவளொடு மருவினர்—; மதிசூடி வரையார்தம், மடந்தைபெம்மான்—; ஆகத்தொருபாக, மலையான் மகளோடு மகிழ்ந்தான்–; மலைமங்கையாகம்பாகமாய்–; மாமலையாளொருபாகம்—; மலைமகள் கூறுடையான்—; மலைமகள், பெருநலமுலையிணை பிணைசெய்தபெருமான்—; மலையுடைமடமகடனை யிடமுடையோன்–; மலைமகள் நிலவிய வுடலினர்—; மலைமகண்முலையிணை மருவிய வடிவினர்—; வடிவுடை மலைமகள் சலமகளுடனமர், பொடிபடு முழையதள் பொலிதிருவுருவினன்—; சிலம்பின் மங்கைதன்னொடுஞ்சேர்வார்—; மலைச்செல்விபிரியாமேனி—; விடலேறுபடநாகமரைக்கசைத்து வெற்பரையன் பாவையோடும்—; மலைமகடுணையெனமகிழ்வர் —; தாரமவர்க்கிமவான்மகள்—; மலைமா துமை

பொன்னணி புணர்ம்முலையிணைதுணை யணைவதும் பிரியார்—; வரையுலாமடமாதுடனாகிய மாண்பதே—; மலைமங்கை மகிழ்ந்தவன்றான்—; வரையான்மகள் காண மகிழ்ந்தவனே—; மலைக்கிறைவன் மங்கையொருபங்கன்—; வெற்பரசு பெற்றமகண்மெய்த்தேன்–; பண்ணமருமென்மொழியினாளை யணைவிப்பான்–; மலைச் சிறுமியோடு மிகுநேசர்—; மலைமங்கை யொருபாகத்துளங்கொள விருத்திய வொருத்தன்–; மலையர் பாவைபாதியர்–; மாமலையான்றன் மடந்தைதோ ளாகம்பாகமாய்ப் புல்கினான்—; மலைமகளை வேறாகநில்லாத வேடமே காட்டினான்—; மலையான்மகளென்னும் பெண்ணார்ந்தமெய்—; கல்லார் மங்கை பங்கர்—; மாமலையாள்கணவன்–; ஏய்ந்ததும்மிமவான்மகளொருபாகமே–; மலைமகள்கணவன்—; மானஞ்சும் மடநோக்கி மலைமகள்பாகமுமருவி–; மலையான்மகளஞ்ச வேழமுரித்தபெருமான்–; பொருப்பான்மகள்கூச வானையுரித்தபெருமான்—; மலைமாதொடுமாதிப்பிரான்—; மலைமாதுடனாய் நீருலாவிய சென்னியன்—; மலைமாதமருந்திருமார்பகலத்தீசன்–; கல்லினர்ப்பாவையொர்பாகத்தர்-; இமவான்மகள்பா லமருந் திருமேனி—; விடமடை மிடற்றினர் வேதநாவினர், மடமொழிமலைமகளோடும் வைகிடம்–; மலைமகள் பாகமா யிருள்கையதோர்கனலெரிகனலவாடுவர்–; வெந்தவெண்பொடியணி வேதியர்விரிபுனல், அந்தமி லணிமலை மங்கையோடமருமூர்—; மலைப்பெண்ணானார் திருமேனியான்—; குன்றின் மங்கைவெருவுறப் புழைநெடுங்கை நன்மாவுரித் ததுபோர்த்துகந்த—; மலையாளொடுமன்னுசென்னிப் பிறையணி செஞ்சடையான்—; வரையான்மகள் பாகமும் வேண்டினையே—; மலைமலி மங்கைபாகம் மகிழ்ந்தான்—; மலையவன்முன் பயந்த மடமாதையொர் கூறுடையான்—; இமவானார்மருமானார்—; மலையாளொரு பாகமுஞ்சேரவைத்தான்—; மலைமகளோடொருபாகம் பிரிவரியார்—; மலையர்மகளாகிய விலங்குநுத லொண்பேதை தடமார்பிடமாகவுறைகின்ற பெருமான்—; மலைவல்லியுமைபங்கனெமையாளுமிறைவன்–; மலையார்நாரியொருபான் மகிழுநம்ப—; பொருப்பரையன் மங்கையொரு பங்கர்—; வெற்பரையன் மங்கையொருப்ங்கர்—; மாமலையர் பாவையொரு பாகநிலைசெய்து—;

நீறுடையமார்பி லிமவான்மகளொர்பாக நிலைசெய்து—; வரைமங்கையொருபாகம்—;மலைமகளொடும் புக்குட னுறைவது—; மலைமகளுருவொருபாகமாவைத்தவர்—; மலைமகள்வெருவமுன் வெறியுறுமதகரியதள்படவுரிசெய்தவிறலினர்—; மலைமகள்குளிரிள வளரொளி வனமுலை யிணையவை குலவலின் நளிரிள்வளரொளி மருவுநள்ளாறர்—; மலைமகள்பூணணி சீதமதணிதருமுகிழிளவனமுலைசெறிதலின், நாதமதெழிலுருவணைய நள்ளாறர்—; மலைமகள் பயனுறு கச்சணி கதிரிள வனமுலையவையொடு கலவலின் நச்சணி மிடறுடையடிக ணள்ளாறர்—; மலைமகள்கதிர்விடு பருமணி யணிநிறக், கண்ணியல் கலசம தனமுலை யிணையொடு கலவலின் நண்ணிய குளிர்புனல் புகுது நள்ளாறர்—; மலைமகளிளவளர் பொன்னணி சூதுறு தளிர்நிறவனமுலை யவையொடு துதைதலின், தாதுறு நிறமுடையடிக ணள்ளாறர்—; மலைமகள் கவினுறு சீர்மலிதருமணி யணிமுலைதிகழ்வொடுசெறிதலின் தார்மலி நகுதலையுடைய நள்ளாறர்—; மலைமக ளிர்நிற மதமிகு பொன்னியன்மணியணிகலசம தனமுலைபுணர்தலின், தன்னியறசமுகனெறிய நள்ளாறர்-; மலைமகள்கதிர்விடு கனமிகு பான்முகமியல்பணை யிணைமுலைதுணையொடு பயிறலின், நான்முகனரியறி வரிய நள்ளாறர்—; மலைமகள் பயனுறு மதிசய, சித்திர மணியணிதிகழ்முலை யிணையொடு செறிதலின் புத்தரொடமணர்பொய் பெயரு நள்ளாறர்–; மலைமகண்மகிழ்தரவீற்றிருந்த, கரியகன் மிடறுடைக் கடவுளார்—; மலைமகள் கதிர்நிலாமுறுவல்செய்தருள—; ஒருபாகம் மலைவளர்காதலி—; மலையான்மகள்பாடத், தேமெரியங்கையிலேந்தியாடும்—; மலைமகளைச் சீருறுமாமறுகிற் சிறைவண்டறையுந்திருநாரை, ஊருறைபெம் மிறைவர்—; வரையான்மகள் பாகன்—; வரைமகளோடுடனுடிதிர்" என்று **திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்** தேவாரமும்;

"மலைமகள் கைக்கொண்டமார்பும்—; மார்தர்பிறைக்கண்ணியானை மலையான்மகளொடும்பாடி—; மலையான்மகட்கு மிறைவர்; மலைமடமங்கையோடும் வடகங்கைநங்கை மணவாளராகி மகிழ்வர்—; மலைமங்கை மணாளன்—; மால்வரை நங்கையைப் பாகமுநயப்பர்–; மலைமகள்கோன்—; மலையினார்மகளோர்பாகமைந்தன்

மலைமகள் பாகத்தான்—; யானையின்றோன் மலைமகள் வெருவப் போர்த்த வழகன்—; இமவான்பெற்ற பெண்ணைகத்தரையர்—; பொருப்பன்மங்கைபங்கனே—; யானையின்றோன் மலைமகணடுங்கப் போர்த்த குழகனே—; தில்லைச்சிற்றம்பலவன் மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள்கண்டு மகிழ்ந்துநிற்க—; இமயமென்னும் குன்றரைக்கண்ணன் குலமகட்பாவைக்குக் கூறிட்டநாள்—; மலையார் மடமங்கை மகிழ்ந்துடனே பாகம்வைத்தாய்—; மலைமகடன்னுடைய பாலனே—; மாமலைமங்கையொர்பால் குறியுடையான்—; மலையார்மடந்தை மனத்தன்—; மலைமகட்கே நேய நிலாவவிருந்தான்—; மலைமகள்பூசை மகிழ்ந்தருளும்—; மலைமகள்கைபால்வருடின—; மாமலை மங்கைபங்கா—; வரைப்பாவையைக்கொண்ட தெக்குடி வாழ்க்கைக்கு—; மலைமகள் நங்கையையுடனேவைத்தநாதனுர்—; இமவான்மகள் வண்டுவார்குழலா ளுடனுகவே;—வெற்பன்மடந்தையோர்கூறன்—; இமவான்மகள் படைக்கணுற் பருகப்படுவான்—; குன்றமகளொடுநின்ற நீலக்குடியரனே—; மலைமாதின் மணுளனே—; மலையான்மகள் ஈட்டவே யிருளாடி—; வரையுடைய மகடவஞ்செய் மணுளன்றன்னை—; இமவான்றன் பேதையோடுமினிதிருந்த பெருமானை—; மலையான்மருகனுய் நின்றுய்நீயே—; மலையார்மடந்தைமணுளன்கண்டாய்—;மலைமங்கைபாகமாக வைத்தவனே—;மலைபெற்ற மகளைவைத்தார்—; மலையரையன்மடப்பாவை மணுளர்போலும்—; மலைமடந்தைகொழுநர்போலும்—; வரையார் மடமங்கைபங்கா—; மலைமகளுநீருமெல்லாங் கரிகாட்டிலாட்டுகந்தீர்—; மலைமகளுங் கங்கையுந் தாமுமெல்லாம்—; மலைமகளைமார்பத்தணைத்தார்போலும்—; இமையமாதொரு கூருயினனே—;குலவரையன் மடப்பாவை யிடப்பாலானை—; வெற்பரையன் பாவை விருப்புளான்காண்—; மலைக்கரையன்றன்பாவையோடுமோருருவாய்நின்றுன்காண்—; மலைவளர்த்த மடமங்கை பாகத்தான்காண்—; தீண்டுவார்மலைமகளுங்கங்கையாளும்—;மலையான்மடந்தைமணுளா போற்றி—; மலையார்பொற்பாவையொடுமகிழ்ந்தநாளோ—;பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாலாரும்—; மலைமகளுஞ் சலமகளுமலிந்துதோன்றும்—; வரைமாதை வாடாமை வைக்கும்மடி—; மகிழ்ந்தானை மலைமகளோர்பாகம்வைத்து—; மலைமங்கைபங்கா—;

மலைமங்கை பங்கன்றான்காண்—; மலைமகடங்கோனவனை—; மலையான்மங்கை கூருகி—; மலைமகளைப் பாகமமர்ந்தார்தாமே—; மலைமகடன் மணாளன்காண்—; மலையார்தம்மகளொடு மாதேவன்சேரும்—; செப்புருவமுலைமலையாள் பாகங்கொண்டார்—; சிலம்பரையன்பொற்பாவை நலஞ்செய்கின்ற" என்று திருநாவுக்கரசு நாயனார் தேவாரமும்;

"மலையான்மடந்தை மணவாளநம்பி—; கூடும் மலைமங்கையொருத்தியுடன்—; வாரிருங்குழன் வாணெடுங்கண்மலைமகண்—; மலைமங்கையை நங்கையைப் பங்கினிற்றங்கவும்—; மலைக்கு மகளஞ்ச மதகரியையுரித்தீர்—; மாமலைமங்கைபங்கா—; மட்டார்பூங்குழன்மலைமகள்கணவனை—;மலையுடையாளொருபாகம்வைத்தார்—; மலையான்மகண் மடமாதிடமாக—; மலைமங்கைநங்கையை யஞ்சவோர் ஆனையீருரிபோர்ப்பர்—; மலைமங்கை திருநிறமும் பரிவுமுடையானை—;மலைக்கோமான்றன்பாவையாகத் தனதுருவமொருபாகஞ்சேர்த்துவித்தபெருமான்—; மலையான்மகடன்மணாளா—; இமவான்மகள் கூறன்றிக் கூறுவதில்லையோ—; வேயனதோளி மலைமகளைவிரும்பிய—; இமவான்மகள் பெரியமனந்தடுமாற—; வெற்பரையன் மடப்பாவைபொறுக்குமோ;—மலையரையன்பொற்பாவை—; கூடினாய் மலைமங்கையை—; மலைமங்கை மணாளன்—; மலையின் மாதினை மதித்தங்கொர்பால்கொண்ட மணியை—; மலைதரு மலைமகள்கணவனை—; மங்கைநங்கை மலைமகள்கண்டுமருவியேத்தி வழிபடப்பெற்ற—; வரையின்பாவை மணாளன்—; வரையின் மடமகள்கேள்வன்—; மைகொள்கண்டரெண்டோளர் மலைமகளுடனுறை வாழ்க்கை—; மாமலைமங்கையுமைசேர் சுவடும்—; மலைமங்கையொர் பங்கினனைப்—; குன்ற மலைக்குமரி கொடியேரிடையாள்" என்று சுந்தரமூர்த்திநாயனார் தேவாரமும்;

"மலையான்மணவாள—; மலைக்குமருகனே—; இமவான்மகட்குத் தன்னுடைக்கேள்வன்—; வரையாடுமங்கைதன்பங்கொடும் வந்தாண்ட—; மலைமகளையொருபாகம் வைத்தலுமே—; மலையரையன் பொற்பாவை வாணுதலாள் பெண்டிருவை யுலகறியத் தீ

வேட்டான்—; மலைமாதொருபாகா—; பருவரை மங்கைதன் பங்கரை" என்று மாணிக்கவாசகசுவாமிகள் திருவாசகமுங் கூறுகின்றன.

"மலைமங்கலம், மலைக்குடி, மலைப்பட்டி, மலையனூர், மலையன்குத்தே" என்னுமூர்களையுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "மலைராயன் (மலையரான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

புள்ளமன் :—செம்பியன் மரபில் வந்தவன்; "புள்ளன்பாடி" என்னும் நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன் ; இவன்பெயர் "புள்ளராயன்" எனவும் வழங்கும்; "புள்ளமங்கை" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; "புள்ளமங்கலம், புள்ளங்குடி, புள்ளம்பட்டி, புள்ளராயன்பட்டி, புள்ளராயன்குடிக்காடு" என்னுமூர்களையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "புள்ளராயன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

துறைமன் :—செம்பியன் மரபில் வந்தவன்; "துறைக்கோட்டை (துறையாண்டான்கோட்டை)" என்னும் நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; இவன்பெயர் "துறையாண்டான்" எனவும் வழங்கும்; "துறையூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும், "துறைப்பூண்டி என்னும் சிவதலத்தையும், "துறையூர், துறைமங்கலம், துறைக்குடி, துறைப்பட்டி, துறைக்குரிச்சி (துவரைக்குரிச்சி), துறையாண்டான்பட்டி" என்னுமூர்களையு முண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு"துறையாண்டான் (துறவாண்டான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

ஆய் :—செம்பியன் மரபில் வந்தவன்; "ஆய்க்கோட்டை, ஆய்ப்பாடி" என்னும் நகரங்களையுண்டுபண்ணி இராசதானிகளாகக்கொண்டவன்; இவன்பெயர் "ஆய்ப்பிரியன் எனவும் வழங்கும்; "ஆய்மூர் என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும், ஆய்மூர், ஆய்மழை, ஆய்மங்கலம், ஆய்ப்பட்டி, ஆய்க்குடி,

ஆய்க்குடி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "ஆய்ப்பிரியன் (ஆளற்பிரியன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

கச்சிமன் :—செம்பியன் மரபில்வந்தவன்; "கச்சி" என்னும் (தேவாரம்பெற்ற எண்ணிறந்த சிவதல) நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன்பெயர் "கச்சிராயன்" எனவும் வழங்கும். "கச்சூர், கச்சியூர், கச்சையூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "கச்சிகுடி, கச்சிமங்கலம் (கச்சமங்கலம்), காஞ்சிப்பட்டி" என்னுமூர்களையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கச்சிராயன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

கூழமன் :—செம்பியன் மரபில் வந்தவன்; மண்ணைவெட்டிச் சோதித்து, பொன்மணலைக் கண்டுபிடித்து உருக்கிப் பொற்கட்டி (பொற்பாளம்) செய்தவன்; இவன் காலமுதல் பூமியில் சுரங்கமுண்டுபண்ணி, "பொன்" எடுக்கும் வழக்கமுண்டாயிற்று; இவன்பெயர் "மண்வெட்டிக்கூழ்வாங்கி, கூழாக்கி" எனவும்வழங்கும்; இவன் பூமியில் சுரங்கமுண்டுபண்ணி பொன் மணலெடுத்ததானம் "கூழையாறு" என்று ஒரு சிற்றூராயிற்று. "கூழையூர், கூழைக்குடி, கூழைமங்கலம், கூழைப்பட்டி" என்னுமூர்களையுண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு "கூழையன், கூழாக்கி, மண்வெட்டிக்கூழ்வாங்கி(மண்வெட்டியில்கூழ்வாங்கி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன. (கூழ்=பொன்).

நந்தியன் :—செம்பியன் மரபில்வந்தவன்; "நந்திபுரம்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; "தோற்காசு" வழங்கச்செய்தவன்; "நந்திமாகுடி, நந்தனூர், நந்திமங்கலம், நந்திவனம்" என்னுமூர்களையுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "நந்தியன் (நந்தன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

கீரமன் :—செம்பியன் மரபில் வந்தவன்; "கீரநகரம் (நகரம்) என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன்பெயர் "கீரங்கொண்டான், கீரமுடையன்,

கீரையன் " எனவும் வழங்கும்; " கீரக்களூர் " என்னும் சிவ தலத்தையும்; " கீரமங்கலம், கீரங்குடி, கீரனூர் " என்னுமூர்க ளையுமுண்டுபண்ணினவன்; இவன்மரபோர்க்கு " கீரமுடையன் (கீருடையன்), கீரையன் (கீரையன், கீரைக்கட்டையன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**கத்தரிமன்** :—செம்பியன் மரபில்வந்தவன்; " கத்தரி " என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் " கத்தரிகொண்டான், கத்தரிநாடன் " எனவும் வழங்கும்; " கத்தரிமங்கலம், கத்தரிக்குடி, கத்தரிக்காடு, கத்தரிப்புலம், கத்தரிக்கொல்லை " என்னுமூர்களையுண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு " கத்தரிகொண்டான் (கத்தூரிமுண்டான்), கத்தரியன் (கத்தூரியன்), கத்தரிநாடன் (கத்திநாடன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**வண்டமன்** :—செம்பியன்மரபில் வந்தவன்; " வண்டை நகரம் " என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன்பெயர் "வண்டயன், வண்டதேவன், வண்டப்பிரியன்" எனவும் வழங்கும்; "வண்டக்காடு, வண்டக்குடி, வண்டமங்கலம், வண்டலூர், வண்டுவாஞ்சேரி, வண்டூர்" என்னுமூர்களையுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு " வண்டன், வண்டயன் (வாண்டயன்), வண்டதேவன், வண்டப்பிரியன், (வாண்டாப்பிரியன்) " என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**வடுகமன்** :—செம்பியன் மரபில்வந்தவன்; "வடுகூர்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன்பெயர் " வடுராயன் என வழங்கும்; " வடுகூர் " என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; வடுகூர் என்னும் சிவதலத்தையும் " வடுகூர், வடுகக்குடி, வடுகச்சேரி, வடுகமங்கலம், வடுகத்தெருமேடு" என்னுமூர்களையுமுண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு " வடுகராயன் (வடுராயன்), என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

புன்னாகமன் :—செம்பியன் மரபில் வந்தவன் ; "புன்னையூர்" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன் ; இவன் பெயர் "புன்னையன்" எனவும் வழங்கும் ; "புன்கூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும், "புன்னைவாயில், புன்னைத்தூர், புன்னையூர், புன்னைக்குடி, புன்னைமங்கலம், புன்னாகன்குடி" என்னு மூர்களையுமுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "புன்னாகன் (புண்ணாக்கன்), புன்னையன் (புனையன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

மழவன் :—செம்பியன்மரபில் வந்தவன் ; மழவன்கோட்டை (மகழன்கோட்டை) என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன் ; இவன் பெயர் "மழவராயன், மழுவாளி" எனவும் வழங்கும் ; "மழபாடி" என்னும் தேவாரம்பெற்ற சிவதலத்தையும் ; "மழவராயநல்லூர், மழவராயன்பேட்டை, மழவன்காடு (மழவனிக்காடு), மழவராயன் குடிக்காடு, மழவராயன்பட்டி" என்னு மூர்களையுண்டுபண்ணினவன் ; இவன்மரபோர்க்கு "மழவராயன் (மழவன்), மழுவாளி (மழுவாடி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

மன்னயன்:—செம்பியன் மரபில் வந்தவன்; "மன்னிப்பள்ளி" என்னும்நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "மன்னியன்" எனவும் வழங்கும்; முல்லைநிலமாக்களில் ஒருவகுப்பாருக்கு "மன்னாரிடையர்" என்னும் பட்டம் கொடுத்தவன்; "மன்னகுடி, மன்னகோட்டகம், மன்னன்காடு, மன்னமங்கலம், மன்னனூர், மன்னார்குடி" என்னு மூர்களையுண்டுபண்ணினவன் ; இவன் மரபோர்க்கு மன்னயன், மன்னியன்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

அச்சுதன் :—செம்பியன்மரபில் வந்தவன் ; "அச்சுதபுரம்" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "அச்சுதராயன், அச்சுததேவன்" எனவும் வழங்கும்; "அச்சுதமங்கலம், அச்சுதன்குடி" என்னுமூர்களையுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "அச்சுதன் (அச்சுத பண்டாரம்), அச்சுததேவன் (அச்சுத்தேவன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

பிரமன் :—செம்பியன் மரபில் வந்தவன்; "பிரமபுரம் (சீகாழி)" என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; "பிரம்பில்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவ தலத்தையும்; "பிரம்பூர்" என்னும் சுப்பிரமணிய தலத்தையும்; "பிரம்பூர்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பிரமன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

வேணு :—பிரமன் மகன்; பிரமபுரத்தை இராசதானியாகக்கொண்டவன்; இவன் காலமுதல் பிரமபுரத்துக்கு "வேணுபுரம்" என்னும்பெயர் வழங்கலாயிற்று; இவன்பெயர் "வேணுடையன்" எனவும்வழங்கும்; இவன் மரபோர்க்கு "வேணுடையன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

ஆத்திமன் :—செம்பியன் மரபில் வந்தவன்; "ஆத்திக்கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; ஆத்திமாலையணிந்தவன்; இவன்பெயர் ஆரக்கண்ணியன், ஆரம்பூண்டான், ஆரஞ்சுற்றி, மாலையிட்டான்" எனவும் வழங்கும்; இவன் காலமுதல் ஆத்திமாலை யணிதலும், "ஆரக்கண்ணியன்" என்னும் பெயரும் வழங்கலாயிற்று; "ஆத்தூர், ஆத்தங்குடி, ஆத்தமங்கலம், ஆரம்பூண்டான்பட்டி" என்னுமூர்களை யுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "ஆரம்பூண்டான் (ஆரமுண்டான்), ஆரஞ்சுற்றி (ஆர்ச்சுத்தி), மாலையிட்டான்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

பரங்கிமன் :—செம்பியன் மரபில் வந்தவன்; "பரக்கலக்கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "பரங்கிராயன்" எனவும் வழங்கும்; பரங்கிமலை, "பரங்கிப்பேட்டை, பரங்கிவெட்டிகாடு, பரம்பைக்குடி, பரமந்தூர்" என்னுமூர்களை யுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பரங்கிராயன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**தாமிரன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "தாமிரங்கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "செம்பிருப்பு" என்னும் (மாடக்கோயில்) சிவதலத்தில் செப்புச்சுரங்கத்தில் "செப்புமணல்" கண்டுபிடித்து உருக்கிச் செப்புக்கட்டி செய்தவன்; "தாமிரங்குடிக்காடு" முதலியவூர்களை யுண்டாக்கினவன்.

**கல்லமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "கல்லாகோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "கற்குடி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும், "கல்லக்குடி, கல்லூர், கல்லகம், கல்லக்குரிச்சி, கல்லுப்பட்டி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

**வேம்பமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "வேம்பனூர், வேப்பூர், வேப்பங்குளம், வேப்பங்காடு, வேப்பஞ்சேரி, வேப்பத்தான்குடி" என்னுமூர்களை யுண்டுபண்ணினவன்.

**நெய்தமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; நெய்த்தானம், "நெய்தவாயில்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "நெய்வாயில், நெய்வேலி, நெய்க்குப்பை, நெய்க்குன்றம்" என்னு மூர்களையுமுண்டாக்கினவன்.

**திட்டைமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "திட்டை" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும், "திட்டைகுடி" என்னும் சிவதலத்தையும்; "திட்டைகுடி, திட்டைச்சேரி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

**ஒக்கமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "ஒக்கூர், ஒக்கக்குடி, ஒக்கமங்கலம்" என்னுமூர்களை யுண்டுபண்ணினவன்.

**நாச்சியார்** :—செம்பியன் மரபில் வந்தவள்; தந்தையால் "முடி" சூட்டப்பெற்று, "நாச்சிக்கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவள்; "நாச்சியார்குடி (நறையூர்ச்சித்தீச்சரம்) என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்," "நாச்சிகுளம், நாச்சிமங்கலம், நாச்சிகுடி" என்னுமூர்களையுமுண்டாக்கினவள்.

**கண்ணன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "கண்ணபுரம்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "கண்ணனூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "கண்ணனூர், கண்ணங்குடி, கண்ணமங்கை, கண்ணன்பாடி, கண்ணகுடி" என்னு மூர்களையுமுண்டுபண்ணினவன்.

**அந்தனன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; அந்தனபுரம் (அருந்தவபுரம்)என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "அந்தனப்பேட்டை, அந்தனக்குரிச்சி, அந்தளி, அந்தவனல்லூர், அந்தவன்புலம் (அருந்தவம்புலம்)" என்னுமூர்களை யுண்டுபண்ணினவன்.

**நாணசேவன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "நாணலூர், நாணமங்கலம் (நாரணமங்கலம்)" முதலியவூர்களை யுண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு "நாணசேவன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**குத்தாலன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "குத்தாலம், குத்தங்குடி (கொத்தங்குடி)" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "குத்தாலம்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

**ஆனைமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "ஆனைக்கா," என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "ஆனைக்குப்பம், ஆனைமங்கலம், ஆனைக்குடி, ஆனைப்பள்ளி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

**கண்டியன்** :—செம்பியன் மரபில் வந்தவன்: "கண்டியூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "(சின்ன) கண்டியூர், கண்டியன்பட்டு (கண்டிதன்பட்டு), கண்டியன்காடு" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கண்டியன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**வில்லிமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "விற்குடி, விற்கோலம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "வில்லியனூர், வில்லிபாக்கம், வில்லிமங்கலம், வில்லியநல்லூர்"

என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "வில்லவராயன், வில்லன்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**கோவலன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "கோமுகியாறு" என்னும் பேராற்றையும்; "கோவலூர், கோவந்தபுத்தூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "கோவந்தகுடி, கோவலான்பேட்டை, கோவலான்பூண்டி, கோவூர், கோவல்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

**பயற்றமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "பயற்றூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "பயற்றங்குடி, பயற்றஞ்சேரி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பயற்றுராயன் (பதுங்கரான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**இறையமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "இறையூர் (மாறன்பாடி)" என்னும் சிவதல நகரத்தை இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "இறையாண்டான்" எனவும் வழங்கும்; "இறையனூர், இறையான்சேரி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "இறையான்குடி, இறையான்சேரி, இறைமங்கலம்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "இறையாண்டான் (இராரண்டான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**இரும்பமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "இரும்புதல் (இரும்புதலை)" என்னும் (தேவாரம்பெற்ற சிவதல) நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "இரும்பை மாகாளம், இருப்பையூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; இருப்பையூர் (இலுப்பூர்), இருப்பைக்குடி (இலுப்பக்குடி), இருமங்கலம், இருங்குளம்" என்னுமூர்களையுமுண்டு பண்ணினவன்.

**அம்பன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "(அம்பர், அம்பர்மாகாளம்" என்னும் இரண்டு சிவதலமுடைய) "அம்பர்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்

கொண்டவன் ; இவன் பெயர் "அம்பராயன், அம்பராண்டான் அம்பர்த்தேவன்" என்வும் வழங்கும் ; "அம்பராயன்பேட்டை (அப்பராசன்பேட்டை), அம்பத்தூர் (அம்பகரத்தூர்), அம்புக்கோயில்" என்னுமூர்களையுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "அம்பராண்டான் (அமரண்டான்), அம்பர்த்தேவன் (அம்மலத்தேவன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

காவலன் :—செம்பியன் மரபில் வந்தவன் ; "காவலகுடி" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; இவன் பெயர் "காவலகுடியன், காவாளி" எனவும் வழங்கும் ; "காவம் (கைச்சினம்)" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும் ; காவளூர், காவனூர்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "காவலகுடியன் (காலாக்குடியன்), காவாளி (காவாலி, காவாடி, காலாடி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

சக்கரமன் :—செம்பியன் மரபில் வந்தவன் ; "சக்கரப்பள்ளி" என்னும் (தேவாரம்பெற்ற சிவதல) நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; இவன் பெயர் "சக்கரராயன், சக்கரநாடன்" எனவும் வழங்கும் ; "சக்கரப்பேட்டை ; சக்கரமங்கலம், சக்கரக்குடி" என்னுமூர்களையுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "சக்கரன் (சக்கரை), சக்கரராயன் (சக்கராயன்), சக்கரநாடன் (சக்கரையப்பநாடாள்வான்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

கூத்தமன் :—செம்பியன் மரபில் வந்தவன் ; இவன் பெயர் "கூத்தப்பராயன்" எனவும் வழங்கும் ; "கூத்தூர், கூத்தனூர், கூத்தன்குடி, கூத்தமங்கலம், கூத்தானல்லூர்" என்னுமூர்களையுண்டுபண்ணினவன் ; இவன் மரபோர்க்கு "கூத்தப்பராயன் (கொத்தப்பராயன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

பள்ளிமன் :—செம்பியன் மரபில் வந்தவன் ; "பள்ளியூர், பள்ளிவர்த்தி, பள்ளியமூலை, பள்ளிவாரமங்கலம், பள்ளிகுடி, பள்ளியகரம், பள்ளிச்சந்தம், பள்ளிமங்கலம்" என்னுமூர்களையுண்டுபண்ணினவன்.

மின்னொளிமன் :—செம்பியன் மரபில் வந்தவன்; "மின்னொளிக்கோட்டை (மின்னுளிக்கோட்டை)" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "மின்கொண்டான், மின்னுளி" எனவும் வழங்கும்; "மின்னூர், மின்னுத்தூர்" என்னுமூர்களையுண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு "மின்கொண்டான், மின்னுளி என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

காடுவேட்டி :—செம்பியன் மரபில் வந்தவன்; காடுகளையெல்லாம் வெட்டி, நாடாக்கினவன்; "காட்டூர், மேலக்காட்டுப் பள்ளி, கீழைக்காட்டுப்பள்ளி" என்னும் (தேவாரம் பெற்ற) சிவ தலங்களையும்; "காட்டூர், காடுவெட்டி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "காடுவெட்டி" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

முதுவன் :—செம்பியன் மரபில் வந்தவன்; "முதுகுன்றம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "முதுக்குடி, முதுகுளம்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

விட்டுணுமன் :—செம்பியன் மரபில் வந்தவன்; "விட்டுணுபுரம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "மாற்பேறு" என்னும் (தேவாரம் பெற்ற) சிவ தலத்தையும்; "விட்டுணம்பேட்டை" முதலியவூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "விட்டுணன் (விற்பனன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

பெண்ணைமன் :—செம்பியன் மரபில் வந்தவன்; "பெண்ணுகடம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "பெண்ணையாறு" என்னும் பேராற்றையுமுண்டாக்கினவன்.

புனமன் :—செம்பியன் மரபில் வந்தவன்; சிறந்த வீரமுடையவன்; வேற்றரசர்களைப் புறங்கண்டவன்; "புனவாயில்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "புனவாயில், புனக்குளம், புனக்குடி, புனமங்கலம்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

**நார்த்தேவன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "நாரையூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; " நார்த்தேவன் குடி (நார்த்தான்குடி), நார்த்தேவன்மங்கலம் (நாரமங்கலம்)" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "நார்த் தேவன் (நார்த்தவான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**குண்டைமன்** :-செம்பியன் மரபில் வந்தவன்; "குண்டை யூர், குண்டூர், குண்டாகோயில், குண்ணூர், குண்ணலூர், குண் ணுவாரந்தி" என்னுமூர்களை யுண்டாக்கினவன்; இவன் மர போர்க்கு " குண்டையன் (கொன்றையன்)" என்னும் பட்டப் பெயர் வழங்குகின்றது.

**வலமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; " வலம்புரம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதல நகரத்தை இராசதானியாகக் கொண்டவன்; " வலஞ்சுழி " என்னும் (தேவாரம் பெற்ற) சிவ தலங்களையும்; " வலங்கமான், வலஞ்சுழி " என்னும் சிவதலங் களையும்; " வலயகாடு, வலச்சேரி " என்னுமூர்களையுமுண்டாக் கினவன்.

**ஒற்றைமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; ஒற்றியூர் என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; " ஒற்றகுடி, ஒற்றன்காடு, ஒற்றனூர், ஒற்றமங்கலம்" என்னுமூர்களையுமுண்டு பண்ணினவன்; இவன் மரபோர்க்கு " ஒற்றையன் " என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**சிக்கமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; " சிக்கல் " என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; " சிக்கல், சிக் கற்பட்டு, சிக்கற்பட்டி " என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

**நீடமன்** :-செம்பியன் மரபில் வந்தவன்; "நீடூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; " நீடாமங்கலம் " முதலிய வூர்களையுமுண்டாக்கினவன்.

**வாட்டமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "வாட்டாட்சி (வாவாசி) கோட்டை " என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் " வாட்டாட்சி"

எனவும் வழங்கும்; "வாட்டாகுடி, வாட்டார்" என்னுமூர்களை யுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "வாட்டாட்சி (வாட்டாச்சி, வாட்சி, வாச்சான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**வேட்டமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "வேட்டக் குடி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; "வேட்ட னூர், வேட்டமங்கலம், வேட்டத்திடல், வேட்டக்காடு" என் னுமூர்களையு முண்டாக்கினவன்; பாலைநிலமாக்களுக்கு "வேடர்" என்னும் பட்டம் கொடுத்தவன்.

**வன்னிமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "வன்னி" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்ட வன்; இவன் பெயர் "வன்னிகொண்டான்" எனவும் வழங்கும்; "வன்னியூர், புகலூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங் களையும்; "வன்னிமங்கலம், வன்னிகுடி, வன்னிப்பட்டு, வன் னிப்பட்டி, வன்னியன்குடிக்காடு" என்னுமூர்களையுமுண்டாக்கி னவன்; இவன் மரபோர்க்கு "வன்னியன், வன்னிகொண்டான் (வன்னிமுண்டான்)" என்னும்பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**மாதையன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "மாதையபட் டினம்" என்னும் அரண்கட்டி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "மாதராயன், மாதயாண்டான்" எனவும் வழங் கும்; "மாதராயன் புதுக்கோட்டை" என்னும் நகரத்தையும்; "மாத்தூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "மாதூர்" என்னும் (மாடக்கோயில்) சிவதலத்தையும்; மாத்தூர் என்னும் சிவதலத்தையும்; "மாத்தூர்" என்னுமூர்களையுமுண் டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "மாதராயன் (மாதுராயன், மாத்துராயன்), மாதயன், மாதயாண்டான்" என்னும் பட்டப் பெயர்கள் வழங்குகின்றன. (இவன் மனைவி கட்டிய "செம்பிய மாதேவிகோயில்" என்னுந் திருக்கோயில் மாதையபட்டினம் கோட்டையின் வடபுறமிருக்கிறது).

புதுவைமன் :—செம்பியன் மரபில் வந்தவன் ; " புதுக் கோட்டை " என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன் ; " புதுக்குடி " என்னும் (தேவாரம் பெற்ற) சிவ தலத்தையும் ; "புதுக்குடி, புதூர், புதுச்சேரி, புதுப்பேட்டை, புதுப்பட்டி " என்னுமூர்களையும் ; " புதுப்பட்டினம் " என்னும் நகரத்தையுமுண்டாக்கினவன்.

மேலைமன் :—செம்பியன் மரபில் வந்தவன் ; " மேலைக் கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; இவன் பெயர் " மேனாட்டரையன், மேனாட்டு ராயன், மேனாட்டுத்தேவன், மேனாடன், மேல்கொண்டான் " எனவும் வழங்கும் ; " மேனாங்குடி, மேல்கொண்டவெளி, மேலை வாயில், மேலைநத்தம்" என்னுமூர்களையுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு " மேனாட்டரையன், மேனாட்டுராயன், மேனாட்டுத் தேவன் (மெட்டத்தேவன்), மேனாடன் (மெனக்கடன்), மேல் கொண்டான் (மேற்கொண்டான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

கோட்டமன் :—செம்பியன் மரபில் வந்தவன் ; " கோட் டைப்பட்டினம் " என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதா னியாகக் கொண்டவன் ; இவன் பெயர் " கோட்டைராயன், கோட்டரையன், கோட்டைப்பிரியன், கோட்டையாண்டான், கோட்டைகொண்டான் " எனவும் வழங்கும் ; " கோட்டூர், கோட்டாறு " என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும், "கோட்டூர், கோட்டுக்காடு, கோட்டுக்கா, கோட்டுச்சேரி, கோட் டாகுடி" கோட்டைப்பத்து என்னுமூர்களையுமுண்டாக்கினவன் ; இவன் மரபோர்கது " கோட்டரையன், கோட்டையாண்டான் (கொட்டையாண்டன்), என்னும் பட்டப்பெயர்கள் வழங்கு கின்றன.

வாணன் :—செம்பியன் மரபில் வந்தவன் ; " வாணரையன் பட்டினம் (வாணுதரையன் பட்டினம்), வாணன்பாடி (வாணியன் பாடி)" என்னும் நகரங்களையுண்டுபண்ணி இராசதானிகளாகக் கொண்டவன் ; இவன் பெயர் " வாணராயன், வாணரையன் "

எனவும் வழக்கும்; "வாணதரை" என்னும் சிவதலத்தையும்; "வாணதரையன் குடிக்காடு" என்னுமூரையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "வாணரையன் (வாணதரையன், வாணதிரியன், வீணதரையன், வீணதிரியன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது. (வாணதரை என்பது கும்பகோணத்தின் ஒரு பகுதியாயிருக்கிறது.)

**கோட்டமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "கொட்டையூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; "கொட்டையூர், கொட்டரகுடி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

**அம்மையன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "அம்மையபுரம்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "அம்மையப்பன், அம்மளூர்" என்னும் ஊர்களையும்; "அம்மணியாறு" என்னும் பேராற்றையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "அம்மையத்தரையன் (அசையாத்தரையன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**துண்டீரன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "துண்டராயன்பாடி" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "துண்டராயன், துண்டயன், துண்டன்" எனவும் வழங்கும்; துண்டராயன்பட்டு, துண்டராயன்பட்டி" என்னுமூர்களை யுண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு "துண்டராயன் (துண்டுராயன்), துண்டயன் (தொண்டயன்), துண்டன் (தொண்டன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**தண்டகன்**.—செம்பியன் மரபில் வந்தவன்; "கச்சி (காஞ்சி)" நகரத்தை இராசதானியாகக் கொண்டவன்; "தண்டலை (நீணெறி), தண்டங்தோட்டம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "தண்டறை, தண்டங்கூர் (தண்டாங்கூறை), தண்டகுடி, தண்டமங்கலம்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

**செல்லமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "செல்லூர், செல்லத்தூர், செல்லப்பிள்ளையார் கோட்டகம்' என்னும் ஊர்களையுண்டாக்கினவன்.

**வீரபோகன்** :—செம்பியன் மரபில் வந்தவன் ; "வீரையன் கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; இவன் பெயர் "வீரங்கொண்டான், வீரப்பிரியன்" எனவும் வழங்கும் ; "வீரபோகம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும் ; "வீரபுரம், வீரமங்கலம், வீரனூர், வீரக்குடி, வீரக்குறிச்சி, வீரமாங்குடி, வீரப்பட்டி, வீராக்கி" என்னும் ஊர்களையுமுண்டுபண்ணினவன். இவன் மரபோர்க்கு "வீரங்கொண்டான் (வீரமுண்டான்), வீரப்பிரியன் (வீரப்பிலியன்)' என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**மல்லியன்** :—செம்பியன் மரபில் வந்தவன் ; "மல்லிபட்டினம்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; இவன் பெயர் "மல்லிகொண்டான்" எனவும் வழங்கும் ; "மல்லியம்" முதலியவூர்களை யுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "மல்லிகொண்டான்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

வல்லபன்:—செம்பியன் மரபில் வந்தவன் ; "வல்லம்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; இவன் பெயர் "வல்லத்தரையன், வல்லமாண்டான், வல்லாளதேவன், வல்லாளி" எனவும் வழங்கும் ; "வல்லம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும் ; "வல்லூர், வல்லம்பாடு, வல்லம்படுகை, வல்லம்" என்னும் ஊர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "வல்லத்தரையன், வல்லாளதேவன், வல்லமாண்டான் (வல்லண்டான்), வல்லாளி (வல்லாடி, வல்விடி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

முல்லைமன் :—செம்பியன் மரபில் வந்தவன் ; "வடமுல்லைவாயில், தென்முல்லைவாயில்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "முல்லைவாயில், முல்லையூர், முல்லைக்குடி" என்னும் ஊர்களையுமுண்டாக்கினவன்.

**விசயன்** :—செம்பியன் மரபில் வந்தவன் ; "விசயபுரம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; இவன் பெயர் "விசயராயன், விசயதேவன்" எனவும்

வழங்கும்; விசயநகரம் என்னும் பட்டினத்தையும்; "விசய மங்கை" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "விச யமங்கலம்" என்னும் சிவதலத்தையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "விசயராயன் (விசுவராயன்), விசயதேவன் (விசா தேவன்)"என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**தெலிங்கமன்**:—செம்பியன் மரபில் வந்தவன்; "தெலிங்கா புரி" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "தெலிங்கராயன், தெலிங்கதே வன்" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "தெலிங்கராயன், தெலிங்கதேவன்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**வழுவைமன்**:—செம்பியன் மரபில் வந்தவன்; "வழுவூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதல நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "வழுவாளி" எனவும் வழங்கும்; "வழுத்தூர்" என்னும் ஊர்களையுமுண் டாக்கினவன். இவன் மரபோர்க்கு "வழுவாளி (வழுவாடி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**கள்ளிமன்**:—செம்பியன் மரபில் வந்தவன்; "கள்ளில்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "கள்ளியூர், கள் ளிக்குடி (கள்ளுகுடி), கள்ளிமேடு, கள்ளிக்காடு, கள்ளிபட்டி (கள்ளம்பட்டி), களிமேடு" என்னுமூர்களையும்; "கள்ளிக்கோட் டை" என்னும் நகரத்தையுமுண்டாக்கினவன்.

**வலிவலன்**:—செம்பியன் மரபில் வந்தவன்; "வலிதாயம் (பாடி)" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதல நகரத்தையுண்டு பண்ணி இராசதானியாகக்கொண்டவன்; "வலிவலம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலம் முதலியவூர்களையுண்டாக்கினவன்.

**கோடியன்**:—செம்பியன் மரபில் வந்தவன்; "கோடிகா" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "கோடியானூர், கோடியக்கரை, கோடுகிளி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

**வீழிமன்** :—செம்பியன் மரபில் வந்தவன் ; "வீழிமிழலை" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும் ; வீழிமங்கலம், வீழியாலத்தூர்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

**குழைமன்** :—செம்பியன் மரபில் வந்தவன்; "குழகு (குழகர்கோயில்)" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும், "குழையூர்" என்னும் சிவதலத்தையுமுண்டாக்கினவன் ; இவன் பெயர் " குழந்தைராயன் " எனவும் வழங்கும் ; இவன் மரபோர்க்கு " குழந்தைராயன் " என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**ஆரியன்**:—" ஆரியப்படையூர், ஆரியமங்கலம், ஆரியங்கா, ஆரியனூர்" முதலிய எண்ணில்லாத வூர்களையுண்டாக்கினவன்.

**சாந்தமன்**:—சாந்தையூர், சாந்தமாணிக்கம், சாந்தமங்கலம், சாந்துபட்டி " முதலியவூர்களை யுண்டாக்கினவன்.

**ஆலி** :—"ஆலி" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; " ஆலிவலம், (அலிவலம்) " என்னுமூர்களை யுண்டுபண்ணினவன்.



## சோழகுல வரலாறு.

**சுராதிராசசோழன்** (சக்ரவர்த்தி):—செம்பியன் மரபில் வந்தவன்; "சோழபுரம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன் ; தன்னுடைய ஆளுகையில் அடங்கிய பூமிக்கு " சோழமண்டலம்" என்று பெயரிட்டவன்; அன்று முதல் இவன் மரபுக்கு " சோழகுலம் " என்னும் பெயரும் ; இவன் தேயத்துக்கு "சோழமண்டலம், சோழநாடு, சோழதேயம்" என்னும் பெயர்களும் வழங்கலாயிற்று ; இவன் பெயர் "சோழன், சோழரையன், சோழராசன், சோழநாயகன், சோழப்பிரியன், சோழாட்சி, சோழகோன், சோழதேவன், சோழநாடன்" எனவும் வழங்கும் ; " சோழமங்கலம், சோழனூர், சோழன்பேட்டை, சோழன்பட்டி, கோழன்குடி, சோழன்குடிக்

காடு, சோழாட்சி (சோமாசி)" என்னுமூர்களையுண்டுபண்ணி னவன்; பிராமணரில் ஒரு வகுப்பாருக்கும், இடையரில் ஒரு வகுப்பாருக்கும், வேளாளரில் ஒரு வகுப்பாருக்கும் "சோழியர்" என்று பட்டங்கொடுத்தவன்; தன்னுடைய மூத்த மகனுக்கு "இராசகேசரி" எனவும், இளைய மகனுக்கு "பரகேசரி" எனவும்பெயரிட்டவன்; இவனுக்குப்பிறகு "இராசகேசரி"யும், அவனுக்குப்பிறகு "பரகேசரி"யும் ஆண்டனர்; பரகேசரிக்குப் பிறகு "அரியாசனம்" ஏறியசோழர்கள் மாறிமாறி "கோவிராசகேசரி, கோப்பரகேசரி" என்னும் பட்டந்தரித்தனர்.

(கச) "சூராதிராசன்முத லாகவரு சோழன்முனநாட்
சோழமண்டல மமைத்தபிற கேழுலகையு
மிராசகேசரி புரந்துபர கேசரிகளா
மிருவராணை புவியாணை யெனநின்ற விதுவும்."

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

இவன் மரபோர்க்கு "சோழன் (சோழவன்), சோழரையன் (சோழதரையன், சோழதிரியன், சோதிரையன்), சோழராசன் (சோமராசன்), சோழநாயகன் (சோமநாயக்கன், சோமணநாயக்கன்), சோழாட்சி (சோமாசி), சோழதேவன் (சோமதேவன்), சோழகோன் (சோழகன்), சோழப்பிரியன், சோழநாடன்" (சோமநாடான்) என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன. (இராசகேசரி காலத்துக்கு முற்பட்ட கல்வெட்டுகள் காணப்படவில்லை).

குமாரசோழன் :—சூராதிராசசோழன் மரபில் வந்தவன்; "குமாரபுரம்" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "குமாராண்டான்" எனவும் வழங்கும்; "குமாரமங்கலம், குமாரங்குடி, குமாரனூர்" என்னுமூர்களையுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "குமாராண்டான் (குமரண்டான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

பாப்பன சோழன் :—சூராதிராசசோழன் மரபில் வந்தவன்; "பாப்புநகரம்" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டு, "தெற்குக்கோட்டை, வடக்குக்கோட்டை" என்று இருகூறாகப்பிரித்தவன்; இவன் பெயர் "பாப்பரையன், பாப்பு

டையன், பாப்பிரியன், பாப்புவெட்டி" எனவும் வழங்கும்; "பாப்புமங்கலம், பாப்பனசேரி, பாப்பாகோயில், பாப்பாகுடி, பாப்பூர், பாப்பரையன்பட்டி, பாப்புடையன்பட்டி" என்னு மூர்களையுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பாப்பரையன், பாப்புடையன், பாப்பிரியன், பாப்புவெட்டி (பாப்புரெட்டி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

**அத்தி சோழன்:**—சூராதிராசசோழன் மரபில் வந்தவன்; "அத்திக்கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் அத்திகொண்டான், அத்தியாண்டான், அத்திப்பிரியன், அத்தியாளி, அத்தியுடையன்" எனவும் வழங்கும்; அத்தங்குடி, (அதங்குடி)" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; அத்திக்கரை, அத்திப்பட்டு" என்னும் (திருப்புகழ் பெற்ற) சுப்பிரமணிய தலங்களையும்; "அத்திப்புலியூர்" என்னும் சிவதலத்தையும்; "அத்தி சோழமங்கலம், அத்திக்கடை, அத்திப்பேட்டை, அத்தியூர் அத்திப்பாக்கம், அத்திவெட்டி, அத்திக்குடி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "அத்திப்பிரியன் (அத்திரியன், அத்திரிமாக்கி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**காங்கமசோழன்** (சக்ரவர்த்தி):—சூராதிராச சோழன் மரபில் வந்தவன்; "காங்கயம் (காங்கயன்பட்டி)" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "காங்கயன்" எனவும் வழங்கும்; இவன் "காலனுக்கு இது வழக்கென்று" போதித்தவன்.

(கரு) "காலனுக்கிது வழக்கென வுரைத்தவவனும்."
என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

இவன் மரபோர்க்கு "காங்கயன் (காங்கியன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**பஞ்சநதி சோழன்** (சக்ரவர்த்தி):—காங்கம சோழன் மரபில் வந்தவன்; "பஞ்சநதிக்கோட்டை" என்னும் நகரத்தை யுண்டு பண்ணி இராசதானியாகக்கொண்டவன்; "காவிரி, கபிலை,

பவானி, நொய்யல், ஆன்பொருனை" என்னும் ஐயாற்றையும் ஒன்றுசேர்த்துக்கொணர்ந்து புகார்ப்பட்டினத்தில் கடலிற் சேர்த்து "பொன்னி" என்று பெயரிட்டவன்.

(கரு) "காவிரிப்புனல் கொணர்ந்தவவ னும்புவனியின்."

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகின்றது.

இவன் பெயர் "காவிரிச்சோழன், காவிரிகண்டசோழன், காவிரிவெட்டிய சோழன், பஞ்சநதரையன், பஞ்சநதிகொண்டான், பஞ்சநதியாண்டான், பஞ்சநதிப்பிரியன், பஞ்சநதியாளி" எனவும் வழங்கும்; "ஐயாறு (பஞ்சநதீச்சரம்)" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும்; "பஞ்சநதிக்குளம்" என்னுமூரையுமுண்டாக்கினவன்; இவன் காலமுதல் சோழநாட்டுக்கு "காவிரிநாடு, பொன்னிநாடு, புனனாடு" என்னும் பெயர்களும்; காவிரியின் வடபுறமுள்ள சோழநாட்டுக்கு "வடகரைநாடு" என்னும் பெயரும்; காவிரியின் தென்புறமுள்ள சோழநாட்டுக்கு "தென்கரை நாடு" என்னும் பெயரும்; சோழர்களுக்கு "காவிரிநாடன், பொன்னிநாடன், பொன்னித்துறைவன், புனனாடன்" என்னும் பெயர்களும் வழங்கலாயிற்று. இவன் மரபோர்க்கு "பஞ்சநதரையன் (பஞ்சரையன்), காவிரிவெட்டி (காவெட்டி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

கொள்ளிசோழன்:—பஞ்சநதசோழன் மரபில் வந்தவன்; "பஞ்சநதிக்கோட்டை"யை இராசதானியாகக் கொண்டவன்; "கொள்ளிக்காடு, கொள்ளம்பூதூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "கொள்ளிடம்" என்னும் பேராற்றையும்; "கொள்ளிக்காடு, கொள்ளிமங்கலம், கொள்ளிக்குடி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

முள்ளிசோழன்:—பஞ்சநதசோழன் மரபில் வந்தவன்; "பஞ்சநதிக்கோட்டை"யை இராசதானியாகக் கொண்டவன்; "முள்ளியாறு" என்னும் பேராற்றை காவிரியினின்று பிரித்து "பூந்துருத்தி, கண்டியூர், வேதிகுடி, திட்டை, கருகாவூர், ஆலங்குடி, கொள்ளம்பூதூர், அத்தங்குடி, வெண்டுறை, கோட்டூர்; துறைப்பூண்டி, அளப்பூர்" என்னும் சிவதலங்களின்

வழியாக மறைக்காட்டுக்கோடியில் கடலிற் சேர்த்தவன்; "(காளுட்டுமுள்ளூர்)" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தை யும்; "முள்ளூர்" என்னூமூர்களையுமுண்டாக்கினவன்.

பாண்டுசோழன் :—பஞ்சநதசோழன் மரபில் வந்தவன்; "பஞ்சநதிக்கோட்டை"யை இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "பாண்டராயன்" எனவும் வழங்கும்; "பாண்ட வாய்" என்னும் ஆற்றையும்; "பாண்டூர்" என்னும் சிவதலத்தை யும்; பாண்டூர், பாண்டுகுடி, பாண்டுமங்கலம் (பாண்டமங்கலம்), பாண்டராயன்பட்டி"என்னூமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பாண்டராயன்" என்னும் பட்டப்பெயர் வழங்கு கின்றது.

வெண்ணிசோழன் :—பஞ்சநதசோழன் மரபில் வந்தவன்; "வெண்ணிமங்கலம் (விண்ணமங்கலம்)" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "வெண்ணி யாறு (வெண்ணாறு)" என்னும் பேராற்றை "தோவூர்" என்னு மிடத்தில் காவிரியினின்று ஒரு கிளையாகப்பிரித்து "வெண்ணி வாயில் (வெண்ணவாசல்)" என்னுமிடத்தில் முள்ளியாற்றிற் சேர்த்தவன்; ("வெண்ணித் தென்கரைப் பூவனூர்—" என்று தேவாரங் கூறுகின்றது). "வெண்ணி (கோவில்வெண்ணி), வெண்ணெய்நல்லூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களை யும்; "வெண்ணிப்பட்டி (விண்ணனூர்ப்பட்டி), வெண்ணிகுடி (வெண்ணகுடி)" என்னூமூர்களையுமுண்டாக்கினவன்.

அரியசந்திரசோழன்—பஞ்சநதசோழன் மரபில்வந்தவன்; "அரியசந்திரபுரம்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதல நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; இவன்பெயர் "அரியதன், அரிப்பிரியன்" எனவும்வழங்கும்; காவிரியினின்று "அரிசிலாறு" என்னும் பேராற்றையும்; முள்ளியாற்றினின்று "அரியசந்திரநதி" என்னும் ஆற்றையும்; "அரியனூர், அரிய மங்கை, அரியக்குடி"என்னூமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "அரியதன், அரிப்பிரியன் (அரியப்பிள்ளை)" என் னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன. (தேவாரம் "அரிசில்" என்று கூறுகின்றது).

**விளப்பசோழன்** :—பஞ்சநதசோழன்மரபில்வந்தவன்; "விள நகர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதல நகரத்தையுண்டு பண்ணி இராசதானியாகக்கொண்டவன்; "விளப்பாறு" என்னும் ஆற்றையும்; "விளமர், விளத்தூர், விளத்தொட்டி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "விளத்தூர், விளக்குடி, விளாங்குடி, விளார், விளங்குளம், விளமங்கலம்" என்னு மூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "விளப்பன் (விற்பனன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

**சித்தசோழன்** :—பஞ்சநதசோழன் மரபில் வந்தவன்; "சித்தலபாடி" என்னும் நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன்பெயர் "சித்தாட்சி" எனவும் வழங்கும்; "சித்தாறு" என்னும் சிற்றாற்றையும்; "சித்தாமூர் (சித்தாம்பூர்)" என்னும் விநாயக தலத்தையும்; "சித்தாமூர் (சித்தாம்பூர்)" என்னும் சிவதலத்தையும்; "சித்தூர், சித்தாற்றூர், சித்தலூர், சித்தரகுடி, சித்தகாடு, சித்தபத்து" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன்மரபோர்க்கு "சித்தாட்சி (சிற்றாட்சி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

புத்திகழிச்ச (அறிவின்மிகுந்த) சோழன் :—பஞ்சநதசோழன் மரபில்வந்தவன்; "புத்திகழிச்சான்கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "புத்திகழிந்தான்" எனவும் வழங்கும்; "புத்தூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "புத்தபுரம், புத்தூர், புத்தகுடி, புத்தமங்கலம், புத்தங்கோட்டகம் என்னு மூர்களையும்; "புத்தாறு" என்னும் சிற்றாற்றையும் உண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "புத்திகழிந்தான் (புற்றில் கழிந்தான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

வளவசோழன் :—பஞ்சநதசோழன்மரபில் வந்தவன்; இவன் காலமுதல் சோழர்களுக்கு "வளவன்" என்னும் பெயரும்; சோழநாட்டுக்கு "வளநாடு" என்னும் பெயரும்வழங்கலாயிற்று; "வளவனாறு" என்னும் சிற்றாற்றையும்; "வளவனூர், வளவநல்லூர், வளவன்பட்டி, வளத்தாமங்கலம்" என்னுமூர்களையு

முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "வளவன் (வளம்பன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

பசுபோகசோழன் :—பஞ்சநதசோழன் மரபில் வந்தவன் ; "ஆவூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதல நகரத்தையுண்டு பண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன்பெயர் "பசுபதி" எனவும் வழங்கும், "ஆவடுதுறை, ஆப்பாடி, பசுபதிமங்கை (பசுபதிகோயில்)" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களை யும்; "பசுபோக ஆறு" என்னும் சிற்றாற்றையுமுண்டாக்கின வன் ; இவன் மரபோர்க்கு "பசுபதி (பசும்படி)" என்னும் பட் டப்பெயர்வழங்குகின்றது; (பசுபோகஆறு மறைந்துபோயிற்று).

மண்ணி சோழன்:—பஞ்சநதசோழன் மரபில் வந்தவன்; "மண்ணி" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியா கக்கொண்டவன்; இவன்பெயர் "மண்ணிராயன், மண்ணியன்" எனவும் வழங்கும்; "மண்ணியாறு" என்னும் ஆற்றையும்; "மண்ணிப்படிக்கரை" என்னு (தேவாரம்பெற்ற) சிவதலத் தையும்; "மண்ணிப்பள்ளம்" என்னுமூரையு முண்டாக்கின வன் ; இவன் மரபோர்க்கு மண்ணிராயன் (மணிக்கராயன்), மண்ணியன் (மண்ணையன், மணியன்)" என்னும் பட்டப்பெயர் கள் வழங்குகின்றன.

அண்டசோழன் (சக்ரவர்த்தி) :—பஞ்சநதசோழன் மரபில் வந்தவன் ; "அண்டபுரம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன்பெயர் "அண்டங்கொண் டான், அண்டமாண்டான், அண்டப்பிரியன், அண்டமர்ளி" என வும் வழங்கும்; "அண்ணமலை" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; அண்டக்குடி (அண்ணுகுடி), அண்டக்குளம், அண்டத்துறை" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; "சுவர்க் கம், அந்தரம், பூமி" என்னும் உலகங்களையெல்லாம் போர் செய்து வென்றுகொண்டவன்.

(கரு) "மேலனைத்துலகு மிவ்வகில லோகமுமெலாம்
வென்றுகொண்டவனு மென்றிவர்கள் கொண்ட விறலும்."

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

இவன் மரபோர்க்கு "அண்டங்கொண்டான் (அண்ணுண்டான்), அண்டப்பிரியன் (அண்ணுப்பிரியன், அண்ணுத்திப்பிரியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

வீரவாதித்த சோழன்:—அண்டசோழன் மரபில் வந்தவன்; உறையூரை இராசதானியாகக்கொண்டவன்; இவன் திருவுலாப் போகும்போது ஏறியிருந்த யானையை, தெய்வத்தன்மைபொருந்திய ஒரு கோழி போர்செய்துவென்றகாரணத்தினால் இவனுக்கு "கோழியன், கோழியர்கோன், கோழிவேந்தன்" என்னும் பெயர்களும்; அந்நகருக்கு "கோழியூர், கோழிநகர்" என்னும் பெயர்களும்; அந்நகரத்திலுள்ள திருக்கோயிலுக்கு "குக்குடேசரம், மூக்கீச்சரம்" என்னும் பெயர்களும் வழங்கலாயிற்று. இவன்காலமுதல் சோழர்களுக்கு "கோழியன், கோழிவேந்தன், கோழியர்கோன்" என்னும் பெயர்கள் வழங்கின; இவன் "கோழியின்" உருவம் அமைக்கப்பெற்ற நாணயங்கள்வழங்கச்செய்தான்; அக்காலமுதல் சோழராளுகையுள்ளவரையில் "கோழியின்" உருவம் அமைக்கப்பெற்ற நாணயங்களே வழங்கின; இக்காலத்திலும் பூமியிற்கிடந்தகப்படும் பழைய செப்பு நாணயங்களில் "கோழியின்" உருவத்தைக் காணலாகும்; இவன் மரபோர்க்கு "கோழியன், (கோழயன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

புகழ்ச்சோழன்:—அண்டசோழன் மரபில் வந்தவன்; "முன்னே உறையூரையும், பின்னே கருவூரையும்" இராசதானியாகக்கொண்டவன்; சிவபெருமானுக்குச்சாத்தும்பொருட்டு "சிவகாமியாண்டார்" என்னும் சிவனடியார் கொண்டுபோன பூவைப்பறித்துச் சிந்திய யானையையும் பாகரையுங் கொன்ற எறிபத்த நாயனரிடத்கிவ் தன்னையுங் கொல்லும்படி, வாளைக் கொடுத்தவன்; திறைகொடாத "அதிகன்" என்னும் சேரலனைத் தன் படைகளை யனுப்பி வென்று, அப்போரில் கொய்து கொணர்ந்த தலைகளில் ஒன்றில் சடையைக்கண்டு, சிவனடியார் தலையென நினைந்து வருந்தி, அதனை ஒரு கலத்தில் சிரத்தில் ஏந்திக்கொண்டு தீயில் மூழ்கினவன்.

"பொழிற் கருவூர்த்துஞ்சிய புகழ்ச்சோழன்."

என்று தேவாரத் திருத்தொண்டத்தொகையும்;

"புலமன்னியமன்னனைச் சிங்களநாடு பொடிபடுத்த
குலமன்னிமபுகழ்க் கோகனநாதன் குலமுதலோ
னலமன்னியபுகழ்ச் சோழனதென்பர் நகுசுடர்வாள்
வலமன்னியவெறி பத்தனுக் கீந்தொர் வண்புகழே".

என்று திருத்தொண்டத்திருவந்தாதியும்;

பொழின்மருவுங் கருவூர்வாழ் புகழார்சோழர்
போதகம்போ வென்னுயிரும் போக்குமென்றே
யழலவிர்வாள் கொடுத்தபிரா னதிகைமான்மே
லடர்த்தபெரும் படையேவ வவர்கொண்டேய்ந்த
குழல்விழிகொ டலைகாண்பார் கண்டதோர்புன்
சடைத்தலையை முடித்தலையாற் றாழ்ந்துவாங்கிக்
கழல்பரவி யதுசிரத்தி னேந்திவாய்ந்த
கனன்மூழ்கி யிறைவனடி கைக்கொண்டாரே."

என்று திருத்தொண்டர் புராணசாரமுங் கூறுகின்றன.

(இவன் அறுபத்து மூன்று நாயன்மார்களிலொருவன்).

**பெரும்பற்றசோழன் (சக்ரவர்த்தி):**—அண்டசோழன் மரபில் வந்தவன்; "பெரும்பற்ற புலியூர் (சிதம்பரம்)" என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; இந்திரனைத்தன்கொடியில் "புலி" என்று வைத்தவன்; இவன் பெயர் "புலிராயன், புலிகொண்டான், புலிக்கொடியன்" எனவும் வழங்கும்; இவன் காலமுதல் சோழர்களுக்கு புலிக்கொடியும், "புலிக்கொடியோன்" என்னும் பெயருமுண்டாயிற்று; "பெரும்புலியூர், புலிவலம், புலிவனம்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "புலிமங்கலம், புலிக்குடி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

(கசு) "புலியெனக்கொடியி லிந்திரனை வைத்தவனும்."

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

இவன் மரபோர்க்கு "புலிராயன், புலிகொண்டான் (பிலிமுண்டான்), புலிக்கொடியன் (புலிக்குட்டியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

கூரசோழன் :—பெரும்பற்றசோழன் மரபில் வந்தவன்; "கூராட்சிகோட்டை (கூப்பாச்சிகோட்டை)" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன்பெயர் "கூரராயன், கூராண்டான், கூராட்சி, கூரப்பிரியன், கூராளி" எனவும் வழங்கும்; "கூரூர் (கூகூர்)" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; கூரூர் (கூகூர்)" என்னுமூர்களையும்; "கூரயாறு (கோரையாறு)" என்னும் பேராற்றையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கூரராயன் (கூர்சான்) என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

பாம்பசோழன் (சக்ரவர்த்தி) :—பெரும்பற்ற சோழன் மரபில் வந்தவன்; "பாம்புரம்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதல நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "பாம்புகொண்டான், பாம்பாண்டான், பாம்புடையன், பாம்புப்பிரியன், பாம்பாளி" எனவும் வழங்கும்; சோழதேயத்துக்கும் சிங்களதேயத்துக்கும் கப்பல் வியாபாரம் நடைபெறும் பொருட்டு "பாம்பன் கால்வாய்" என்னும் ஓர் பெரிய கால்வாயை யுண்டுபண்ணி வங்காளக்குடாக்கடலை இரத்திஞகரக் கடலில் புகவிட்டு அதன் கரையில் "பாம்பன்" என்னும் நகரத்தையுண்டுபண்ணினவன்.

(கசு) "புணரியொன்றிடை யொன்றுபுக விட்டவனும்". என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

"பாம்புணியாறு" என்னும் பேராற்றையும்; "பாம்புணி, பாம்பணி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "பாம்பாறு" என்னும் காட்டாற்றையும்; "பாம்பூர்" முதலியவூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பாம்பாளி (பம்பாளி, வம்பாளி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

மயிலாடுசோழன் :—பாம்பசோழன் மரபில் வந்தவன்; முன்னர் "மயிலாடுகோட்டை" என்னும் நகரத்தையும்; பின்னர் "திருமயில்கோட்டை" என்னும் சிவதல நகரத்தையுமுண்டுபண்ணி இராசதானிகளாகக்கொண்டவன்; இவன் பெயர் மயிலாண்டான்" எனவும் வழங்கும்; "மயிலாடுதுறை, மயிலாப்

பூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; "மயிலாடி" என்னும் சிவதலத்தையும்; "(பழைய) மயிலம்" என்னும் (திருப்புகழ்பெற்ற) சுப்பிரமணியதலத்தையும்; "மயிலடிபுரம், மயின்மங்கலம்" முதலிய வூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "மயிலாண்டான் (மயிலண்டான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது. (பைங்கானாட்டின் தென்புறமிருக்கிற "திருமயிலேறி (திருமேரி)" இவனாலுண்டாக்கப் பட்டது).

சந்திரசோழன்:—பாம்பசோழன் மரபில் வந்தவன்; "சந்திரப்பாடி" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "சந்திரதேவன், சந்திரங்கொண்டான், சந்திரப்பிரியன்" எனவும் வழங்கும்; "சந்திரலேகைப் பெருந்துறை (செந்தலை)" என்னும் சிவதலத்தையும்; "சந்திரநதி" என்னும் சிற்றாற்றையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "சந்திரங்கொண்டான், சந்திரதேவன் (சம்பிரதேவன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

நீலசோழன்:—பாம்பசோழன்மரபில் வந்தவன்; "வெள்ளம்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "வெள்ளைராயன், வெள்ளரையன், வெள்ளங்கொண்டான், வெள்ளாண்டான், வெள்ளப்பிரியன், வெள்ளுடையன், வெள்ளாளி" எனவும் வழங்கும்; "வெள்ளர்ம்பிரம்பூர்" என்னும் சிவதலத்தையும்; "வெள்ளைக்குடி, வெள்ளுகுடி, வெள்ளூர், வெள்ளங்கால், வெள்ளமங்கலம்" என்னூர்களையும்; "நீவா நதி" என்னும் ஆற்றையும்; நீவா நதி என்னும் வடவெள்ளாற்றையும், தென்வெள்ளாற்றையும்; "வெள்ளையாறு (வள்ளையாறு)" என்னும் சிற்றாற்றையும் உண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "வெள்ளங்கொண்டான்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

வாஞ்சிசோழன்:—பாம்பசோழன் மரபில் வந்தவன்; "வாஞ்சியம்" என்னும் (தேவாரம் பெற்ற சிவதல) நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர்

"வாஞ்சிராயன்" எனவும் வழங்கும்; "வாஞ்சியாறு" என்னும் சிற்றாற்றையும்; "வாஞ்சியூர், வாஞ்சிமங்கலம், வாஞ்சிகுடி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "வாஞ்சிராயன் (விஞ்சிராயன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

பொன்னசோழன் :–பாம்பசோழன் மரபில் வந்தவன்; "பொன்னவராயன்கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "பொன்னங்கொண்டான், பொன்னுண்டான், பொன்னப்பிரியன், பொன்னுடையன், பொன்னுளி" எனவும் வழங்கும்; "பொன்னூர் என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; "பொன்னூர், பொன்னிறை, பொன்பெற்றி, பொன்னகுடி, பொன்னுப்பூர், பொன்னமங்கலம், பொன்னேரி" என்னுமூர்களையும்; "பொன்னுகொண்டான், பொன்னாறு என்னும் சிற்றாறுகளையு முண்டாக்கினவன்; "தில்லை" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தில் சபாநாயகப்பெருமானுக்கு "பொன்னம்பலம்" என்னும் திருக்கோயிலுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பொன்னங்கொண்டான் (பொன்னமுண்டான்), பொன்னுண்டான் (பொன்னுப்பூண்டான்), பொன்னுளி (பொன்னுனி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

ஐவசோழன் :—பாம்பசோழன்மரபில் வந்தவன்; "ஐயனுபுரம்" என்னும் நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "ஐயங்கொண்டான், ஐயாண்டான், ஐயப்பிரியன், ஐயுடையன், ஐயாளி" எனவும் வழங்கும்; "ஐவூர், ஐயூர், ஐவனல்லூர், ஐயன்பேட்டை" என்னுமூர்களையும், "ஐயனுறு, ஐயவையனுறு" என்னும் சிற்றாறுகளையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "ஐயப்பிரியன் (ஐரைப்பிரியன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

வேட்டுவசோழன் :—பாம்பசோழன் மரபில் வந்தவன்; "வெட்டுவாகோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "வெட்டுவ

ராயன், வெட்டுவாகொண்டான், வெட்டுவாண்டான், வெட்டுவாப்பிரியன், வெட்டுவாளி" எனவும் வழங்கும்; "வெட்டாறு" என்னும் பேராற்றை வெண்ணியாற்றின் ஒருகிளையாக (தென்பிரம்பூருக்கருகில்) பிரித்து (வேதிகுடிக்கருகில்) முள்ளியாற்றிற் சேர்த்து, கொரடாச்சேரிக்கருகில் கிழக்கே திருப்பி, நாகூருக்கருகில் கடலில் சேர்த்தவன்; (வெட்டாற்றை "முள்ளியாறு" என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் புராணம் அ௲௯-ம் பாடல் கூறுகிறது); பூந்துருத்திக்கும் வேதிகுடிக்குமிடையிலிருந்த முள்ளியாற்றின் சொரூபமும், கொரடாச்சேரிக்கும் வெண்ணிவாயிலுக்குமிடையிலிருந்த முள்ளியாற்றின் சொரூபமும் மறைந்துபோயின. இவன் மரபோர்க்கு "வெட்டுவராயன் (வெட்டுவன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

பூதசோழன்:—பாம்பசோழன் மரபில் வந்தவன்; "பூதலூர்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "பூதரையன், பூதராயன், பூதகொண்டான், பூதாண்டான், பூதப்பிரியன், பூதாளி எனவும் வழங்கும்; "பூதாறு" என்னும் சிற்றாற்றை கூத்தாநல்லூருக்கருகில் முள்ளியாற்றிற் பிரித்து, அரிச்சந்திர நதியிற் சேர்த்தவன்; கூரயாற்றில் தட்டான்கோவிலுக்கருகில் இரண்டு கிளைகள் பிரித்து வடகிளையை அரிச்சந்திர நதியிலும், தென்கிளையை முள்ளியாற்றிலும் சேர்த்து கூத்தாநல்லூருக்கும் வெண்டுறைக்குமிடையிலிருந்த முள்ளியாற்றின் சொரூபத்தைச் சிதைத்தவன்; "பூதமங்கலம், பூதங்குடி, பூதனூர், பூதராயநல்லூர் என்னுமூர்களையுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பூதரையன் (போதரையன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

ஓடம்போகிசோழன்:—பாம்பசோழன் மரபில் வந்தவன்; "ஓடம்போகி" என்னும் ஆற்றையும்; ஓடாச்சேரி, ஓட்டப்பிடாகை, ஓட்டப்பிடாரம், ஓட்டத்தட்டை, ஓட்டக்குடி என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "ஓடம்போகி (ஓட்டம்பிடிக்கி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

சாளுவசோழன் :—"சாளுவராயன்பட்டினம்" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன் ; இவன் பெயர் "சாளுவராயன், சாளுவன்" எனவும் வழங்கும் ; "சாளுவனாறு" என்னும் சிற்றாற்றையும் ; "சாளுவன்பேட்டை முதலியவூர்களையு முண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "சாளுவன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

வடமசோழன் :—"வடகுடி (காட்டுமன்னார்குடி)" என்னும் சிவதல நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன் ; பிராமணர்களில் ஒரு வகுப்பாருக்கு "வடமன்" என்னும் பட்டங்கொடுத்தவன் ; "வடவாறு" என்னும் சிற்றாற்றையும் ; "வடவலூர், வடகாடு, வடவேற்குடி, வடசேரி, வடபாதிமங்கலம், வடபாதி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

மறவசோழன் :—"மறக்காணம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன் ; "மறக்காக்கரை" என்னும் சிற்றாற்றையும் ; "மறக்கானூர், மறக்கடை, மறப்பாளையம், மறவக்காடு" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

அடைவளைசோழன் :—"அடைக்கப்பட்டு" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன் ; இவன் பெயர் "அடைக்கப்பட்டான், அடைவளைந்தான்" எனவும் வழங்கும் ; "அடைப்பாறு" என்னும் ஆற்றையுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "அடைக்கப்பட்டான், அடைவளைந்தான்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

சோக்கசோழன் :—"சொக்கநாதபுரம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன் ; இவன் பெயர் "சொக்கராயன்" எனவும் வழங்கும் ; "சொக்கனூர், சொக்கன்பட்டி" என்னுமூர்களையுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "சொக்கராயன் (சுக்கிரன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

உலகநாதசோழன் :—"உலகக்குண்டம் (உலயக்குண்டம்)" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "உலகாண்டான், உலகங்கொண்டான், உலகுடையன், உலகங்காத்தான்" எனவும் வழங்கும்; "உலகக்காத்தான்பட்டி" முதலிய வூர்களை யுண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு "உலகுடையன், உலகங்காத்தான்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

மாங்கை சோழன் :—"மாங்கை" என்னும் நகரத்தையுண்டு பண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன்பெயர் "மாங்கைராயன், மாங்கையரையன், மாங்கைகொண்டான், மாங்கையாண்டான், மாங்கைப்பிரியன், மாங்கையுடையன், மாங்கையாளி" எனவும் வழங்கும்; "கீழைமாந்துறை, மேலைமாந்துறை" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "மாந்துறை" என்னும் சிவதலத்தையும்; "மாந்துறை, மாங்கைகுடி" என்னுமூர்களையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "மாங்கையரையன் (மாந்தரையன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

கலிக்காமசோழன் :—"கலியாணபுரம்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன்பெயர் "கலியன். கலிராயன், கலியரையன், கலியாண்டான், கலிகொண்டான். கலிப்பிரியன், கலியுடையன், கலியாளி, கலியாட்சி" எனவும் வழங்கும்; "கலிக்காமூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; "கலியாணோடை" முதலிய வூர்களையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கலியன், கலியாட்சி (கலிச்சி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

ஈசசோழன் :—"ஈங்கை" என்னும் நகரத்தை யுண்டு பண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "ஈங்கொண்டான், ஈங்காண்டான்" எனவும் வழங்கும்; "ஈங்கோய்மலை" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; "ஈங்கூர், ஈஞ்சூர், ஈசனூர், ஈசனக்குடி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "ஈங்கொண்டான்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

வேண்டசோழன் :—" வெண்டாகோட்டை " என்னும் நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன் ; இவன் பெயர் " வெண்டன் " எனவும் வழங்கும் ; இவன் " வெண்காடு, வெண்டுறை, வெண்பாக்கம் " என்னும் (தேவாரம்பெற்ற) சிவ தலங்களை யுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "வெண்டன் (வென்றான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

தக்கோல சோழன் :—" தக்கோலம் " என்னும் (தேவாரம் பெற்ற) சிவதல நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன் ; " தக்களூர் தகட்டூர், " என்னும் (தேவாரம்பெற்ற) சிவ தலங்கள் முதலியவூர்களை யுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு " தக்கோலன் (தாக்கலக்கி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

அன்னசோழன் :—" அன்னவாயில் " என்னும் சிவதல நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன் ; இவன் பெயர் " அன்னவாயில்ராயன் " எனவும் வழங்கும் ; " சோற்றுத்துறை " என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும் ; " அன்னவாயில், அன்னப்பன்பேட்டை " என்னுமூர்களையுமுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "அன்னவாயில்ராயன் (அன்னவாசல் ராயன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

அன்பசோழன் :—" அன்பது மேனகரம் " என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன் ; " அன்பிலாலந்துறை " என்னும் (தேவாரம் பெற்ற) சிவதல நகரத்தை யுண்டாக்கினவன்.

குருசோழன் :—" குருபாடி (குருவாடி) " என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலநகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக் கொண்டவன் ; " குருகாவூர், குருந்தங்குடி " என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும் ; "குருக்கத்தி, குருவிக்கரம்பை" முதலியவூர்களையு முண்டாக்கினவன்.

பெரியசோழன் :—" பெரியகோட்டை " என்னும் மூன்று நகரங்களை யுண்டுபண்ணி இரா்சதானிகளாகக்கொண்டவன் ;

இவன் பெயர் "பெரியாட்சி, பெரியாண்டான்" எனவும் வழங்கும்; "பெரியகுடி, பெரியனூர்" முதலியவூர்களை யுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பெரியாட்சி (பெரிச்சி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

பைஞ்ஞீலசோழன்:—"பைஞ்ஞீலி" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதல நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "பைங்காட்டூர், பைங்கா(நாடு)" முதலியவூர்களை யுண்டுபண்ணினவன்.

பாலையசோழன்:—"பாலையகோட்டை" என்னும் நகரத்தை யுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "பாலையன், பாலைராயன், பாலையாண்டான், பாலைகொண்டான், பாலையுடையன், பாலைப்பிரியன், பாலைநாடன், பாலைநாட்டான், பாலையாளி" எனவும் வழங்கும்; "பழையபாலாறு, பாலாறு" என்னும் பேராறுகளையும்; "பாலைத்துறை, பாற்றுறை (பால்துறை)" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "பாலையூர், பாலைக்குடி, பாலைக்குரிச்சி, பாலைக்காடு, பாலைப்பட்டி, பாலைப்பட்டு, பாலாகுடி, பாலைவாய், பாலாண்டான்பட்டி" என்னுமூர்களையும் உண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பாலையன் (பாலியன்), பாலைராயன் (பால்ராயன்), பாலையாண்டான் (பாலாண்டான்), பாலையுடையன் (பாலுடையன், பாவுடையன்), பாலைநாடன் (பாணடன்), பாலைநாட்டான் (பாணட்டான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

கடம்பசோழன்:—"பெருங்கடம்பனூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதல நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "கடம்பன், கடம்பராயன், கடம்பையாண்டான், கடம்பைகொண்டான், கடம்பைப்பிரியன், கடம்பையுடையன், கடம்பையாளி" எனவும் வழங்கும்; "(குழித்தண்டலை) கடம்பன்றுறை, கடம்பூர், கடவூர், கடவூர்மயானம்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும, "கடம்பூர்; கடம்பர்வாழ்க்கை, கடம்பன்குடி, கடலங்குடி" என்னுமூர்களையும்; "கடலாழி" என்னும் சிற்றூற்றையுமுண்டாக்கினவன்; இவன்

மரபோர்க்கு "கடம்பன், கடம்பையன், கடம்பராயன் (கடம்பரான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

கடையசோழன் :—"கடையம்" என்னும் நகரத்தை யுண்டு பண்ணி இராசதானியாகக்கொண்டவன்; "கடைமுடி, கடையக்குடி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "கடையநல்லூர், கடைக்காநல்லூர், கடைத்தெரு" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

செங்கமலசோழன் :—"செங்கப்பட்டு" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; "செங்காட்டங்குடி, செந்துறை" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "செங்காடு, செங்கப்பட்டான்காடு, செங்கிப்பட்டி, செங்கமேடு, செங்குளம், செங்களம், செங்குடி" என்னுமூர்களையு முண்டாக்கினவன்.

குடசோழன் :—"குடவாயில்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதல நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; "குடமுருட்டி" என்னும் ஆற்றையும்; "குடமுருட்டி" முதலியவூர்களையுமுண்டாக்கினவன்.

பேர்சோழன் :—"பேரையூர்" என்னும் (சிவதல) நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "பேரரையன்" எனவும் வழங்கும்; "பேரூர், பேராவூர், பேரெயில்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "பேரையூர், பேராவூருணி" முதலியவூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "பேரரையன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

சிரசோழன் :—"சிராப்பள்ளி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதல நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; "சிராளூர், சிராங்குடி" முதலியவூர்களை யுண்டாக்கினவன்.

பாதிரிசோழன் :—"பாதிரங்கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; "பாதிரிப்புலி

யூர்'' என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும், "பாதிராங் குடி" முதலியவூர்களையுமுண்டாக்கினவன்.

மஞ்சசோழன் :—"மஞ்சகுப்பம்" என்னும் நகரத்தையுண்டு பண்ணி இராசதானியாகக்கொண்டவன் ; "மஞ்சக்கொல்லை, மஞ்சவயல், மஞ்சத்திடல், மஞ்சக்குழி, மஞ்சக்காணி, மஞ்சக் குடி, மஞ்சக்காடு" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்.

புலவசோழன் :—"புலஞ்சி" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன் ; "புலவனத்தம், புலவன்காடு, புலவன்குடி, புலவனூர்" என்னுமூர்களையுண்டாக்கினவன்.

ஆந்தைசோழன்:—"எயிலுவான்கோட்டை" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; "ஆந்தை குடி" முதலியவூர்களை யுண்டாக்கினவன் ; ஒல்லையூர்தந்த பூதப் பாண்டியனுடைய நண்பருளொருவன் ; அவன் "மன்னெயி லாந்தையும்" என்று கூறுமாற்றாலுணரலாகும். (இப்பாடல் புறநானூற்றில் ௭௧-ம் பாடலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது).

நல்லுருத்திரசோழன் :—நற்குண நற்செய்கைகள் நிறைந்தவன்; கவிபாடுதலில் வல்லவன். (இவன் பாடியபாடல் புறநானூற்றில் ௧௧௦-ம் பாடலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது).

திருமலைச்சோழன் :—"திருமலைராயன்பட்டின"த்தை இராசதானியாகக்கொண்டவன் ; இவன் பெயர் "மலையன், மலைராயன், மலைகொண்டான், மலையாண்டான், மலைப்பிரியன், மலையாளி" எனவும் வழங்கும் ; கடைபெழுவள்ளல்களிலொரு வன்; "திருமலைராயன்" என்னும் பேராற்றையுண்டாக்கினவன்.

ஆதனழிசிசோழன் :—"ஆதனக்கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன் ; ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனுடைய நண்பன் ; (அப்பாண்டியன் பாடிய புற நானூறு ௭௧-ம் பாடல் "ஆதனழிசி" என்று கூறுகிறது) ; "ஆதனக்குடி, ஆதமங்கலம், ஆதமழை, ஆதனப்பேட்டை, ஆதனூர்" என்னுமூர்களையுண்டாக்கினவன் ; இவன் மாபோர்க்கு "ஆதனழிசி (ஆதாழி)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது

கிள்ளிசோழன்:—"கிள்ளிகோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "கிள்ளிராயன், கிள்ளிகொண்டான், கிள்ளியாண்டான், கிள்ளிப்பிரியன், கிள்ளியாளி" எனவும் வழங்கும்; இவன் காலமுதல் சோழர்களுக்கு "கிள்ளி" என்னும்பெயர் வழங்கலாயிற்று; "கிள்ளிகுடி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும் "கிள்ளிகுடி, கிள்ளியனூர் (கிளியனூர்), கிள்ளியூர் (கிளியூர்) கிள்ளிமங்கலம் (கிளிமங்கலம்), கிள்ளிபட்டி (கிளிப்பட்டி)" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கிள்ளி (கிளாக்கன்), கிள்ளிராயன் (கிளிராயன்), கிள்ளிகொண்டான் (கிளிகண்டான்), கிள்ளியாண்டான் (கிளியண்டான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

கண்டர்கிள்ளிசோழன்:—"கண்டர்கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "கண்டன், கண்டராயன், கண்டப்பிரியன்" எனவும் வழங்கும்; "கண்டமங்கலம், கண்டர்மாணிக்கம், கண்டனூர், கண்டராயன்பட்டி, கண்டர்குடி (கண்ணுகுடி)" என்னுமூர்களையும்; "கண்டதேவி" என்னும் சிவதலத்தையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "கண்டன், கண்டராயன் (கண்டவராயன்), கண்டர்கிள்ளி (கண்டர்சில்லி), கண்டப்பிரியன் (கண்டப்பிள்ளை)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

சிறுகிள்ளிசோழன்:—"சிறுகோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இரர்சதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "சிறுராயன், சிறுநாடன், சிறுப்பிரியன்" எனவும் வழங்கும்; "சிறுகுடி, சிற்றேமம் என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும், "சிற்றம்பலம்" என்னும் சிவதலத்தையும; "சிறுமங்கலம், சிறுபாமணி, சிறுகளத்தூர், சிறுவயல், சிறுவனூர், சிறுவளூர்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "சிறுராயன் (சிறுநாட்டுராயன்), சிறுநாடன் (சிறுமடான்), சிறுப்பிரியன் (சிலுப்பி)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

நெடுங்கிள்ளிசோழன் :—"நெடுவாக்கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "நெடுவாண்டான், நெடுங்கொண்டான், நெடும்பிரியன், நெடுவாளி, நெடுந்தரையன்" எனவும் வழங்கும்; 'நெடுங்களம், நெடுவாயில்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "நெடுங்காடு, நெடுங்குளம்" என்னும் சிவதலங்களையும்; "நெடுஊர், நெடுங்குடி, நெடுமங்கலம், நெடும்புலம், நெடுங்கரை, நெடுவயல், நெடும்பட்டி" என்னுமூர்களையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "நெடுவாண்டான் (நெடுவண்டான்), நெடுங்கொண்டான் (நெறிமுண்டான்), நெடுவாளி (நெடுங்காளி), நெடுந்தரையன் (நெடுத்தார்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

ஆலசோழன் :—"ஆலங்கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "ஆலத்தரையன், ஆலங்கொண்டான், ஆலமாண்டான், ஆலம்பிரியன், ஆலமாளி" எனவும் வழங்கும்; "ஆலந்துறை, ஆலம்பொழில், ஆலங்குடி, ஆலங்காடு" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "ஆலங்காடு" என்னும் சிவதலத்தையும்; "ஆலத்தம்பாடி, ஆலத்தூர், ஆலத்தாங்குடி, ஆலங்காடு, ஆலங்குடி, ஆலம்பாக்கம், ஆலம்பள்ளம், ஆலம்பாடி, ஆலக்குடி" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "ஆலத்தரையன் (ஆவத்தயன்), ஆலங்கொண்டான் (ஆலத்தொண்டான்), ஆலம்பிரியன் (ஆளம்பிரியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

வாலிசோழன் :—"வாலிகொண்டபுரம்" என்னும் சிவதல நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "குரக்கரையன், குரக்கிராயன், வாலிராயன். வாலிகொண்டான், வாலியாண்டான், வாலிப்பிரியன், வாலியுடையன், வாலியாளி" எனவும் வழங்கும்; "(வட)குரங்காடுதுறை, (தென்) குரங்காடுதுறை, குரக்குக்கா, குரங்கணின்முட்டம்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையும்; "வாலீச்சரம்" என்னும்

சிவதலத்தையும் ; "வாலிப்பட்டி, வாலியுடை, வாலிகுடி (லாலி குடி)" என்னுமூர்களையுமுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "வாலிராயன் (வாலியன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

ஏனாதி திருக்கிள்ளிசோழன் :—"ஏனாதி" என்னும் நகரத்தையுண்டாக்கி இராசதானியாகக்கொண்டவன் ; இவன் பெயர் "ஏனாதிகொண்டான், ஏனாதியாண்டான், ஏனாதிப்பிரியன், ஏனாதியுடையன், ஏனாதியாளி" எனவும் வழங்கும் ; சிறந்த வீரமுங் கொடையுமுடையவன் ; இவன் காலமும் குட்டுவன் கோதை காலமும், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி காலமும் சமகாலம் ; "கோனாட்டு எறிச்சிலூர் மாடவன் மதுரைக்குமரனார்" என்னும் புலவர் புகழ்ந்துபாடப்பெற்றவன் ; (இப்பாடல் புறநானூற்றில் கசுஎ-ம் பாடலாகச் சேர்க்கப் பட்டிருக்கிறது). "ஏனாதிகுடி, ஏனாதிமங்கலம், ஏனங்குடி, ஏனனூர்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு "ஏனாதிகொண்டான் (ஏத்தொண்டான்), ஏனாதிப் பிரியன் (ஏனாட்டுப்பிரியன், என்னாட்டுப்பிரியன், ஏத்திரிப்பிரியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

(குராப்பள்ளிதுஞ்சிய) பெருந்திருமாவளவசோழன் :—உறையூரை இராசதானியாகக்கொண்டவன் ; வீரமுங் கொடையுமுடையவன் ; நறுமலர்ச்சோலையில் துயின்ற காரணத்தினால் "குராப் பள்ளிதுஞ்சியபெருந்திருமாவளவன்" என்று பெயர்பெற்றவன் ; "வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெருவழுதி"யோடு நட்புடையவன் ; "காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார், உறையூர் மருத்துவன் தாமோதரனார், கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார்" என்னும் புலவர் பெருமக்கள் புகழ்ந்து பாடப்பெற்றவன் ; (இப்பாடல்கள் புறநானூற்றில் ருஅ, சூ0, கசுஎ-ம்பாடல்களாகச்சேர்க்கப்பட்டிருக்கின்றன. "பெருமுளை" என்னும் சிவதலத்தையும் ; "பெருமங்கலம், பெருங்குளம், பெருங்களூர், பெருமகளூர், பெருகவாழ்வுதந்தான், பெருங்குடி, பெரும்பலமருதூர், பெருமழை, பெருமாளகரம்" என்

னும் ஊர்களையும்; "பெருமிழலை, பெருந்துறை" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலங்களையுமுண்டாக்கினவன்.

(இலவந்திகைப்பள்ளிதுஞ்சிய) நலங்கிள்ளி சேட்சென்னி சோழன்:—"சேண்டாகோட்டை" என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; மிக்கவீரமுங் கொடையுமுடையவன்; நீர்வாவிசூழ்ந்த சோலையில் துயின்ற காரணத்தினால் "இலவந்திகைப்பள்ளி துஞ்சிய நலங்கிள்ளிசேட்சென்னி" என்று பெயர்பெற்றவன்; இவன் காலமுதல் சோழர்களுக்கு "சென்னி" என்னும் பெயரும்; சோழநாட்டுக்கு "சென்னிநாடு" என்னும் பெயரும் வழங்கலாயிற்று. "கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார்" என்னும் புலவர் புகழ்ந்து பாடப்பெற்றவன்; (இப்பாடல் புறநானூற்றில் கூக-ம் பாடலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது). இவன் பெயர் "சேண்ராயன், சேணரையன், சேண்கொண்டான், சேணாண்டான், சேண்பிரியன், சேணாடன்" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "சேண்ராயன் (செனவராயன்), சேணரையன், (சாணரையன், சாணன், சாணை), சேண்கொண்டான் (சேனக்கொண்டான், சேனைகொண்டான்), சேணாண்டான் (சென்னண்டான்), சேண்பிரியன் (சேண்டப்பிரியன்), சேணாடன் (சேனைநாடான், சென்னாடான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

(குளமுற்றத்துத்துஞ்சிய) கிள்ளிவளவசோழன்:—உறையூரை இராசதானியாகக்கொண்டவன்; சிறந்த வீரமுங் கொடையுமுடையவன்; அழகிய சோலைசூழ்ந்த குளத்தினருகில் துயின்ற காரணத்தினால் "குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்" என்று பெயர் பெற்றவன்; கருவூரை முற்றுகைசெய்து "தூங்கெயிலெறிந்து" சேரனை வென்றவன்.

(கஎ) "தேங்குதூங்கெயி லெறிந்தவவனும்"

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

(தூங்கெயிலெறிந்ததானம் "மதிட்கரை (மதுக்கரை)" என்று வழங்குகிறது). கவிபாடுதலில் வல்லவன்; (இவன் பாடிய பாடல் புறநானூற்றில் கஎங-ம் பாடலாகச் சேர்க்கப்பட்டிருக்

கிறது). "ஆலத்தூர்கிழார், ஆவூர்மூலங்கிழார், கோவூர்கிழார், வெள்ளைக்குடிநாகனுர், இடைக்காடனுர், எருக்காட்டூர் தாயங்கண்ணனுர், நல்லிறையனுர், மாறோக்கத்துநப்பசலையார், ஐயூர் முடவனுர், ஆடுதுறைமாசாத்தனுர், சல்லியங்குமரனுர்" என்னும் புலவர் பெருமக்கள் புகழ்ந்தும், இறந்தபின் வருந்தியும் பாடப்பெற்றவன்; (இப்பாடல்கள் புறநானூற்றில் ௩௪, ௩௫, ௩௬, ௩௭, ௩௮, ௩௯, ௪0, ௪௧, ௪௨, ௪௬, ௬௯, ௭0, ௨௨௬, ௨௨௭, ௨௨௮, ௩௮௬, ௩௯௩, ௩௯௭-ம் பாடல்களாகவும்; நற்றிணையில் ௧௪௧-ம் பாடலாகவும் சேர்க்கப்பட்டிருக்கின்றன). "குளத்தூர்" என்னும் சிவதலத்தையும்; "குளத்தூர், குளமங்கலம், குளக்குடி, குளப்பாடு, குளப்பட்டி" என்னுமூர்களையு முண்டுபண்ணினவன்; இவன்பெயர் "குளந்தைராயன்" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "குளந்தைராயன் (கொழுந்தைராயன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

நலங்கிள்ளிசேட்சென்னிசோழன்:—சேண்டாகோட்டையை இராசதானியாகக்கொண்டவன்; சிறந்த வீரமுங் கொடையு முடையவன்; இவன் பெயர் "தேர்வண்கிள்ளி, புட்பகை" எனவும் வழங்கும்; இலவந்திகைப்பள்ளிதுஞ்சிய நன்மாறபாண்டியனோடும், கீரஞ்சாத்தபாண்டியனோடும் பெரும்போர்செய்து, பாண்டிநாட்டிலிருந்த "ஏழரண்களை"யழித்து, அவற்றில்தனது புலிக்கொடியை நாட்டினவன்; தன் தாயத்தாளுகிய "நெடுங்கிள்ளி"யோடு பகைமைகொண்டு ஆவூரையும், உறையூரையும் முற்றுகைசெய்தவன்; கவிபாடுதலில் வல்லவன்; (இவன் பாடிய பாடல்கள் புறநானூற்றில் ௭௩, ௭௫-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன). "உறையூர் முதுகண்ணன் சாத்தனுர், கோவூர் கிழார், ஆலத்தூர் கிழார்" என்னும் புலவர் பெருமக்கள் புகழ்ந்து பாடப்பெற்றவன்; இப்பாடல்கள் புறநானூற்றில் ௨௭, ௨௮, ௨௯, ௩0, ௩௧, ௩௨, ௩௩, ௬௮, ௨௨௫, ௩௮௨, ௪00-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன). இவன் தம்பி "மாவளத்தான்" தாமப்பல் கண்ணனுரால் பாடப்பெற்றவன். (இப்பாடல் புறநானூற்றில் ௪௩-ம் பாடலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது).

(காரியாற்றுத்துஞ்சிய) நெடுங்கிள்ளிசோழன் :— ஆவூரை இராசதானியாகக்கொண்டவன்; காரியாற்றருகில் அழகிய நறுமலர்ச்சோலையில் துயின்ற காரணத்தினால் "காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி" என்று பெயர் பெற்றவன்; தன்தாயத்தானாகிய "நலங்கிள்ளி சேட்சென்னிசோழன்" தன்மேற் பகைமைகொண்டு "ஆவூரை" முற்றுகை செய்தபோது, கோட்டைவாயிலை அடைத்துக்கொண்டு உள்ளேயிருந்து, "கோவூர் கிழார்" என்னும் புலவர் பாடிய பாடலைக்கேட்டுத் தேறுதலடைந்து, ஆவூரைநீங்கி உறையூரை இராசதானியாகக்கொண்டு அதனையும் "நலங்கிள்ளிசேட்சென்னிசோழன்" முற்றுகை செய்தபோது கோட்டைவாயிலை அடைத்துக்கொண்டு உள்ளேயிருந்து மீட்டும் "கோவூர் கிழார்" பாடிய பாடல்களைக் கேட்டுத் தேறுதலடைந்தவன். (இவனைக் கோவூர் கிழார்பாடியபாடல்கள் புறநானூற்றில் சச, சரு, சஎ-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன).

(கருவூரேறிந்த குராப்பள்ளிதுஞ்சிய) கிள்ளிவளவசோழன் :— "கிள்ளிகோட்டை" என்னும் நகரத்தை இராசதானியாகக் கொண்டவன்; மிக்க வீரமுடையவன்; சேரனோடு பகைமை கொண்டு கருவூரெறிந்த காரணத்தினாலும், நறுமலர்ச்சோலையில் துயின்ற காரணத்தினாலும் "கருவூரெறிந்த குராப்பள்ளி துஞ்சிய கிள்ளிவளவன்" என்று பெயர் பெற்றவன்; இவன் பெயர் "குராப்பள்ளி துஞ்சிய கிள்ளிவளவன்" எனவும் வழங்கும்; "கோவூர் கிழார்" என்னும் புலவர் பெருமான் புகழ்ந்து பாடப்பெற்றவன். (இப்பாடல் புறநானூற்றில் ருஎரு-ம் பாடலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது).

(இராசசூயம்வேட்ட) பெருநற்கிள்ளிசோழன் :—சிறந்த வீரமுங் கொடையுமுடையவன்; இராசசூயஞ்செய்த காரணத்தினால் "இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளி" என்று பெயர்பெற்றவன்; "தேர்வண்மலையன்" என்னும்போர்வீரனைத்துணையாகக்கொண்டு மாந்தரஞ் சேரலிரும்பொறையோடு பொருது, அவனைக் கொன்றவன்; "மாவெண்கோச்சேரலாதனோடும், கானப் பேர்தந்த உக்கிரப் பெருவழுதியோடும்" பெரு நட்புடையவன்; "பாண்

டாங்கண்ணனார், உலோச்சனார், ஔவையார்'' என்னும் புலவர் பெருமக்கள் புகழ்ந்து பாடப்பெற்றவன்; (இப்பாடல்கள் புறநானூற்றில் கசு, ௩௬௧, ௩௭௭-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன).

தித்தசோழன் :—உறையூரை இராசதானியாகக்கொண்டவன்; மிக்க வீரமுடையவன்; தன் மகன் "போர்வைக்கோப் பெருநற்கிள்ளி"யோடு மிக்கபகைமை கொண்டிருந்தவன்; "நொச்சி வேலித்தித்தனுறந்தை" என்று அகநானூற்றில் கூறப்பட்டவன். (அகநானூறு ௬௰, ௩௱௬).

(போர்வைக்)கோப்பெருநற்கிள்ளிசோழன் :—தித்தசோழன் மகன்; தந்தையோடு பெரும்பகைமைகொண்டு, நாடிழந்து, வறுமையுற்று, புல்லரிசிக்கூழுண்டிருந்தவன்; பின்பு உறையூரை இராசதானியாகக்கொண்டவன்; ஆமூர் மல்லனைப் போரிற் கொன்றவன்; கவசமணிந்துகொண்டு போர்செய்த காரணத்தினால் "போர்வைக்கோப் பெருநற்கிள்ளி" என்று பெயர் பெற்றவன்; "சாத்தந்தையார், பெருங்கோழி நாய்கன் மகன் கண்ணனார்" என்னும் புலவர் பெருமக்கள் புகழ்ந்து பாடப்பெற்றவன். (இப்பாடல்கள் புறநானூற்றில் ௮௰, ௮௧, ௮௨, ௮௩, ௮௪, ௮௫-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன).

(பாமுளூரெறிந்த நெய்தலங்கானல்) இளஞ்சேட்சென்னி சோழன் :—"இளநகர்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "இளங்கொண்டான், இளமாண்டான் இளம்பிரியன், இளமுடையன், இளமாளி, இளநாடன்" எனவும் வழங்கும்; நற்குணங்கள் பலவும் நிறைந்தவன்; இரப்போரைப் பாதுகாத்தலையே நோன்பாகக் கொண்டவன்; சேரனுடைய பாமுளூரையெறிந்து, அதின் சமீபத்திலுள்ள குன்றில் புலிக்கொடியை நாட்டி, அதற்குச் "சென்னிமலை" என்று பெயரிட்ட காரணத்தினாலும், வெள்ளாம்பற் பூத்தேரிற் சென்றகாரணத்தினாலும் "பாமுளூரெறிந்த நெய்தலங்கானவிளஞ்சேட்சென்னி" என்று பெயர் பெற்றவன்; "இளமர்(இளமதுக்கூர்), இளங்கடம்பனூர்" என்னும் (தேவாரம்

பெற்ற) சிவதலங்களையும்; "இளமங்கலம், இளங்கார்குடி, இளங்காடு, இளவலூர், இளையான்குடி" என்னுமூர்களையுமுண்டு பண்ணினவன்; "ஊன்பொதிபசுங்குடையார்" என்னும் புலவர் புகழ்ந்து பாடப்பெற்றவன்; இப்பாடல்கள் புறநானூற்றில் கு, உ௱௩-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன). இவன் மரபோர்க்கு "இளங்கொண்டான் (இளமுண்டான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

(செருப்பாழியெறிந்த) இளஞ்சேட்சென்னிசோழன்:— இள நகரை இராசதானியாகக்கொண்டவன்; பகைவருடைய வீரக் கழலையும், யானைத் துதிக்கையையும் எறிந்தகாரணத்தினால் "செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி" என்று பெயர் பெற்றவன்; "ஊன்பொதி பசுங்குடையார்" என்னும் புலவர் புகழ்ந்து பாடப்பெற்றவன். (இப்பாடல்கள் புறநானூற்றில் ௩௭௰, ௩௭௮-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன).

தஞ்சை ராசராசசோழன்:—"தஞ்சைநகரம் (கீழத்தஞ்சாவூர்)" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலநகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; "தஞ்சை (தஞ்சாவூர்)" என்னும் பேரரண் நகரத்தையுண்டாக்கி, அதில் (திருவிசைப்பா பெற்ற) வானளாவிய விமானமுடைய "தஞ்சை யிராசராசேச்சரம்" என்னும் திருக்கோயில் கட்டினவன்.

(கஎ) "சுடர்மணித் திரள்விமானமது வான்மிசை யுயர்த்தவவனும்." என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகின்றது.

இவன் பெயர் "தஞ்சைராயன்" எனவும் வழங்கும்; "தஞ்சாக்கை" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; "தஞ்சாவூர்" என்னுமூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "தஞ்சைராயன் (தஞ்சிராயன்) என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

(முடித்தலைக்)கோப்பெருநற்கிள்ளிசோழன்:—உறையூரை இராசதானியாகக்கொண்டவன்; பகைவருடைய முடித்தலைகளைக் கொய்தகாரணத்தினால் "முடித்தலைக்கோப்பெருநற்

கிள்ளி" யென்று பெயர்பெற்றவன்; "அந்துவஞ்சேரலிரும் பொறையோடு பெரும் பகைமையுடையவன்; "உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்" என்னும் புலவர் பெருமகன் புகழ்ந்து பாடப்பெற்றவன். (இப்பாடல் புறநானூற்றில் கங-ம் பாடலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது).

கோப்பெருஞ்சோழன்:—உறையூரை இராசதானியாகக்கொண்டவன்; சிறந்த வீரமுங் கொடையுமுடையவன்; "பிசிராந்தையார், பொத்தியார்" என்னும் புலவர்களுக்கு உயிர்நண்பன்; பாரதப்போர்முடியும்வரையும் தருமன் கடற்படைக்கு உதவி செய்தவன்.

(கஎ) "தாங்கள்பாரத முடிப்பளவு நின்றுதருமன்
றன்கடற்படை தனக்குதவி செய்தவவனும்".

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

கவிபாடுதலில் வல்லவன்; (இவன் பாடிய பாடல்கள் புறநானூற்றில் உகச, உகரு, உகசு-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன). தன் மக்களிருவரோடும் பகைமைகொண்டு போர்செய்தற் கெழுந்தபோது, "புல்லாற்றூர் எயிற்றியனார்" என்னும் புலவரால் சமாதானமடைந்து, எல்லாவற்றையுந் துறந்து, உயிர்நீத்தற்பொருட்டு வடக்கு நோக்கியிருந்து உடன் உயிர்நீத்தற்குவந்த "பொத்தியார், பிசிராந்தையார்" என்னும் நண்பர்களில் பொத்தியாரை மகன் பிறந்தபின் வருகவெனக் கூறி, தானும் பிசிராந்தையாரும் உயிர் நீத்துக் கல்லாகியும் மகன் பிறந்தபின் வந்த பொத்தியாருக்கு இடங்கொடுத்தும் புகழ்பெற்றவன்; (வடக்குநோக்கியிருந்தவிடத்தில் இறந்தபின் கல் நாட்டுவது அக்காலத்திய வழக்கம்). இவன் காலமும் அறிவுடை நம்பிப்பாண்டியன் காலமும் சமகாலம்; "பொத்தியார், பிசிராந்தையார், புல்லாற்றூரெயிற்றியனார், கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப்பூதனார்" என்னும் புலவர் பெருமக்கள் புகழ்ந்து பாடப்பெற்றவன். (இப்பாடல்கள் புறநானூற்றில் சுஎ, உகஉ, உகங, உகஎ, உகஅ, உஉ0, உஉக, உஉஉ, உஉங-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

சூரவாதித்தசோழன்:—"சூரக்கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "சூரக்கோட்டையன், சூரங்கொண்டான், சூரமாண்டான், சூரப்பிரியன், சூரமுடையன், சூரமாளி" எனவும் வழங்கும்; ஆதிசேடன் மகள் காந்திமதியைக் கொண்டவன்.

(கஅ) "தளவழிக்குகையி னிற்பொழி பிலத்தின்வழியே
தனிநடந்துரகர் தங்கண்மணி கொண்டவவனும்."

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

"சூரமங்கலம், சூரக்குடி (சுரக்குடி), சூரனூர், சூரயூர், சூரப்பள்ளம்" என்னுமூர்களையும்; "கோளிலி" என்னும் சிவதலத்தையும்; "சூரனூர்கோவில்" என்னும் நவக்கிரக தலத்தையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "சூரக்கோட்டையன் (சுரக்குடையன்), சூரப்பிரியன் (சுரப்பிடுங்கியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

செங்கண்சோழன்:—முற்பிறப்பில் "சிலந்தி"யாயிருந்து, திருவானைக்காவில் வெண்ணாவலடியில் எழுந்தருளியிருக்கின்ற "சிவலிங்கப்பெருமான்"மீது சருகு உதிராமல் வாய்நூலினால் மேற்பந்தர் செய்து, அதனைப் பிய்த்தெறிந்த யானையின் புழைக்கையிற்புகுந்து, மத்தகத்திற்கடித்துக்கொன்று, தானுமிறந்து, சிதம்பரதலத்தை இராசதானியாகக்கொண்டிருந்த, சுபதேவசோழனுக்கு கமலவதி திருவயிற்றில் "மகவாய்"த்தோன்றி, "தென்னூர்" என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டு, "பூர்வ வுணர்ச்சி"யினால் யானையேறாவண்ணம் எழுபது "திருப்பெருங்கோயில் (மாடக்கோயில்)" என்னும் மலைக்கோயில் கட்டினவன்.

"கோடடைந்தமால் களிற்றுக் கோச்செங்கணாற் கருள்செய்—; செங்கட்பெயர்கொண்டவன் செம்பியர்கோன், அங்கட்கருணை பெரிதாயவனே—; சிலந்திசெங்கோற்சோழனாகச் செய்தான்—; செய்யகண் வளவன்முன் செய்தகோயிலே—; செம்பி

யன்கோச் செங்கணான் செய்தகோயிலே—; திறையுடை நிறை செல்வன் செய்தகோயிலே—; குரிசில் செங்கண்ணவன் கோயில்—; செம்பியர் செய்யகண்ணிறை செய்தகோயில்—; செங்கணவிறை செய்தகோயில்—; செம்பியர் செறிகழலிறை செய்தகோயில்—; செம்பியன் கோச்செங்கண் நிருபர்—; சிலந்தியுமானைக்காவிற் றிருநிழற்பந்தர் செய்து, உலந்தவணிறந்த போதே கோச்செங்கணானுமாகக், கலந்தநீர்க்காவிரிசூழ் சோணாட்டுச்சோழர்தங்கள், குலந்தனிற் பிறப்பித்திட்டார்—; நலந்திகழ வாயினூலாற் சருகிலைப்பந்தர்செய்த, சிலந்தியை யாசதாளவருளினாய்—; அரணிலாவெளிய நாவலரு நிழலாகவீசன், வரணியலாகித்தன் வாய்நூலினாற் பந்தர்செய்ய, முரணிலாச் சிலந்திதன்னை முடியுடை மன்னனாக்கித், தரணிதா னாளவைத்தார்—; வாயினூலால் வட்டணைப்பந்தர் செய்த, சிலந்தியை யசையனாக்கி—; சிலந்திக்கு மரசளித்த செல்வன்—; திருவானைக் காவிலோர் சிலந்திக்கந்நாள், கோச்சோழர் குலத்தரசு கொடுத்தார்—; சிலந்தி தனக்கருள்செய்த—; சிலந்திக்கருண் முன்னஞ் செய்தான்—; பண்டு பல சருகாற்பந்தர் பயின்ற நூற்சிலந்திக்குப் பாராள் செல்வம் ஈந்தவன்—; புத்தியினாற் சிலந்தியுந் தன்வாயினூலாற் பொதுப்பந்த ரதுவிழைத்துச் சருகான் மேய்ந்த, சித்தியினாலரசாண்டு சிறப்புச்செய்யச் சிவகணத்துப் புகப்பெய்தார்—; திருவும் வண்மையுந் திண்டிறலரசும், சிலந்தியார்செய்த செய்பணிகண்டு, மருவுகோச்செங்கணான் றனக்களித்த—; தெருண்டவாயிடை நூல்கொண்டு சிலந்தி சித்திரப்பந்தர் சிக்கென வியற்றச், சுருண்டசெஞ்சடையாயது தன்னைச்சோழனாக்கிய—; செம்பியர்கோன், நரபதி—; கோச்செங்கணான்—; தென்னவனாபுலகாண்ட செங்கணான்."

என்று தேவாரமும்;

"செம்பியன் கோச்செங்கணான் சேர்ந்தகோயிற் றிருநறையூர் மணிமாடம்—; இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோளீசற் கெழின்மாடமெழுபதுசெய் துலகாண்ட, திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்தகோயிற் றிருநறையூர்."

என்று நாலாயிரப் பிரபந்தமும்;

"மைவைத்த கண்டனெறி யன்றிமற்றோர் நெறிகருதாத்
தெய்வக்குடிச்சோழன் முன்பு சிலந்தியாய்ப் பந்தர்செய்து
சைவத்துரு வெய்திவந்து தரணிநீடாலயங்கள்
செய்வித்தவன் றிருக்கோச்செங்கணானெனுஞ்செம்பியனே."

என்று திருத்தொண்டர் திருவந்தாதியும்;

"வெண்ணாவலிறைக் கொளிநூற்பந்தர்செய்த
வியன்சிலம்பியது வழித்தவெள்ளானைக்கை
யுண்ணடிக்கடித்தவுடலொழியச்சோழ
னுயர்குலத்துச் சுபதேவன் கமலத்தோங்கும்
பெண்ணாகியவள் வயற்றில் வைகிச்செங்கட்
பெருமானாத் தென்னவராய்ப் பெருங்கோயில்பலவுங்
கண்ணார்வித்துயர்தில்லை மறையவர்க்குமுறையுள்
கனகமயமாக்கி யருள்கைக்கொண்டாரே."

என்று திருத்தொண்டர்புராணசாரமுங் கூறுகின்றன.

இவன் பெயர் "தென்னவராயன், தென்னரையன், தென்கொண்டான், தென்னூண்டான், தென்னப்பிரியன், தென்னுடையன், தென்னுளி" எனவும் வழங்கும்; "தென்னவராயநல்லூர், தென்னவனாடு, தென்னங்குடி, தென்னம்புலம், தென்குடி, தென்பரை, தென்பாதி, தென்னவராயன்பேட்டை, தென்னங்குளம் என்னும் ஊர்களையுண்டாக்கினவன்; "கணைக்காலிரும்பொறை" என்னும் சேரனோடு போர்செய்து, அவனைப்பிடித்து குடவாயிற்கோட்டத்திற் சிறைப்படுத்தி, "பொய்கையார்" என்னும் புலவர்பாடிய "களவழி" நாற்பது பாடலைக்கேட்டு, அச்சேரனுக்குச் சிறைநீக்கி அரசிட்டவன்.

(கஅ) "களவழிக்கவிதை பொய்கையுரை செய்யவுதியன்
காலவழித்தளையை வெட்டி யரசிட்டவவனும்".

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

இவன் மரபோர்க்கு "தென்னவராயன், தென்னரையன் (தென்னன்), தென்கொண்டான் (தெங்கொண்டான், தெங்கண்டான், தெங்கிண்டான்), தென்னப்பிரியன் (தின்னாப்பிரியன், திண்ணப்பிரியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன. இவன் புதுக்கிக்கட்டிய "ஆனைபுகாக்கோயில்"களில் "ஆனைக்கா,

பெண்ணுகடம், சாய்க்காடு, மண்ணிப்படிக்கரை, செம்பிருப்பு, செம்பொன்பள்ளி, வடதலைச்சங்காடு, தென்தலைச்சங்காடு, ஆக்கூர், பெருமுளை, தேரழுந்தூர், வைகல், நறையூர் (மணிமாடம்), துற்காட்சி, நாலூர், பழையாறுவடதளி, பழையாறு தென்றளி, பழையாறுகீழ்த்தளி, நல்லூர், ஆவூர், பசுபதிமங்கை, மாத்தூர், குடவாயில், இங்கண், பெருவேளூர், நன்னிலம், பனையூர், இராமனதீச்சரம், மருகல், அம்பர், வீழிமிழலை, சேய்ஞலூர், பனந்தாள்தென்றளி, பாம்புரம், மாதூர், கீழ்வேளூர், தேவூர், சிக்கல், பெருங்கடம்பனூர், நாகைமலையீச்சரம், நாகைமேலைக்காயாரோகணம், வலிவலம், கீழைவழி, கீழையிலரண், தண்டலைநீணெறி, களப்பாள், இராசசேரிபுரம்" என்னும் நாற்பத்தேழு கோயில்கள் புலப்பட்டன. இருபத்துமூன்று கோயில்கள் புலப்படவில்லை.

(வேற்பஃறடக்கைப்) பெருநற்கிள்ளிசோழன் :—கூர்மை பொருந்திய வேலாயுதத்தை இடைவிடாது கையிற்பிடித்த காரணத்தினுல் "வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி" என்று பெயர் பெற்றவன்; இவன் பெயர் "வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி" எனவும் வழங்கும்; குடக்கோ நெடுஞ்சேரலாதனோடு பொருது வீழ்ந்து "பரணர், கழாத்தலையர்" என்னும் புலவர் பெருமக்கள் வருந்திப்பாடப்பெற்றிறந்தவன். (இப்பாடல்கள் புறநானூற்றில் சுஉ, சுங-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன).

அழிசிசோழன் :—"ஆக்காடு" என்னும் நகரத்தையுண்டு பண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "ஆக்காட்டுராயன், ஆக்காட்டரையன், ஆக்காடுகொண்டான், ஆக்காடாண்டான், ஆக்காடுடையன், ஆக்காட்டுப்பிரியன், ஆக்காடாளி" எனவும்வழங்கும்; சிறந்தவீரமுங்கொடையுமுடையவன்; சேந்தன்றந்தை; "ஆக்கூர்" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; "ஆக்குடி" முதலிய வூர்களையுமுண்டுபண்ணினவன்; "நக்கண்ணையார்" முதலிய புலவர்கள் புகழ்ந்து பாடப்பெற்றவன்; (இப்பாடல்கள் நற்றிணையில் அஎ, கஙூ-ம் பாடல்

களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன). இவன் மரபோர்க்கு "ஆக்காட்டரையன் (ஆக்காட்டியன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

சேந்த சோழன் :—உறையூரை இராசதானியாகக் கொண்டவன்; அழிசி சோழன் மகன்; சிறந்த வீரமுங் கொடையுமுடையவன்; இவன் பெயர் "சேந்தராயன்" எனவும் வழங்கும்; "சேந்தமங்கலம், சேந்தன்குடி, சேந்தனூர், சேந்தன்காடு" என்னுமூர்களை யுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "சேந்தராயன் (சிந்துராயன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

(உருஅ) "ஏந்துகோட் டியானைச் சேந்தனுறந்தை"

என்று குறுந்தொகை கூறுகிறது.

(உருவப்பஃறேர்) இளஞ்சேட்சென்னி சோழன் :—உறையூரை இராசதானியாகக் கொண்டவன்; அழகிலும் வீரத்திலும் சிறந்து விளங்கிய காரணத்தினால் "உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னி" என்று பெயர் பெற்றவன்; கொடையிற் சிறந்தவன்; அழுந்தூர் வேளிடைமகட் கொண்டவன்; கரிகாற் பெருவளவ சோழன்றந்தை; "பரணர், பெருங்குன்றூர் கிழார்" என்னும் புலவர் பெருமக்கள் புகழ்ந்து பாடப்பெற்றவன். (இப்பாடல்கள் புறநானூற்றில் ச, உகூச-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன).

(கஙல) "உருவப்பஃறேரிளையோன்"

என்று பொருநராற்றுப்படை கூறுகிறது.

கரிகாற்பெருவளவ சோழன்:— காவிரிப்பூம் புகார்ப்பட்டினத்தை இராசதானியாகக் கொண்டவன்; முற்பிறப்பில் தேவேந்திரனாயிருந்து, உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னி சோழனுக்கு மகனாக வந்தவன்; இரும்பிடர்த்தலையாரை அம்மானாகப்பெற்றவன்; இளமையில் நெருப்பாற் சுடப்பெற்று உயிர்பிழைத்தவன்; தன்னையிளையோனென்றிகழ்ந்த முதியோர்முன் முதியோனாய் வந்து அவர்கள் வழக்கைத்தீர்த்தவன்; தான் கருவூரிலிருக்கையில் கழுமலமென்னு மூரிலிருந்த யானையாற் கொண்டுவரப்பட்டு, முடி

சூட்டப்பெற்றவன்; நாங்கூர் வேளிடைமகட் கொண்டவன்; சிறந்த அறிவும் வீரமுங் கொடையுஞ் சிவபத்தியு முடையவன்; இமையவர்கள் வாசஞ்செய்யும் இமையமலையில் தனது புலிக் கொடியை நாட்டி, இடையிலுள்ள அரசர்களையெல்லாந் தன்னடிப்படுத்திக்கொண்டவன்; தண்டகன் காலமுதல் காடு மூடப் பெற்றிருந்த "கச்சி (காஞ்சி)" நகரத்தை யுண்டாக்கினவன்; "வெண்ணி" என்னும் ஊர்ப்புறத்து "பெருஞ்சேரலாதனையும், ஒரு பாண்டியனையும்" பொருதுகொன்றவன்; "குருமி" என்னும் அரசனை வென்றவன்; அரசர்களைத் தொகுத்து "காவிரி"க்குக் கரைகட்டினவன்; கரைகட்டவராத மூன்று கண்களையுடைய "முகரி" என்னும் அரசனைப் படத்திலெழுதி நெற்றிக்கண்ணையழித்து, அவன்நெற்றிக்கண்ணைக்கெடுத்தவன்; பட்டினப்பாலைகேட்டு பதினாறு நூறாயிரம் பொன் பரிசு கொடுத்தவன்.

"இமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி யேற்றிக் கொள்கையிற் பெயர்வோற்கு
மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரு
மகதநன் னாட்டு வாள்வாய் வேந்தன்
பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண் டபமு
மவந்தி வேந்த னுவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்."

என்று சிலப்பதிகாரமும்;

"இரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை
யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலு
மோங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த
விருபெரு வேந்தரு மொருகளத் தவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்."

என்று பொருநராற்றுப்படையும்;

(கக) "என்று மற்றவர்க டங்கள்சரி தங்கள்பலவு
மெழுதிமீளவிதன் மேல்வழுதி சேரன்மடியத்
தன்றனிக்களி றணைத்தருளி வீரமகடன்
றனதடங்களொடு தன்புய மணைந்தபரிசும்

(உ௰) தொழுது மன்னரே கரைசெய் பொன்னியிற்
றொடா வந்திலா முகரி யைப்படத்
தெழுது கென்றுகண் டிதுமி கைக்கணென்
றிங்க ழிக்கவே யங்க ழிந்ததும்.

(உக) தத்து நீர்வரால் குருமி வென்றதுந்
தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
பத்தொ டாறுநூ றுயி ரம்பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்."

என்று கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியமும்;

"என்று முள்ளவிந் நகர்கலி யுகத்தி
லிலங்கு வேற்கரி காற்பெரு வளத்தோன்
வன்றி றற்புலி யிமையமால் வரைமேல்
வைக்க வேகுவோன் றனக்கிதன் வளமை
சென்று வேடன்முன் கண்டுரை செய்யத்
திருந்து காதநான் குட்பட வகுத்துக்
குன்று போலுமா மதில்புடை போக்கிக்
குடியி ருத்தின கொள்கையின் விளங்கும்."

என்று (காஞ்சீபுரத்தைப்பற்றி) திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணமுங் கூறுகின்றன. கிழக்கே கடலையும், தெற்கே (வெள்ளாற்றின் தென்பாலுள்ள) திருமய்ய மலையையும், மேற்கே கருவூர் பவளமலை என்பவற்றையும், வடக்கே திருவேங்கடமலையையும் எல்லைகளாகக்கொண்ட தன்னுடைய நாட்டை இருகூறு கப்பிரித்து பெண்ணையாற்றுக்குத் தென்பாகமாகிய இருபத்து நான்கு காதத்தை மூத்தமகனாகிய இராசராசசோழனுக்கும், பெண்ணையாற்றுக்கு வடபாகமாகிய இருபது காதத்தை இளைய மகனாகிய தொண்டைமானுக்கும் முடிசூட்டுவித்தவன்; "முடத்தாமக்கண்ணியர்" பாடிய பொருநராற்றுப்படைக்கும், கடியலூர் "உருத்திரங்கண்ணனார்" பாடிய பட்டினபாலைக்கும் தலைவன்; "கரியாபட்டினம்" என்னும் நகரத்தையும், "கரிவரநல்லூர்" என்னும் சிவதலத்தையும் உண்டாக்கினவன்; கருங்குழலாதனார், வெண்ணிக்குயத்தியார்" என்னும் புலவர்கள் புகழ்ந்து பாடப்பெற்றவன்; (இப்பாடல்கள் புறநானூற்றில் எ, கூகூ, உஉச-ம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன).

இராசராச சோழன் (கோவிராசகேசரி) :—கரிகாற் பெருவளவ சோழனுக்கு மகனாக கலிகாலமுதலில் வந்தவன்; கிழக்கே கடலையும், தெற்கே (வெள்ளாற்றின் தென்பாலுள்ள) திருமய்ய மலையையும், மேற்கே கருவூர்க் கோட்டைக்கரையையும், வடக்கே பெண்ணையாற்றையும் எல்லைகளாகக்கொண்ட இருபத்து நான்கு காதத்துக்கு தந்தையால் முடிசூட்டப்பெற்றவன் ;

"கடல்கிழக்குத் தெற்குக் கரைபுரளும் வெள்ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
ஏணாட்டுப் பெண்ணை யிருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கெல்லையெனச்சொல்."

என்று பழைய தனிப்பாடல் கூறுகிறது.

உறையூரை இராசதானியாகக் கொண்டவன்; முல்லை நில மாக்கள் மரபில்வந்த "உலகுடைய முக்கோக்கிழானடிகள்" என்னும் பெண்ணரசியை மணஞ்செய்துகொண்டு அவள் சுற்றத்தாருக்கு "கள்ளரிடையர்" என்னும் பட்டங்கொடுத்தவன்; மகராசபுரம் என்னும் ஊர்களையுண்டாக்கினவன்; தஞ்சாவூரிலும், மன்னார்குடியிலும் இராசகோபால சுவாமி கோவில் கட்டினவன்; இவன் பெயர் "கோபாலன்" எனவும் வழங்கும். இவன் மரபோர்க்கு "கோபாலன்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகிறது.

கடல்சூழ்ந்த பாரேழுந் திசையெட்டுங் காத்துநின்று
தடமாமதி யெனவிளங்கித் தாளவெண்குடை நிலாவெறிப்ப
வாழ்வரை வரப்பாக வடற்கலியைப் பிலத்தொதுக்கி
யூழிதொறும் புகழோங்க வோராழி வெயிற்பரப்பக்
கயல்சிலையி லாரிள்வரைய கன்ருளயிற் கரங்குவிப்பப்
புயலாழியிற் போற்றிசெயப் புலிமேருவில் வீற்றிருப்ப
திருவாணையுஞ் செங்கோலுந் திசையெட்டுங் காவல்கொளப்
பெருவாழ்வுபெற் றுயானைத்தும்பி * * *
சமையமாறுந் தலையெடுப்பத் தருமமு மருமறையுமோங்கி
யமைவில்லா மனுவொழுக்க மாதியாம்படி நிலைநிற்க
ஓர்ப்பினுந்தம் முறுகனவிலு மொன்றொடொன்று பகையின்றிப்
போர்ப்புலியும் புல்வாயும் புக்கொருதுறை நீருண்ணப்

பொன்னிநதியும் பொய்யாது பாயலும்புன லார்வாது
மன்னியநிதி வளம்பெருக்க விளைவயலெவ் வளஞ்சுரக்கப்
போகபூமி யிதுவென்னப் போகமெல்லாம் வந்தீண்டி
யேகவாணை யரசுரிமை வேழ்பொழில்களும் பெற்றதென்னப்
பாற்கடலிற் கார்க்கடலிப் படிவாழ முடிசூடி
யார்த்தவமாபிடேகத்தி லரசர் திளைத்தோட
வெவ்வுலகமு மிருணீங்க வந்தகோமா னிவனென்று
கவ்வைதீரக் கலிகாலத் தாதிகாலங் காட்டினனென
விவன்காக்கும் புவியனைத்தும் யாவையுநினைத் தின்றருளி
யவன்காக்கு மெனவகில லோகங்களு மடியடையக்
குலைபடுவன தெங்குகளே கோட்படுவன விளங்கமுகே
யலைபடுவன நீர்நிலையே யதிர்படுவன விடியேறே
தளம்படிவன போர்வாம்பே தடைபடுவன கோபுரமே
யுளம்படுவன சூன்மகளிரே யொறுப்புனைவன மதகளிறே
தடிப்புண்பன கோட்டகமே தள்ளுண்பன பூங்கொடியே
கறைபடுவது நிறைமதியே * *
பட்டுண்பன வணியல்குலே பறித்தாற்றுவ பரியாகமே
குறைபடுவன குழற்சுருளே குழைவில்லன மணிக்கொங்கையே
மறைபடுவன சூழ்காஞ்சியே மங்கொள்வனக் கிடையே
யென்றுபாடிப் பார்வேந்த ரிளங்கற்றின் மேற்போகச்
சென்றிறைஞ்சிப் பார்வேந்தர் திருவாசற் புறநிற்ப
சேரலருந் தென்னவரும் சிங்களருங் கொங்கணரும்
பேராசு பெறவேண்டிப் பிரியாது சேவிப்பத்
தம்மரசு தாம்பெற்றுத் தம்முடனே முடிசூடி
யிருமருங்குந் தேவியர்க ளணிமங்கலம் பெற்றருள
வாளரசர் தலைகாக்க யாதவகுல மாபில்வந்து [வளவசோழ
குலமாணிக்க மடநாண்முதற் கணநான்கின்வடிவு கொண்டு
னுடனுணையுந் திருவாணையு முடன்செல்ல முடிகவித்தான்
மண்ணரசர் வந்திறைஞ்ச மகுடம்புனை வளவனுடன்
பெண்ணரசும் பெருந்தாயமும் பெற்றருளும் பெண்பெருமா
ளுறையூரும் பேருரகையு முதகையுமது ராபுரியு
முறைமுறை யாண்டருளி முளரிநகர் துறந்தவன்னம்
பொன்னுசனஞ் சிங்கவணை பொலங்கற்பகப் பூஞ்சோலை
முன்னேவல் நிற்றல்முறை முறையேபெறு முலைப்பெருமா
ளளகநுதற் கயல்நயனத் தம்பொற்பூவைக் கொம்பன்ன
வுளமகிழ வந்தருளிய வலதுடைமுக் கோக்கிழானடியுடன்

வாழிவாழி மணம்புணர்ந் தூழியூழி பலவோங்கிச் [டும்
செம்பொன்வீர சிங்காசனத்துலகுடைமுக்கோக் கிழானடிகளோ
வீற்றிருந்தருளிய கோவிராசகேசரி வன்மரான
திரிபுவனச் சக்ரவர்த்திகள் ராசராசதேவர்க்கு யாண்டு—"

என்று கல் வெட்டு(கட்டுரை)கூறுகிறது.

(இவன் மரபோர்களில் பெருந்தன்மையுடையோர் கள்ளரிடையருடைய சாதி நியாயங்களை தீர்த்துவிடுகிறதென்றும் அதற்காக அவர்கள் தலைக்கட்டுக்கு இரண்டரையணு வீதம் அறச்சிலவுக்குக் கொடுக்கிறதென்றும் ஒரு வுடன்படிக்கை ஏற்பட்டிருப்பதாகவும், அந்தப்படி மதுக்கூர், சிங்கவனம் பாளையதாரர்கள் தீர்த்துவிடுகிறதாகவும் தெரிகிறது).

மூவசோழன் (மும்முடிசோழன்) :—"மூவரையன் கோட்டை" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; சேர பாண்டியர்களோடு பெரும்போர்செய்து அவர்களுடைய முடிகளைப் பறித்து தன்முடியின்மேல் ஒன்றின்மேலொன்றுகச் சூட்டிக்கொண்டு அவர்கள் தலையில் விளக்குகள் வைத்தவன்.

(உஉ) "ஒருவர் முன்னொர்நா டந்து பின்செலா
வுதியர் மன்னரே மதுரை மன்னரொன்
றிருவர் தம்மையுங் கிழிகள் சுற்றுவித்
தெரிவி ளக்குவைத் திகல்வி ளைத்ததும்."

என்று கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்) கூறுகிறது.

இவன் பெயர் "மூவரையன், மும்முடியன்" எனவும் வழங்கும்; "மூவலூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தையும், மூவனூர் முதலிய வூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "மூவரையன் (மூரியன், மூங்கிலியன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

(பொன்மாளிகைதுஞ்சிய) பராந்தகசோழன் :—"பரா(ந்தகன்) கோட்டை" என்னும்நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; பொன்மாளிகையில் துயின்ற காரணத்தினுல் "பொன்மாளிகை துஞ்சியதேவர்" என்று பெயர்பெற்றவன்;

வானவன் மாதேவிகணவன்; "பராய்த்துறை" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையுண்டாக்கினவன்; வீரபாண்டியனோடு போர்செய்திறந்தவன்; (சோழன்றலைகொண்ட வீர பாண்டியன்" என்று பாண்டிமண்டலக் கல்வெட்டுகள் கூறுகின்றன).

விக்கிரமசோழன் (கோப்பரகேசரி):—"விக்கிரமசோழபுரம்" என்னும் சிவதல நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; "முக்கோக்கிழானடிகள்" கணவன்; வரகுண பாண்டியனுக்கு மகட்கொடுத்தவன்; அறம்வழாதவன்; திக்கு விசயம்பண்ணி விசயாபிடேகஞ் செய்தவன்; இவன் பெயர் "விக்கிரமத்தரையன், விக்கிரமங்கொண்டான், விக்கிரமமாண்டான், விக்கிரமப்பிரியன், விக்கிரமமாளி, விக்கிரமமார்ட்சி" எனவும் வழங்கும்; "விக்கிரமசோழநல்லூர், விக்கிரமசோழபுரம், விக்கிரமம்" முதலியவூர்களையும், திருவரங்கத்தில் "திருவிக்கிரமன்றிருவீதி" என்று இரண்டு வீதிகளையும், பாண்டிநாட்டில் சிவகங்கைக்கு வடகிழக்கில் விக்கிரமசோழபுரம் என்னும் சிவதலத்தையும் உண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "விக்கிரமத்தரையன் (விக்கிரமத்தான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

"பூமாது புணர புவிமாது வளர
நாமாது விளங்க சயமாது விரும்பத்
தன்னிரு பதமலர் மன்னவர் சூட
மன்னிய வுரிமையால் மணிமுடி சூடிச்
செங்கோல் சென்று திசைதொறும் வளர்ப்ப
வெங்கலி நீங்கி மெய்யறந் தழைப்பக்
கலிங்க மிரியக் கடமலை நடாத்தி
வலங்கொ ளாழி வரையாழி திரிய
யிருசுட ரளவு மொருகுடை நிழற்ற
விசயாபி டேகம்பண்ணி வீரசிங் காசனத்து
முக்கோக்கிழா னடிகளோடும் வீற்றிருந் தருளிய
கோப்பரகேசரி வன்மரான திரிபுவனசக் கரவர்த்திகள்
விக்கிரம சோழ தேவர்க்கு யாண்டு—"

என்று கல்வெட்டு (கட்டுரையு)ம்;

(உரு) "வேழ மொன்றுகைத் தாவின் விண்ணின்வாய்
விசைய டங்கவு மசைய வென்றதும்."

என்று கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியமுங் கூறுகின்றன.

இராசராசசோழன் (கோவிராசகேசரி):—உறையூரை இராச தானியாகக் கொண்டவன்; வாணரையன் மகளாகிய புவன முழுதுடையாள் கணவன்; பூதலம்பொதுநீக்கியாண்டவன்; சிறந்த வீரமுங்கொடையுமுடையவன்.

சீர்மன்னு மலர்மகளுஞ் சிறந்ததனி நிலச்செல்வியும்
பார்மன்னு பசுந்துளவச் சயமடந்தையு மனங்களிப்ப
புகழ்மடந்தை புகழ்பாடப் புலமகளும் பூசுரரு
முகமலர்ந்து கண்களிப்ப முனிவர்கணந் துதியெடுப்பத்
தனித்துலக முழுதாளத் தடந்தரளவார் கடற்பிரிந்த
பனித்துளவ நறுந்தாமப் பரந்தாம னெனவந்து
கடிமுரச மொருமூன்றுங் கடலுங்கு மெனமுழங்கப்
படிமுழுது மிருணீங்கப் பருதிதனிக் குலம் விளங்கக்
கொடியேந்து புலியிமையக் குலவரைமேல் வீற்றிருப்ப
முடிவேந்த ரடிசூட முறையினல் முடிசூடி
வடவரையின் படவரவி னணிமுடியும் பொடியாக
குடவரையின் நெடுந்தோளின் வாரணிகலன் றரித்தருளிப்
பாரேழும் பொழிலேழும் வடிபரிக்குங் கிரியேழு
நீரேழுந் தனிகவித்து நிறைமதிவெண் குடைநிழற்றப்
புறவாழியும் வரையாழியும் பூதலமும் பொதுநீக்கி
யறவாழியுஞ் செங்கோலு மனந்தகற்ப காலம்புரக்க
வொப்பரிய மறைநாலு முறைதிறம்பா மனுநூலுஞ்
செப்பரிய வடகலையுந் தென்கலையுந் தலையெடுப்ப
நீதிதரு குலநான்கு நிலைநான்கு நிலைநிற்ப
வாதியுகங் குடிபுகுத வறுசமையந் தழைத்தோங்கப்
பொருதுறையுஞ் சினவேங்கையு மடமானு புகுந்துடனே
யொருதுறைநீ ரினிதுண்டு பகையின்றி யுறவாடப்
புயல்வாரி பொழிநற்குலப் பொற்றொடியவர் கற்புயர
வயல்வாரி வளம்பெருகி மற்றையவர்முத் தமிழ்வளர்க்கும்
நெறிமுறைமையடித் தனதாணை திசைநடப்ப நிருபர்குலம்
[பொலம்பா] நிலங்காவற் றொழிற்பூண்டு      *      *
*   செய்தலின் முருகனென்றுந் திருவடிவின் மதனனென்றும்
பெருகொளியிற் பருதியென்றும் பெருந்தகையிற் றருமனென்றும்
தண்ணளியின் மதியென்றுந் தனந்தரலிற் றருவென்றும்

பொன்னுலகத் திகல்வேந்தரு மறைவாணரும் போற்றெடுப்ப
மீனவருஞ் சிங்களரும் விக்கலருங் கற்கடரும்
வானவருங் குந்தளரும் வங்களரும் பார்மருங் கங்கவரும்
மாகதரும் பாஞ்சாலரும் காம்போதருங்
கொங்கணருந் திரிகத்தருங் கூபகருஞ் சாவகரும்
பண்டையருந் திருவடிக்கீழ் வந்திறைசொரிந் தினிதிறைஞ்ச
வெண்டிசையும் புரந்தளிக்கு மிராசராசதுங்க னிராசராசன்
மலைபேரிலும் வான்பேரிலு மாறுறங்கா நிலைபேரிலும்
பேராத்த நெஞ்சுடைய செஞ்சேவக னரைசற்
பெரும்புக ழாகாம மங்கையருக் கரசாகி
யுலகுடைய பெருமாளுட னொக்கமணி முடிகவித்தா
ளுறந்தைவள நகரம் போலுலகத்திற் பொருபதிநான்கும்
பிறந்துடையா ளிராசராசன் பிரியா வெனைக்கா
றியல்வாழ்வு மிசைவாழ்வு மிமையமலை மகளறத்தின்
செயல் வாழ்வு மிராசராசன் றிருத்தாலி பெற்றுடையா
ரசிறைஞ் சளக நறளந்த வுலகுதனி
லுரைசிறந்த தனியாணை யுடனாணை பெற்றுடையாள்
தவளவயப் பரிகண்டளா காத்தளிக்குங் கற்பகாலம்
புவனியேழ் தனதாணையிற் புரக்கவந்த வந்தபுரப்பெருமாள்
பொய்யாநெடு நிலநான்கும் பொருகுடையி னிருநான்கு
மாதிரமு மிருணீங்கவந்த வாணர்குல நிலைவிளக்கு
குலகிரியெட்டும் பரித்தகுல வட்டமலர்க் கவிதைச்
சக்கரவர்த்தித னந்தப்புரச் சக்கரவர்த்தி காசெறிய
கொடையல வானவாச்சி குலதீபர தராபதி
மாமாதேவியார் தொழுதிறைஞ்சு மடந்தைமார் கவர்தம் பெருமா
ளவ்வுலகத் தருந்ததியு மதிசயிக்கும் பெருங்கற்பா
லிவ்வுலகத் தருந்ததியென விசைந்த திசைவிளங்கத்
திருந்தியவே லிராசராச னிராசேந்த்ர திருவருளொன்றும்
பெருந்தளிப்பாற் கடற்படிந்து விளையாடும் பெடையென்னு
மாணையெங்குந் தனதாக்கிய வாதியிராசன்மா தேவிவளர்வங்க
சூளாமணி மறையவர் தொழுஞ் சிந்தாமணி
சோணாட னிராசராசன் சூருமலர்ப்பூந் துழாய்மார்பில்
பூணார மெனவிளங்கிய புவனமுழு துடையாளு
மனந்தகற்பநாள் பிரியாதுமனங்களித்து மணம்புணரச்
செம்பொன்வீர சிங்காசனத்துப் புவனமுழு துடையாளோடும்
வீற்றிருந்தருளிய கோராசகேசரி வன்மரான
திரிபுவனச்சக்கர வர்த்திகள் ராசராசதேவர்க்கு யாண்டு—"

என்று கல்வெட்டு (கட்டுரை) கூறுகிறது.

வீரநாராயணபராந்தகசோழன் (கோப்பரகேசரி):—உறையூரை இராசதானியாகக் கொண்டவன்; "வீரநாராயணனேரி (வீராணத்தேரி), வீரநாராயணன்சாலை" என்பவற்றை யுண்டாக்கினவன்; மதுரையும், ஈழமும் போரிற் கைக்கொண்டவன்.

"மதுரைகொண்ட கோப்பரகேசரி வன்மற்கு யாண்டு பதினாலாவது நாள் பதினாறு காலியூர்க் கோட்டத்து தன்கூற்று உத்தரமேருச் சதுர்வேதிமங்கலத்துச் சபையோம்; இவ்வாண்டு முதல் எங்களுக்குப் பெருமானடிகள் எம்பெருமான் வீரநாராயண பராந்தகதேவன் கோப்பரகேசரி வன்மருடைய திருமுகம் வரக்காட்ட, திருமுகப்படி ஆஞ்ஞையால் சோழநாட்டுப் புறங்கரம்பைநாட்டு வங்கநகர்க் காரஞ்சைகொண்ட விக்கிரமவித்தப் பட்டனாகிய சோமாசிப்பெருநான்."

என்று கல்வெட்டும்;

"வெங்கோல் வேந்தன் றென்னனாடு மீழமுங் கொண்டதிறற்
செங்கோற் சோழன் கோழிவேந்தன் செம்பியன் பொன்னணிந்த
வங்கோல் வளையார் பாடியாடு மணிதில்லை யம்பலத்து
ளெங்கோ னீசனெம் மிறையை யென்றுகொ லெய்துவதே."

என்று (கண்டராதித்தர்) திருவிசைப்பாவும்;

(கக) "சிங்க ளத்தொடு தென்மது ராபுரி
செற்ற கொற்றவன் வெற்றிகொள் காலையே
வெங்க ளத்தி லடுமடைப் பேய்க்குலம்
வேலை புக்கு விரல்க டிறந்தவும்."

என்று கலிங்கத்துப்பரணி பேய்களைப் பாடியதும்;

(உரு) "ஈழ முந்தமிழ்க் கூட லுஞ்சிதைத்
திகல்க டந்ததோ ரிசைப ரந்ததும்"

என்று கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியமுங் கூறுகின்றன.

கண்டராதித்த சோழன்:—தஞ்சைநகரை இராசதானியாகக் கொண்டவன்; பிராந்தக மாதேவடிகளான செம்பியன்மாதேவியார் கணவன்; திருத்தில்லைச் சிற்றம்பலமுடையாராகிய "சபாநாயகப்பெருமான்" பேரில் "திருவிசைப்பா" பதிகம் பாடினவன். (இப்பதிகம் ஒன்பதாந் திருமுறையிலிருக்கிறது). தன்

மனைவி பெயரால் "செம்பியமாதேவி" என்னும் சிவதலத்தையும்; "செம்பியமாதேவி" என்னு மூர்களையுமுண்டாக்கினவன்.

மதுராந்தக சோழன்:—கண்டாதித்தசோழன் மகன்; தஞ்சையை இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "உத்தம சோழன்" எனவும் வழங்கும்; "மதுக்கூர், மதுக்குடி (மத்துகுடி), மதுமங்கலம்" முதலிய வூர்களை யுண்டாக்கினவன்.

"மதுராந்தக தேவரான உத்தமசோழதேவரை திருவயிறு வாய்க்கவுடைய பிராட்டியார் பிராந்தகன் மாதேவடிகளான செம்பியன்மாதேவியார்."
"கண்டாதித்ததேவர் நம்பிராட்டியார் பிராந்தகன் மாதேவடிகள் பிராட்டியார் செம்பியன் மாதேவியார் மகனான மதுராந்தகதேவரான உத்தம சோழதேவரை திருவயிறுவாய்க்கவுடைய பிராட்டியார்."

என்று கல்வெட்டுகள் கூறுகின்றன.

இராசராசசோழன் (கோவிராசகேசரி):—"மதுராந்தக சோழன்" மகன்; "கங்கைகொண்டசோழன்" தமையன்; "திரைலோக்கியமாதேவி, தந்தசத்திவிடங்கி, பஞ்சவன்மாதேவி, அபிமானவல்லி, சோழமாதேவி" என்னும் பெண்களின் கணவன்; "இராசேந்திரசோழன், இராசாதிராசசோழன், வீரசோழன், மதுராந்தகசோழன், பராந்தகசோழன்" என்பவர்களின் தந்தை; "உத்தமசோழன், விசயாலயசோழன், கேரளசோழன், இராசேந்திரசோழன், சுந்தரசோழன், வீரராசேந்திரசோழன்" என்பவர்களின் பாட்டன்; இப்பதின்மூன்றுபேர்களும் ஒரே குடும்பமுடையவர்களென்பதற்கறிகுறியாக "கோவிராசகேசரி அல்லது கோப்பரகேசரி" என்பதற்குப் பின்னும், பெயருக்கு முன்னும் "உடையார்" என்னும் பட்டஞ்சூட்டினவன்; காந்தளூர்ச்சாலைக் கலமறுத்து "வேங்கைநாடு, கங்கபாடி, தடிகைபாடி, நுளம்பபாடி, குடமலைநாடு, கொல்லம், கலிங்கம், ஈழமண்டலம், பாண்டிமண்டலம், பன்னீராயிரம் பழந்தீவு" முதலியவற்றை போர்செய்து கைக்கொண்டவன்.

"திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக்

காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி
வேங்கை நாடுங் கங்க பாடியுந்
தடிகை பாடியும் நுளம்ப பாடியுங்
குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்
முரட்டெழிற் சிங்கள ரீழமண் டலமு
மிரட்ட பாடி யேழரை யிலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீ ராயிரமுந்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
னெழில்வள ரூழியு ளெல்லா யாண்டுந்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் கோராச கேசரி வன்மரான
வுடையார் ராசராச தேவர்க்கு யாண்டு —"

என்று கல்வெட்டு (கட்டுரையு)ம்;

(உச) "சதய நாள்விழா வுதியர் மண்டலந்
தன்னில் வைத்தவன்".

என்று கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியமுங் கூறுகின்றன.

இவன் சோழமண்டலத்தை "இராசராசவளநாடு, பாண்டிகுலாசனிவளநாடு, கடலடையாதிலங்கைகொண்டவளநாடு, உய்யக்கொண்டவளநாடு, அருண்மொழிதேவவளநாடு, நித்தவிநோதவளநாடு, இராசேந்திரசிங்கவளநாடு, சத்திரியசிகாமணிவளநாடு, கேரளாந்தகவளநாடு, சயசிங்ககுலகாலவளநாடு, இராசாசிரயவளநாடு, விருதராசபயங்கரவளநாடு" என்று பன்னிரண்டு வளநாடுகளாக வகுத்தவன்; இவன் பெயர் "பாண்டிகுலாசனி, கடலடையாதிலங்கைகொண்டான், உய்யக்கொண்டான், அருண்மொழிதேவன், நித்தவிநோதன், இராசேந்திரசிங்கன், சத்திரியசிகாமணி, கேரளாந்தகன், சயசிங்ககுலகாலன், இராசாசிரயன், விருதராசபயங்கரன், சிவபாதசேகரன், கொங்கணன், நாடன் நாட்டரையன்" எனவும் வழங்கும்; "நாட்டியத்தான்குடி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும்; தஞ்சாவூரில் "கொங்கணேசுரர்" கோயிலையும்; மன்னார்குடியில் "கயிலாயநாதர், அண்ணாமலைநாதர்" கோயில்களையும்; முதன்மனைவி பெயரால் "திரைலோக்கி" என்னும் (திருவிசைப்பா பதிகம்பெற்ற) சிவ

தலத்தையும்; "நாடாகுடி, நாட்டான்மங்கலம்" முதலியவூர்களையும்; "உய்யக்கொண்டான், நாட்டுவாய்க்கால்" என்னும் சிற்றாறுகளையும்; "இராசவாய்க்கால், நாட்டுவாய்க்கால்" என்னும் பல கால்வாய்களையும் உண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "அருண்மொழிதேவன் (அருமொழிதேவன்), விருதராசபயங்கரன் விருதலான்), உய்யக்கொண்டான், கொங்கணன், நாடன், நாடான், (நாடாள்வான்), நாட்டரையன் (நாட்டரசன், நாட்டான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

கங்கைகோண்டசோழன்:—மதுராந்தகசோழன் மகன்; இராசராசசோழன் தம்பி; "கங்கைகொண்டசோழபுரம்" என்னும் (திருவிசைப்பா பதிகம்பெற்ற) சிவதல நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; போரிற் சிறந்தவீரன்; இராசராசசோழன் கோருதற்படி சேனாதிபதியாய் கங்கபாடியைப் போரிற்கைக்கொண்டு ஆண்டவன்; இவன் பெயர் "சேனாதிபன், சேனைத்தலைவன், தானாதிபதி, தானாதிபன், தானைத்தலைவன், படைத்தலைவன், படையாட்சி, மாவெற்றி, கங்கைராயன், கங்கைகொண்டான், கங்கையாண்டான், கங்கையுடையன், கங்கைநாடன்" எனவும் வழங்கும்; தமையன் முதன்மகனாகிய இராசேந்திரசோழனால் "இருமடிசோழன் (இரண்டு போர்வீரன்)" என்று முடிசூட்டப்பெற்றவன்;

> "தன், சிறிய தாதை யாகிய யெறிவலிக்
> கங்கை கொண்ட சோழனைப் பொங்கிகல்
> இருமடிச் சோழ னென்றும்"

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு(கட்டுரை) கூறுகிறது.

இவன் மரபோர்க்கு "சேனாதிபதி (சேனாபதி, சேனாதி), தானாதிபதி (தானாதி), படைத்தலைவன் (படைத்தலையன்), படையாட்சி (படையெழுச்சி), மாவெற்றி (மாவெட்டி), கங்கைராயன் (கங்கன்), கங்கைநாடன் (கங்கநாடான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

தொண்டைமான்:—கரிகாற்பெருவளவசோழன் இளைய மகன்; கிழக்கே கடலையும், தெற்கே பிணாகி என்னும் பெண்ணை

யாற்றையும், மேற்கே பவளமலையையும், வடக்கே திருவேங்கட மலையையும் எல்லைகளாகக்கொண்ட இருபதுகாதத்துக்கு தந்தையால் முடிசூட்டப்பெற்று, "காஞ்சீபுரம்" என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; இவன் காலமுதல் அந்நாட்டுக்குத் தொண்டைமண்டலம் என்னும் பெயர் வழங்கலாயிற்று;

"மேற்குப் பவளமலை வேங்கடம் நேர்வடக்காம்
ஆர்க்கு முவரி யணிகிழக்குப்—பார்க்குளுயர்
தெற்குப் பிஞகி திகழிருபதின் காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு."

என்று பழைய தனிப்பாடல் கூறுகிறது.

"வடமுல்லைவாயில்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலத்தைக் கண்டுபிடித்து மகாமண்டபத்தில் எருக்கந்தூண் நிறுத்தி திருப்பணிசெய்தவன்;

[கட்டிட்
" சொல்லரும்புகழான்றொண்டைமான்களிற்றைச்சூழ்கொடிமுல்லையாற்
டெல்லையிலின்பமவன்பெறவெளிப்பட்டருளியவிறைவனேயென்றும்
நல்லவர்பரவுந்திருமுல்லைவாயிலுதனேநறைவிடையேறி
பல்கலைப்பொருளே படுதுயர்களையாய் பாசுபதாபரஞ்சுடரே."

என்று திருமுல்லைவாயில் தேவாரங் கூறுகிறது.

தொண்டைமண்டலம் வேளாளரில் ஒரு வகுப்பாருக்கு "முதன்மையார் (முதலியார்)" என்னும் பட்டங்கொடுத்தவன்; இவன் பெயர் "தொண்டையன், தொண்டைப்பிரியன்" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "தொண்டைமான், தொண்டையன், தொண்டைப்பிரியன் (தொண்டாப்பிரியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

தோண்டைமானிளந்திரையன் :—தொண்டைமான்மகன்; காஞ்சீபுரத்தை இராசதானியாகக்கொண்டவன்; சிறந்த வீரமுங் கொடையுமுடையவன்; கவிபாடுதலில் வல்லவன்; (இவன் பாடியபாடல்கள் புறநானூற்றில் கஅரு-ம் பாடலாகவும்; நற்றிணையில் கூச, கூக, கOகூ-ம் பாடல்களாகவும் சேர்க்கப்பட்டிருக்கின்றன); கடியலூர் "உருத்திரங்கண்ணனுர்" என்னும் புலவர் பெருமான் பாடிய "பெரும்பாணுற்றுப்படை"க்குத் தலைவன்;

"ஔவை" என்னும் புலவர்பெருமாட்டி புகழ்ந்து பாடப்பெற்ற வன்; (இப்பாடல் புறநானூற்றில் கூரு-ம் பாடலாகச சேர்க்கப் பட்டிருக்கிறது).

மாவலி:—முற்பிறப்பில் எலியாயிருந்து மறைக்காட்டுத் திருக்கோயிலில் விளக்கிலிருந்த நெய்யைத் தின்றபோது மங்க லாயெரிந்துகொண்டிருந்த திரி மூக்கிற்பட்டு நீண்டு எரிந்த காரணத்தினுல் எலிவடிவம் நீங்கப்பெற்று தொண்டைமான் மரபில் வந்தவன்; "மாவலிபுரம்" என்னும் நகரத்தையுண்டு பண்ணி இராசதானியாகக்கொண்டவன்; (இந்நகரங் காண்டற் கரியது) "திருமாணிகுழி" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதல த்தையுண்டாக்கினவன்; பூர்வவுணர்ச்சியினுல் திருவிளக்கிடுந் திருப்பணியை மேற்கொண்டொழுகிச் சிவபதம் பெற்றவன்; இவன் மரபோர்க்கு "மாவலி" என்னும் பட்டப்பெயர் வழங்கு கின்றது.

புல்லி—தொண்டைமான் மரபில் வந்தவன்; திருவேங்கடத்தை இராசதானியாகக் கொண்டவன்; சிறந்த வீரமுங்கொடையு முடையவன்; "கல்லாடனுர், மாமூலனுர்" என்னும் புலவர் பெருமக்கள் புகழ்ந்து பாடப்பெற்றவன். (இப்பாடல்கள் அகநானூற்றில் கூக, அஙு, உ0கூ, உகூரு, ஙகக, ஙருகூ, ஙகூஙு-ம் பாடல்களாகவும்; நற்றிணையில் கச-ம் பாடலாகவும் சேர்க்கப் பட்டிருக்கின்றன).

"காவிரி கிணையுந் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி யம்பர் கிழவோன்
நல்லருவந்தை வாழியர் புல்லிய
வேங்கட விறல்வரைப் பட்ட
வோங்கல் வானத்துறையினும் பலவே."

என்று புறநானூறு ஙஅரு-ம் பாடல் கூறுகிறது.

ஆதனுங்கன்:—தொண்டைமான் மரபில் வந்தவன்; திரு வேங்கடத்தை இராசதானியாகக் கொண்டவன்; சிறந்த கொடை யும் வீரமுமுடையவன்; கள்ளில் "ஆத்திரையனுர்" என்னும் புலவர்பெருமகன் புகழ்ந்து பாடப்பெற்றவன். (இப்பாடல்கள்

புறநானூற்றில் கஎரு, ௯அகூம் பாடல்களாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன).

பல்லவன்:—தொண்டைமான்பரபில் வந்தவன்; பல்லவபுரம் (பல்லாவரம்)" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் "பல்லவராயன், பல்லவாண்டான், பல்லவங்கொண்டான், பல்லவப்பிரியன், பல்லவமுடையன், பல்லவாளி, பல்லவாட்சி" எனவும் வழங்கும்; சிறந்த வீரமுங் கொடையுமுடையவன்; சோழனோடு பெரும்போர் செய்து, சோழநாட்டைக் கைக்கொண்டு, "பல்லவனீச்சரம்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலங்களையும்; 'பல்லவராயன் குடிக்காடு, பல்லவராயன்பட்டு, பல்லவராயன்பட்டி, பல்லவராயன்பேட்டை" முதலியவூர்களையும்; "பல்லவன்" என்னும் சிற்ருற்றையும் உண்டாக்கினவன்; திக்குவிசயம்பண்ணி, வேற்றரசர்களைவென்று, விசயாபிடேகம் பண்ணினவன்; இவன் மரபோர்க்கு "பல்லவன், பல்லவராயன், பல்லவாண்டான்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"உரிமையாற்பல்லவர்க்குத்திறைகொடாமன்னவரைமறுக்கஞ்செய்யும்
பெருமையார்புலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்ருமன்றே."

என்று (சுந்தரமூர்த்தி நாயனர்) தேவாரங் கூறுகிறது.

ஓணன்:—பல்லவன் மரபில்வந்தவன், "காஞ்சிபுரம்" நகரத்தை இராசதானியாகக் கொண்டவன்; தன் பெயரையும், காந்தன் என்னும் தன் தம்பி பெயரையும் ஒன்றுசேர்த்து "ஓணகாந்தன்றளி" என்னும் தேவாரம்பெற்ற சிவதலத்தையும்; ஓணமங்கலம், (திரு)ஓணக்குடி, (திரு)ஓணம்" என்னும் ஊர்களையு முண்டாக்கினவன்.

'பாரூர் பல்லவனூர் மதிற் காஞ்சிமா நகர்வாய்ச்
சீரூரும் புறவிற் றிருமேற்றளிச் சிவனை."

என்று (சுந்தரமூர்த்தி நாயனர்) தேவாரங் கூறுகிறது.

காடவன்:—பல்லவன் மரபில் வந்தவன்; "காஞ்சீபுரம்" நகரத்தை இராசதானியாகக் கொண்டவன்; இவன் பெயர் 'காடவராயன்" எனவும் வழங்கும்; "காடவன்பாடி (காடன்

பாடி)" என்னும் நகரத்தையும்; "காடவன்குடி (காடவகுடி), காடவராயன்பட்டி, காடவன்வந்தகுடி (காடந்தகுடி)" என்னு மூர்களையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "காடவராயன்" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

ஐயடிகள் காடவர்கோன்:—பல்லவன் மரபில் வந்தவன்; "காஞ்சிபுரம்" நகரத்தை இராசதானியாகக் கொண்டவன்; காடவர்தலைவன்; சிறந்த சிவபத்தியும் வீரமுங் கொடையுமுடையவன்; கவிபாடுதலில் வல்லவன்; "தில்லை, குடந்தைக் கீழ்க்கோட்டம், ஐயாறு, ஆரூர், துருத்தி, கோடிகா, இடைவாய், நெடுங்களம், குழித்தண்டலை, செங்காட்டங்குடி, ஆனைக்கா, மயிலாப்பூர், உஞ்சேனைமாகாளம், வளைகுளம், சாய்க்காடு, பாச்சிலாச்சிராமம், சிராமலை, மழபாடி, ஆப்பாடி, கச்சியேகம்பம், பனந்தாள், ஒற்றியூர், கடவூர், கடவூர்மயானம்" என்னும் இருபத்து நான்கு திருக்கோயில்களைப் புதுக்கித் திருப்பணிசெய்து, இருபத்துநான்கு திருவெண்பா பாடினவன்; (இப்பாடல்கள் பதினோருந் திருமுறையிலிருக்கின்றன); அறுபத்துமூன்று நாயன்மார்களிலொருவன்.

"ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியேன்"

என்று (தேவாரப்) திருத்தொண்டத்தொகையும்;

"சத்தித் தடக்கைக் குமரனற் றாதைதன் றானமெல்லா
முத்திப் பதமொரோர் வெண்பா மொழிந்து முடியரசா
மத்திற்கு மும்மைநன் றூலரற் காயைய மேற்றலென்னும்
பத்திக் கடலை யடிகளா கின்றநம் பல்லவனே."

என்று திருத்தொண்டர் திருவந்தாதியும்;

"வையநிகழ் பல்லவர்தங் குலத்துவந்த
மாமணிமா நிலமுழுது மகிழ்ந்துகாக்கு
மையடிகள் காடவர்கோ னருளா னுல்க
ளறிந்தரசு புரிந்திடுதெ லமையுமென்றே
பொய்யனைய வுடல்வாழ்வு கழியுமாறு
பொருந்தியிடம் புகழ்வெண்பாப் புலியூர்மேவுஞ்
செய்யதிரு வடிமுதலாப் பதிகடோறுஞ்
செப்பினு ரென்வினைக டப்பினாரே."

என்று திருத்தொண்டர் புராணசாரமுங் கூறுகின்றன.

கழற்சிங்கன்:—பல்லவன் மரபில் வந்தவன்; "காஞ்சீபுரம்" நகரத்தை இராசதானியாகக் கொண்டவன்; காடவர் தலைவன்; சிறந்த சிவபத்தியுங் கொடையும் வீரமுமுடையவன்; தானும் தன்மனைவியும் சிவதல யாத்திரைசெய்துகொண்டு, திருவாரூரை யடைந்து, கோவிலுக்குட்புகுந்து, சுவாமிதரிசனஞ் செய்யுங் காலத்தில், திருமாலைக் குறட்டுக்குச் சமீபத்திற் கிடந்தபூவை யெடுத்து, மோந்த குற்றத்திற்காக "செருத்துணைநாயனார்" என்பவரால் மூக்கறுபட்டுக் கீழேவிழுந்து அழுது புலம்பிக் கொண்டுகிடந்த தன் மனைவியைச் சுவாமி தரிசனஞ்செய்து கொண்டு வந்துபார்த்து பூவையெடுத்து மோந்ததற்கு மூக்கை யறுத்தது சமனுகாதென்று, பூவையெடுத்த கையையும் வாங்கினவன்; அறுபத்துமூன்று நாயன்மார்களிலொருவன்.

"கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்."

என்று (தேவாரம்) திருத்தொண்டத்தொகையும்;

"மாதவத் தோர்தங்கள் வைப்பினுக் காரூர் மணிக்குவைத்த
போதினைத் தான்மோந்த தேவிதன் மூக்கை யரியப்பொற்கை
காதிவைத் தன்றோ வரிவதென் றூங்கவள் கைதடிந்தா
ஞதமொய்த் தார்வண்டு கிண்டுபைங் கோதைக் கழற்சிங்கனே."

என்று திருத்தொண்டர் திருவந்தாதியும்,

"காடவர்தங் குலமுவந்த கழலார் சிங்கர்
காதன்மிகு தேவியுடன் காவலாரூ
ராடவல பெருமானைப் பணிவாரங்கோ
ரகன்றமலர் தனைமோந்த வரிவைமூக்கைச்
சேடுடைய செருத்துணையா ரரியக்கேட்டு
திறலரசர் மலரெடுத்த செங்கையென்றே
சூடகமுன் கைதடிந்து ஞாலங்காத்த
தூய்மையா ரருள்சேர்ந்த வாய்மையாரே."

என்று திருத்தொண்டர் புராணசாரமுங் கூறுகின்றன.

செஞ்சிக்காடவன்:—பல்லவன்மரபில் வந்தவன்; "செஞ்சிக் கோட்டை" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதனியாகக் கொண்டவன்; இவன் பெயர் "செஞ்சியர்கோன்" எனவும்

வழங்கும்; "புகழேந்தி" என்னும் புலவர்பெருமான் பாடிய "செஞ்சியர்கோன் கலம்பகம்" என்னும் நூலுக்குத் தலைவன்.

"— கடிபரணச்
செம்பொற் பதணச் செறியிஞ்சிச் செஞ்சியர்கோன்
கம்பக் களியானைக் காடவனும்—"

என்று விக்கிரம சோழனுலாவும்;

"காரார் களந்தைப் புகழேந்தி சொன்ன கலம்பகத்தி
னேராது நையும்படி யென்ற பாடலி னேரியர்கோன்
சீராகச் செப்பிய நற்பாடல் கொண்டவன் செஞ்சியர்கோன்
மாராபி ராமனங் கொற்றந்தையூர் தொண்டை மண்டலமே."

என்று தொண்டைமண்டல சதகமுங் கூறுகின்றன.

(பல்லவன் மரபில் "பாபதேவன், கந்தவர்மன் ஐவர், புத்த வர்மன் மூவர், புத்யங்குரன், விட்ணுகோபன் மூவர், குமார விட்ணு இருவர், வீரவர்மன், சிம்கவர்மன் மூவர், யுவராசன், நந்திவர்மன் மூவர், சிம்கவிட்ணு. மகேந்திரவர்மன் இருவர், நரசிம்கவர்மன் இருவர், பரமேச்சுரவர்மன் இருவர், பீமவர்மன், ஆதித்யவர்மன், கோவிந்தவர்மன், இரண்யவர்மன், தந்திவர்மன், நிருபதுங்கன், அபராசிதன்" முதலிய எண்ணில்லாத அரசர்கள் ஆண்டதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன).

---

## இராசேந்திரகுல வரலாறு:—

இராசேந்திர சோழன் (கோப்பரகேசரி):—இராசராச சோழன் மகன்; தஞ்சாவூரை இராசதானியாகக் கொண்டவன்; சிறிய தந்தை—கங்கைகொண்டசோழனை "இருமடி (இரண்டு போர் வீர) சோழன்" எனவும்; தம்பியர்களில்—இராசாதிராசனை மும்மடி (மூன்று போர்வீர) சோழனை "சோழபாண்டியன்" எனவும், வீரசோழனை "கரிகாலன்" எனவும், மதுராந்தக சோழனை "சோழகங்கன்" எனவும், பராந்தகசோழனை "சோழ வயோத்தியராசன்" எனவும்; புதல்வர்களில்—இராசேந்திர சோழனை "உத்தமசோழன்" எனவும், ஆதிராசேந்திர சோழனை பூமாலை முடிகொண்டசோழனை "விசயாலயன்" எனவும்,

இராசமகேந்திர சோழனை சோழகேரளனை "சோழகேரளன்" எனவும், இராசேந்திர சோழனை கடாரங்கொண்ட சோழனை "சோழசனகராசன்" எனவும், புகழ்முடிகொண்டசோழனை "சுந்தர சோழன்" என்வும், வீரராசேந்திரசோழனை இரட்டபாடி கொண்டசோழனை "சோழ கன்னகுச்சியராசன்" எனவும், பெயரர்களில்—மதுராந்தகசோழனை "சோழவல்லபன்" எனவும்; ஆனைச்சேவக சோழனை "நிருபேந்திரசோழன்" எனவும் முடி சூட்டி யனுப்பி திக்குவிசயம்பண்ணி "பாண்டிநாடு, ஈழநாடு, சேரநாடு, கொங்குநாடு, குடநாடு, கங்கநாடு, இடைதுறைநாடு, வேங்கைநாடு, இரட்டைநாடு, கோசலைநாடு, தாராதேசம், கலிங்க தேசம், மாசுணிதேசம், ஒட்டரதேசம், இலாடதேசம், வங்காள தேசம், கடாரதேசம், மாநக்கவாரம்" முதலிய எண்ணில்லாத தேசங்களைக் கைக்கொண்டு, ஆங்காங்கு புலிக்கொடியை நாட்டி சாளுக்கியரோடு பெரும்போர் செய்து "சத்துருபயங்கரன், கரபத்திரன், மூலபத்திரன்" முதலிய எண்ணிறந்த யானைகள்; எட்டுநிரை குதிரைகள்; ஒட்டக நிரைகள்; பன்றிக்கொடி முதலிய இராசசின்னங்கள்; "சத்தி, அவ்வை, சாங்கப்பை" முதலிய தேவியர்குழாங்கள்; பாவையர் கூட்டங்கள் முதலியன கைப்பற்றியும்; கலிங்கர்மன் "வீரசலாமேகனை" தலைகொய்தும்; இலங்கையர்க்கிறைவன் "மானுபரணன்" மனைவிய ரிருவரைப் பிடித்தும் விசயாபிடேகம் செய்தவன்; இவன் பெயர் 'விசயராசேந்திரன், விசயராசேந்திரசோழன், விசயராசேந்திரதேவன், விசயராசேந்திர சோழதேவன், கொடிகொண்டான், கொடிராயன், கொடியாளன்" எனவும் வழங்கும்; இவன் காலமுதல் சோழகுலத்துக்கு "இராசேந்திரகுலம், விசயராசேந்திரகுலம்" எனவும்; சோழவளநாட்டுக்கு "இராசேந்திர சோழவளநாடு, விசயராசேந்திர சோழவளநாடு" எனவும் பெயர் வழங்கலாயிற்று; "கொடிமங்கலம், இராசேந்திரம்" முதலியவூர்களை யுண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு "கொடிகொண்டான் (கொடிக்கமுண்டான்), கொடிராயன் (கொடிக்கிராயன், கொடிக்கவிராயன்), கொடியாளன் (கொடிபாலன்)" என்னும் பட்டப் பெயர்கள் வழங்குகின்றன.

"திருமாது புவியெனும் பெருமாத ரிவர்தன்
மாதே வியர்க ளாக மீதொளிர்
வெண்குடை யுயர்த்துத் திண்கவி பெயர்த்ததன்
சிறிய தாதை யாகிய யெறிவலிக்
கங்கை கொண்ட சோழனைப் பொங்கிக
லிருமடிச் சோழ னென்றும் பொருமாட்
டன்றிருத் தம்பியர் தம்முள் வென்றிகொள்
மும்மடிச் சோழனைத் தெம்முனை யடுதிறற்
சோழ பாண்டிய னென்றுங் கோழிமன்
றொடுகழல் வீர சோழனைப் படிபுகழ்க்
கரிகால சோழ னென்றும் பொருதொழில்
வாள் வலித் தடக்கை மதுராந்தகனை
சோழ கங்க னென்றுந் தோள்வலி
மேவிகல் பராந்த தேவனைச் சோழ
வயோத்திய ராச னென்றுந்
துயரத் தன்பொடு கருதுகா தலரு
ளித்த லம்புகழ் ராசேந்த்ர சோழனை
யுத்தம சோழ னென்றுந் தொத்தணி
முகையவி ழலங்கல் முடிகொண்ட சோழனை
யிகல்விசை யாலய னென்றும் புகர்முகத்
தேழுயர் களிற்றுச் சோழ கேரளனை
வார்சிலை சோழ கேரள னென்றுந்
திண்டிறற் கடாரங் கொண்ட சோழனை
தினகரன் குலத்து சிறப்பமர் சோழ
சனக ராச னென்றுங் கனைகடற்
படிகொண்ட பல்புகழ் முடிகொண்ட சோழனை
சுந்தர சோழ னென்றுஞ் செந்தமிழ்ப்
பீடிக விரட்ட பாடி கொண்ட
சோழனைத் தொல்புவி யாளுடைச் சோழ
கன்னகுச்சிய ராசனென்றும் பின்னுந்தன்
காதலர் காதலர் தம்முள் மேதகு
கதிராங் கனைகழல் மதுராந் தகனை
வெல்படைச் சோழ வல்லப னென்று
மானச் சிலைக்கையோ ரானைச் சேவகனை
நிருபேந்திர சோழ னென்றும் பருமணிச்
சுடர்மணி மகுடஞ் சூட்டிப் படிமிசை

நிகழு நாளினுள் இகல்வேட் டெழுந்துசென்
றெண்டிற விரட்ட மண்டல மெய்தி
நதிகளும் நாடும் பதிகளு மனேக
மழித்தனன் வளவனென்னு மொழிப்பொருள் கேட்டு
வேகவெஞ் சளுக்கி யாகவ மல்லன்
பரிபவ மெனக்கிதென் றெரிவிரித் தெழுந்து
செப்பருந் திறத்த கொப்பத் தகவையில்
சென்றெதி ரேன்றமர் துவங்கிய பொழுதவன்
செஞ்சர மாரிதன் குஞ்சர முகத்தினுந்(தன்முகத்தினும்)
தன்றிருத் துடையிலுங் குன்றுறழ் புயத்திலுந்
தைக்க வுந்தன் னுடன்களி றேறிய
தொடுகழல் வீரர்கள் மடியவும் வகையா
தொருதனி யனேகம் பொருபடை வழங்கியம்
மொய்ம்பமர் சளுக்கி தம்பிசய சிங்கனும்
போர்ப்புல கேசியுந் தார்த்தத பன்மனு
மானமன் னவரில் மண்டலியசோ கையனு
மானவண் புகழாளு மாரையனுந் தேனிவர்
மட்டவி ழலங்கல்மொட் டையனும் திண்டிறல்
நன்னி நுளம்பனு மெனுமிவர் முதலிய
ரெண்ணிலி யரைசரை விண்ணகத் தேற்றி
வன்னிய ரேவனும் வயப்படைத் துத்தனுங்
கொன்னவில் படைக்குண்ட மய்யனு மென்றின்ன
வெஞ்சின வரைசரோ டஞ்சிச் சளுக்கி
குலகுல குலைந்து தலைமயிர் விரித்து
வெந்நுற் றொளித்துப் பின்னுற நோக்கி
கால்பரிந் தோடி மேல்கடற் பாயத்
துரத்திய பொழுதச் செருக்களத் தவன்விடு
சத்துருபயங் கரன்கர பத்திரன் மூல
பத்திர சாதி பகட்டரை சனேகமு
மெட்டுநிரை பரிகளு மொட்டக நிரைகளும்
வராகவெல் கொடிமுதல் ராசபரிச் சந்தமு
மொப்பில்சத் தியவ்வைசாங் கப்பையென் றிவர்முதல்
தேவியர் குழாமும் பாவைய ரீட்டமு
மேனையன பிறவு முனைவயிற் கொண்டு
விசையாபி டேகஞ் செய்துதென் றிசைவயிற்
போர்ப்படை நடாத்தி கார்க்கட லிலங்கையில்
விறற்படைக் கலிங்கர்மன் வீரசலா மேகனை

கடகளிற் றொடுமெகப்படக் கதிர்முடி கடிவித்
திலங்கையர்க் கிறைவன் மானு பரணன்
காத லிருவரைக் களத்திடைப் பிடித்து
மாப்பெரும் புகழ்மிகவளர்த்த கோப்பரகேசரி வன்மரான
உடையா ரிராசேந்திர தேவர்க்கு யாண்டு—"

என்று கல்வெட்டு (கட்டுரையு)ம்;

(உச) "—தனியோர் மாவின்மே
லுதய பானுவொத் துதகை வென்றகோ
னொருகை வாரணம் பலக வர்ந்ததும்."

என்று கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியமுங் கூறுகின்றன.

இர்ராசாதிராச சோழன் (கோவிராசகேசரி):—இராசராச சோழன் மகன்; இராசேந்திரசோழன் முதற்றம்பி; "சோழபாண்டி" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; மூன்று போர்வீரர்களுக்குச் சமமுடையவன்; தமையனாகிய இராசேந்திரசோழனால் "சோழபாண்டியன்" என்று முடிசூட்டப்பெற்றவன்; "சிறிய தந்தை, தமையன், தம்பியர், புதல்வர், பெயரர்" முதலானவர்களோடு திக்குவிசயஞ் செய்து "பாண்டியர், சேரர், சாளுக்கியர், இலங்கையர்" முதலான வரசர்களைப் போரில் வென்றும்; கொள்ளிப்பாக்கையைக் கொளுத்தியும்; கம்பிலிநகர் மாளிகையை யிடித்தும் சயங்கொண்டவன்; சிறியதந்தையும், தமையனும் குறித்தபடி தம்பியரையும், புதல்வரையும் "வானவன், மல்லன், மீனவன், கங்கன், இலங்கையர்க்கிறைவன், பல்லவன், கன்னகுச்சியன்" என்று முடிசூட்டி, முறையே "சேரதேயம், குந்தளதேயம், பாண்டிதேயம், கங்கதேயம், ஈழதேயம், பல்லவதேயம், கன்னகுச்சிதேயம்" என்பவற்றிற் கனுப்பினவன்; இவன் பெயர் "சோழபாண்டியன், போரிற்கொளுத்தி, சயங்கொண்டான்" எனவும் வழங்கும்; "சயங்கொண்டசோழபுரம்" என்னும் சிவதல நகரத்தையும்; மன்னார்குடியின் வடபால் "இராசாதிராச சயங்கொண்டசோழேச்சரம்" என்னும்சிவதலத்தையும்; (இக்கோயிலில் இராசாதிராசன் திருவுருவமிருக்கிறது). "சயங்கொண்டபட்டினம்" என்னும் நகரத்தையும்; "சயங்கொண்டான், பாண்டி" என்னு

மூர்களையும்; "பழையபாண்டி, புதிய பாண்டி" என்னும் சிற்றூர்களையு முண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "சோழபாண்டியன் (பாண்டியன்), போரிற்கொளுத்தி (போரைக்கொளுத்தி), சயங்கொண்டான் (சேங்கொண்டான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"தன்றிருத் தம்பியர் தம்முள் வென்றிகொள்
மும்மடிச் சோழனைத் தெம்முனை யடுதிறற்
சோழ பாண்டிய னென்றும்"

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு (கட்டுரையு)ம்;

"திங்களேர் தருதன் றொங்கல்வெண் குடைக்கீழ்
நிலமக ணிலவ மலர்மகட் புணர்ந்து
செங்கோ லோச்சிக் கருங்கலி கடிந்து
தன்சிறிய தாதை யுந்திருத் தமையனுங்
குறிகொள்தன் னிளங்கோக் களையும் நெறியுணர்
தன்றிருப் புதல்வர் தம்மையுந் துன்றெழில்
வானவன் மல்லன் மீனவன் கங்க
னிலங்கையர்க் கிறைவன் புலங்கழற் பல்லவன்
கன்ன குச்சியர் காவலரெனப் பொன்னணி
சுடர்(மணி) மகுடஞ் சூட்டிப் படர்புக
ழாங்கவர்க் கவர்நா டருளிப் பாங்குறு
தென்னவர் மூவருள், மானுபரணன் பொன்முடி ஆனாட்
பருமணிப் பசுந்தலை பொருகளத் தரிந்து
வாரள வியகழல் வீரகே ரளனை
முனைவயிற் பிடித்துத் தந்தி வாரணக்
கதக்க ளிற்று னுதைப்பித் தருளி
யந்தமில் பெரும்புகழ்ச் சுந்தர பாண்டியன்
கொற்றவெண் குடையுங் கற்றைவெண் கவரியும்
சிங்கா தனமும் வெ.வ்களத் திழந்துதன்
முடிவிழத் தலைவிரித் தடிதளர்ந் தோடத்
தொல்லை முல்லையூர்த் துரத்தி யொல்கலில்
வேணாட் டரசரைச் சேணாட் டொதுக்கி
மேவுபுக ழிராமகுட மூவர்கெட முனிந்து
மிடல்கெழு வில்லவன் குடர்மடிக் கொண்டுதன்
னாடுவிட் டோடிக் காடுபுக் கொளிப்ப

வஞ்சியம் புதுமலர் மலைந்தாங் கெஞ்சலில்
வேலைகெழு காந்தளூர்ச் சாலை கலமறுத்
தாகவ மல்லனு மஞ்ச கேவுதன்
றுங்கரும் படையா லாங்கவன் சேனையுட்
கண்டப் பயனுங் கங்கா தரனும்
வண்டமர் களிற்றொடு மடியத் திண்டிறல்
விருதர் விக்கியும் விசையா தித்தனுங்
கருமுரட் சாங்க மய்யனு முதலினர்
சமர வீருவொத் துடைய விரிசுடர்ப்
பொன்னோ டயங்கரிப் புரவியொடும் பிடித்து
தன்னா டையிற் சயங்கொண் டொன்னார்
கொள்ளிப் பாக்கை யுள்ளெரி மடுப்பித்
தொருதனித் தண்டாற் பொருகட லிலங்கையர்
கோமான் விக்கிரம பாகுவின் மகுடமு
முன்றனக் குடைந்த தெண்டமிழ் மண்டல
முழுவ தும்மிழந் தேழ்கட லீழம்
புக்கவிலங் கேசுர னாகிய விக்கிரம
பாண்டியன் பருமணி மகுடமுங் காண்டகு
தன்ன தாகிய கன்னகுச் சியினு
மார்கலி யீழஞ் சீரிதென் றெண்ணி
உளங்கொள்தன் னாடுதன் னுறவொடும் புகுந்து
விளங்குமுடி கவித்த வீரசலா மேகன்
பொருகளத் தஞ்சிதன் கார்க்களி றிழிந்து
கவ்வையுற் றோடக் காதலி யொடுந்தன்
றவ்வையைப் பிடித்து தாயைமூக் கரிய
ஆங்கவ மானம் நீங்குதற் காக
மீண்டும் வந்து வாட்டொழில் புரிந்து
வெங்களத் துலர்ந்தவச் சிங்களத் தரசன்
பொன்னணி முடியுங் கன்னரன் வழிவந்
துரைகொ ளீழத் தரசனா கியசீர்
வல்லவ மதன ராசன் மெல்லொளித்
தடமணி முடியுங் கொண்டு வடபுலத்
திருகா லாவதும் பொருபடை நடாத்திக்
கண்டர் தினகரன் நாரணன் கணவதி
வண்டலர் தெரியல் மதுசூ தனனென்
றெனைப்பல வரையரை முனைவயிற் றுரத்தி

வம்பலர் தருபொழிற் கம்பிலி நகருள்
சளுக்கியர் மாளிகை தகர்ப்பித் திளக்கமில்
வில்லவர் மீனவர் வேழ்குலர் சளுக்கியர்
வல்லவர் கௌசலர் வங்கணர் கொங்கணர்
சிந்துரர் ஐயணர் சிங்களர் பங்களர்
ஆந்திரர் முதலிய வரைசரிடு திறைகளு
மாறிலொன் றவனியுள் கூறுகொள் பொருள்களு
முகந்துநான் மறையவர் முகந்துகொளக் கொடுத்து
விசுவலோ கத்து விளங்கமனு நெறிநின்
றசுவமே தஞ்செய் தரைசுவீற் றிருந்த
சயங்கொண்ட சோழ னுயர்ந்த பெரும்புகழ்க்
கோவிரா சகேசரி வன்மரான
உடையா ரிராசாதிராச தேவர்க்கு யாண்டு—"

என்று (இராசாதிராசசோழன்) கல்வெட்டு (கட்டுரையு)ம் கூறுகின்றன.

வீரசோழன்:—இராசராசசோழன் மூன்றுமகன்; இராசேந்திரசோழன் இரண்டாந்தம்பி; உறையூரை இராசதானியாகக் கொண்டவன்; முதல்தமையனுகிய இராசேந்திர சோழனால் "கரிகாலசோழன்" என்று முடிசூட்டப்பெற்று "சிறிய தந்தை, சகோதரர், புதல்வர், பெயரர்" முதலானவர்களோடு திக்குவிசயஞ்செய்து, வேற்றரசர்களைப் போரில் வென்றவன்; "வீரசோழன்" என்னும் ஆற்றையும்; "வீரசோழேச்சரம்" என்னும் சிவதலத்தையுமுண்டாக்கினவன்;

"—கோழிமன்
றொடிகழல் வீர சோழனைப் படிபுகழ்க்
கரிகால சோழ னென்றும்—"

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு (கட்டுரை) கூறுகிறது.

மதுராந்தகசோழன்:—இராசராசசோழன் நான்காமகன்; இராசேந்திரசோழன் மூன்றுந்தம்பி; "மதுராந்தகம்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டவன்; முதல் தமையனுகிய இராசேந்திரசோழனால் "சோழகங்கன்" என்று முடிசூட்டப்பெற்று "சிறியதந்தை, சகோதரர், புதல்வர், பெயரர்" முதலானவர்களோடு திக்குவிசயஞ்செய்து வேற்றரசர்களைப்

போரில் வென்றவன் ; இரண்டாந் தமையனாகிய இராசாதிராச சோழனால் "கங்கமண்டல"த்துக்கு அரசனாக முடிசூட்டப் பெற்று ஆண்டவன் ; இவன் பெயர் "சோழகங்கன், சோழ கங்கதேவன், சோழகங்கநாடன்" எனவும் வழங்கும் ; இவன் மரபோர்க்கு "சோழகங்கன் (சோழங்கன்), சோழகங்கதேவன் (சோழங்கதேவன்), சோழகங்கநாடன் (சோழங்கநாடான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன ;

"—பொருதொழில்
வாள் வலித் தடக்கை மதுராந்தகனை
சோழ கங்க னென்றும்."

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு(கட்டுரை) கூறுகிறது.

பராந்தகசோழன் :—இராசராசசோழன் ஐந்தாமகன் ; இரா சேந்திரசோழன் நான்காந்தம்பி ; பராக்கோட்டையை இராச தானியாகக்கொண்டவன் ; முதல் தமையனாகிய இராசேந்திர சோழனால் "சோழவயோத்தியராசன்" என்று முடிசூட்டப் பெற்று "சிறியதந்தை, சகோதரர், புதல்வர், பெயரர்" முதலான வர்களோடு திக்குவிசயஞ்செய்து வேற்றரசர்களைப் போரில் வென்றவன் ; இரண்டாந் தமையனாகிய இராசாதிராசசோழனால் "இலங்கையர்க்கிறைவன்" என்று முடிசூட்டப்பெற்று சிங்கள தேயத்தை ஆண்டவன் ; இவன் பெயர் "சிங்களராயன், சிங் களப்பிரியன், சிங்களாளி" எனவும் வழங்கும் ; "சிங்கமங்கலம், சிங்கங்குடி, சிங்கங்காடு, சிங்கம்பட்டி, சிங்களாந்தி, சிங்கங் குத்தே" என்னுமூர்களை யுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "சிங்களராயன் (சிங்களான்), சிங்களப்பிரியன் (சிங்கப்பிலியன்), சிங்களாளி (சிங்காரிக்கன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்கு கின்றன.

"—தோள்வலி
மேவிகல் பராந்த தேவனைச் சோழ
* வயோத்திய ராச னென்றும்."

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு (கட்டுரை) கூறுகிறது.

---

* அயோத்தியராசன் = இலங்கைக் கிறைவனை வென்றவன்.

இராசேந்திரசோழன் (கோவிராசகேசரி):-இராசராசசோழன் பெயரன்; "உத்தமசோழபுரம்" என்னும் சிவதல நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இராசராசசோழன் முதன்மகனாகிய இராசேந்திரசோழனால் "உத்தமசோழன்" என்று முடிசூட்டப்பெற்று "சிறியபாட்டன், தந்தையர், சகோதரர், புதல்வர்" முதலானவர்களோடு திக்குவிசயஞ்செய்து வேற்றரசர்களைப் போரில் வென்றவன்; இவன் பெயர் "உத்தமாண்டான், உத்தமங்கொண்டான், உத்தமப்பிரியன்" எனவும் வழங்கும்; "உத்தமங்கலம், உத்தமனூர்" முதலியவூர்களையுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "உத்தமாண்டான் (உத்தமண்டான்), உத்தமங்கொண்டான் (உத்தமுண்டான்) உத்தமப்பிரியன் (யுத்தப்பிரியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"துயரத் தன்பொடு கருதுகா தலரு
ளித்த லம்புகழ் ராசேந்த்ர சோழனை
யுத்தம சோழ னென்றும்."

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு (கட்டுரையு)ம்;

திருமன்னி விளங்கு மிருகுவ டனையதன்
தோளும் வாளுந் துணையெனக் கேளலர்
வஞ்சனை கடந்து வயிரா கரத்துக்
குஞ்சரக் குழாம்பல வாரி யெஞ்சலில்
சக்கரக் கோட்டத்துத் தாரா வரசனைத்
திக்கு நிகழத் திறைகொண் டருளி
யருக்க னுதையத் தாசையி லிருக்குங்
கமல மனைய நிலமகள் தன்னை
முந்நீர்க் குளித்த வந்நாள் திருமா
லாதியெடுத் தன்ன யாதுஞ்சலியா வகையினி
லெடுத்துத்தன் குடைநிழற்கீ ழின்புற விருத்தித்
திகிரியும் புலியுந் திசைதொறும் நடாத்தி
புகழுந் தருமமும் புவிதொறும் நிறுத்தி
வீரமுந் தியாகமும் மானமுங் கருணையு
முரிமைச் சுற்றமு மாகப் பிரியாத்

தலநிகழ் சயமுந் தானும்வீற் றிருந்து
குலமணி மகுட முறையிற் சூடித்
தன்கழல் தராதிபர் சூடச் செங்கோல்
நாவலம்புவிதொறு நடாத்திய கோவிராச கேசரிவன்மரான
உடையா ரிராசேந்திர சோழதேவர்க்கு யாண்டு—'

என்று கல்வெட்டு (கட்டுரையு)ம் கூறுகின்றன.

ஆதிராசேந்திரசோழன்—பூமாலைமுடிகொண்டசோழன் (கோப்பரகேசரி):—இராசராசசோழன் இரண்டாம்பெயரன்; "மல்லாகோட்டை" என்னுநகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; இராசராச சோழன் முதன்மகனாகிய இராசேந்திர சோழனால் "விசயாலயன்" என்று முடிசூட்டப்பெற்று "சிறியபாட்டன், தந்தையர், சகோதரர், புதல்வர்" முதலானவர்களோடு திக்குவிசயம்பண்ணி வேற்றரசர்களைப்போரில் வென்றவன்; இராசராசசோழன் இரண்டாமகனாகிய இராசாதிராசசோழனால் "மல்லன்" என்று முடிசூட்டப்பெற்று சாளுக்கிய தேயத்தையாண்டவன்; இவன்பெயர் "பூக்கட்டி, சாளுக்கியன்" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "பூக்கட்டி, சாளுக்கியன்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"—தொத்தணி
முகையவி ழலங்கல் முடிகொண்ட சோழனை
யிகல்விசை யாலய னென்றும்"

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு (கட்டுரையு)ம்;

திங்களேர் மலர்ந்து வெண்குடை மண்டில
மன்னுயிர் தோறு மின்னருள் சுரந்து
திறைநிழல் பரப்பி நிற்ப முறையிற்
செங்கோல் திசைதொறுஞ் செல்லத் தங்கள்
குலமுதற் பருதியின் வலனொளி நீவற்கு
ஒற்றை யாழி யுலாவ நற்றவத்
திருமலர்ச் செல்வியு மிருநிலப் பாவையுங்
கீர்த்தியங் கிள்ளையும் போர்த்தனிப் பூவையும்
வதுவையிற் புணர்ந்துதன் னுரிமைத் தேவியராச்
சுடர்மணி மகுடஞ் சூட்டி நெடுநில
மன்னவர் முறைமுறை தன்னடி வணங்க

வீரமுந் தியாகமு மாரமெனப் புனைந்து
வீரசிங்கா தனத்துலக முழுதுடையாரொடும் வீற்றிருந்தருளிய
மாப்புகழ் மனுவுடன் வளர்த்தகோப் பாரகேசரிவன்மரான
உடையா ராதிராசேந்திர தேவர்க்கு யாண்டு—"

என்று கல்வெட்டு (கட்டுரையு)ம் கூறுகின்றன.

இராசமகேந்திரசோழன்—சோழகேரளன் (கோவிராசகேசரி):– இராசராசசோழன் மூன்றும் பெயரன்; "மகேந்திரப்பள்ளி" என்னும் (தேவாரம்பெற்ற சிவதல) நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; இராசராசசோழன் முதன்மகனாகிய இராசேந்திரசோழனால் "சோழகேரளன்" என்றுமுடி சூட்டப்பெற்று "சிறியபாட்டன், தந்தையர், சகோதரர், புதல்வர்" முதலானவர்களோடு திக்குவிசயம்பண்ணி "விமலாதித்தன்" என்னும் அரசனைப்போரில்வென்று, அவன் நாட்டிலுள்ள ஒரு மலையில் புலிக்கொடியைநாட்டி, அம்மலைக்கு "மகேந்திரமலை" என்று பெயரிட்டவன்; "இராசமகேந்திரம்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணினவன்; அரங்கத்தில் "இராசமகேந்திரன் வீதி" என்று ஓர் வீதியமைத்தவன்; இராசராசசோழன் இரண்டாம் மகனாகிய இராசாதிராசசோழனால் "வானவன்" என்று முடிசூட்டப்பெற்று சேரநாட்டையாண்டவன்; இவன் பெயர் "கொல்லத்தரையன், கொங்கரையன்" எனவும் வழங்கும். இவன் மரபோர்க்கு "கொல்லத்தரையன், கொங்கரையன்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"—புகர்முகத்
தேழுயர் களிற்றுச் சோழ கேரளனை
வார்சிலைச் சோழ கேரள னென்றும்"

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு (கட்டுரையு)ம்;

திருமகள் விளங்க விருநில மடந்தையை
யொருகுடை நிழற்கீ ழினிதுநிற்பப் புணர்ந்து
தருமநெறி நிற்ப மனுநெறி நடாத்திய
கோவிராச கேசரி வன்ம ரான
வுடையாரிராச மகேந்திர தேவர்க்கு யாண்டு—"

என்று கல்வெட்டு (கட்டுரையு)ம் கூறுகின்றன.

இராசேந்திரசோழன்—கடாரங்கொண்டசோழன் (கோப்பரகேசரி):—இராசராசசோழன் நான்காம் பெயரன்; இராசராசசோழன் முதன்மகனாகிய இராசேந்திரசோழனால் "சோழசனகராசன்" என்று முடிசூட்டப்பெற்று" சிறியபாட்டன், தந்தையர், சகோதரர், புதல்வர்" முதலானவர்களோடு மாறிமாறித் திக்குவிசயஞ்செய்து "இடைதுறை, வனவாசி, கொள்ளிப்பாக்கை, மண்ணைக்கடக்கம், ஈழம், கேரளம், பழந்தீவு, இரட்டபாடி சாந்திமத்தீவு, சக்கரக்கோட்டம், மதுரை, நாமணைக்கோணை, பஞ்சப்பள்ளி, மாசுணி, ஆதிநகர், ஒட்டம், கோசலை, தண்டபுத்தி, தக்கணலாடம், வங்காளம், உத்தரலாடம், மாயிருடிங்கம், இலங்காசோகம், மாப்பப்பாளம், இலிம்பங்கம், தலைத்தக்கோலம், மாதமாலிங்கம், இலாமுரி, மாநக்கவாரம், கடாரம்" முதலிய தேய அரசர்களைப் போரில்வென்று, அவர்கள் முடிகளையும்; நிதிகளையும்; மனைவியர் முடிகளையும் கைக்கொண்டவன்; இராசராசசோழன் இரண்டாமகனாகிய இராசாதிராசசோழனால் "பல்லவன்" என்று முடிசூட்டப்பெற்று "கடாரங்கொண்டான்" என்னும் சிவதல நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டு பல்லவதேயத்தையும், கடாரதேயத்தையும் ஆண்டவன்; இவன் பெயர் "சோழசனகராசன், போரிற்பொறுக்கி, கடாரத்தலைவன், கடாரந்தாங்கி, சீனத்தரையன், பல்லவன்" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "சோழசனகராசன் (சனகராயன்), * போரிற்பொறுக்கி (பொரிப்பொறுக்கி) கடாரத்தலைவன் (கடாரத்தலையன்). கடாரந்தாங்கி, சீனத்தரையன், பல்லவன்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"திண்டிறற் கடாரங் கொண்ட சோழனை
தினகரன் குலத்து சிறப்பமர் சோழ
சனக ராச னென்றும்"

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு (கட்டுரையு)ம்;

திருமன்னி வளர விருநில மடந்தையும்
போர்ச்சயப் பாவையுஞ் சீர்த்தனிச் செல்வியுந்
தன்பெருந் தேவிய ராகி யின்புற

* போரிற்பொறுக்கல்=பகைவருடைய முடிமுதலிய ஆபரணங்களைக் கவர்தல்.

நெடிதிய வூழியு ளிடைதுறை நாடுந்
தொடர்வன வேலிப் படர்வன வாசியுஞ்
சுள்ளி சூழ்மதிற் கொள்ளிப் பாக்கையு
நண்ணரு முரண் மண்ணைக் கடக்கமும்
பொருகட லீழத் தரசர்த முடியு
மாங்கவர் தேவிய ரோங்கெழின் முடியு
முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த
சுந்தர முடியு மிந்திர னாரமுந்
தெண்டிரை யீழ மண்டல முழுவது
மெறிபடைக் கேரளன் முறைமையிற் சூடுங்
குலதன மாகிய பலர்புகழ் முடியுஞ்
செங்கதிர் மாலையுஞ் சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவற் பல்பழந் தீவுஞ்
செருவிற் சினவி யிருபத் தொருகா
லரசர்களை கட்ட பரசு ராமன்
மேவருஞ் சாந்திமத் தீவரண் கருதி
யிருத்திய செம்பொற் றிருத்தகு முடியும்
பயங்கொடு பழிமிக முயங்கியல் முதுகிட்
டொளித்தசய சிங்க னளப்பரும் புகழொடும்
பீடிய லிரட்ட பாடி யேழரை
யிலக்கமு நவநிதிக் குலப்பெரு மலைகளும்
விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமு
முதிர்பட வல்லை மதுரைமண் டலமுங்
காமிடை தருவள நாமணைக் கோணையும்
வெஞ்சின வீரர் பஞ்சப் பள்ளியும்
பாசடைப் பழன மாசுணி தேசமு
மயர் வில்வண் கீர்த்தி யாதிநக ரவையிற்
சந்திரன் றொல்குலத் திந்தி ரா தனை
விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத் தொடுநிறை குலதனக் குவையுங்
கிட்டருஞ் செறிமிளை யொட்ட விடயமும்
பூசுரர் சேர்நற் கோசல நாடுந்
தன்ம பாலனை வெம்முனை யழித்து
வண்டுறை சோலைத் தண்ட புத்தியு
மிரண சூரனை முரணுகத் தாக்கித்
திக்கணை கீர்த்தித் தக்கண லாடமுங்

கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத்
தங்காத சாரல் வங்காள தேசமுந்
தொடுகழற் சங்கு வொட்டன் மகிபாலனை
வெஞ்சமர் விளாகத் தஞ்சுவித் தருளி
யொண்டிறல் யானையும் பெண்டிர் பண்டாரமு
நித்தில நெடுங்கட லுத்தர லாடமும்
வெறிமலர்த் தீர்த்தத் தெறிபுனற் கங்கையு
மலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்திச்
சங்கிராம விசயோத் துங்க வன்ம
ஞகிய கடாரத் தரசனை வாசியம்
பொருகடல் கும்பக் கரியோடு மகப்படுத்
துரிமையில் பிறக்கிய பருநிதிப் பெருக்கமு
மார்த்தவ னகநகர்ப் போர்த்தொழில் வாயிலில்
விச்சா திரத்தோ ரணமு மொய்த்தொளிர்
புனைமணிப் புதவமுங் கனமணிக் கதவமு
நிறைசீர் விசயமுந் துறைநீர்ப் பன்னையும்
வன்மலை யூரெயிற் றொன்மலை யூரு
மாழ்கட லகழ்சூழ் மாயிரு டிங்கமுங்
கலங்கா வல்வினை யிலங்கா சோகமுங்
காப்புறு நிறைபுனன் மாப்பப் பாளமுங்
காவலம் புரிசை மேவிலிம் பங்கமும்
விளைப்பந் தூருடை வளைப்பந் தூருங்
கலைத்தக் கோர்புகழ் தலைத்தக் கோலமுந்
தீதமர் வல்வினை மாதமா லிங்கமுங்
கலாமுதிர் கடுந்திற லிலாமுரி தேசமுந்
தேனக்க வார்பொழின் மாநக்க வாரமுந்
தொடுகடற் காவற் கடுமுரட் கடாரமு
மாப்பொரு தண்டாற் கொண்டகோப் பரகேசரிவன்மரான
வுடையா ரிராசேந்திர சோழதேவர்க்கு யாண்டு—"

என்று கல்வெட்டு (கட்டுரையு)ம்;

(கஅ) "பரக்கு மோதக் கடார மழித்தநாள்
பாய்ந்த சம்புன லாடியு நீந்தியுங்
குரக்கு வாதம் பிடித்த விதத்தினிற்
குடிய டங்கலுங் கூன்முது கானவும்"

என்று கலிங்கத்துப்பரணி பேய்களைப் பாடியதும்;

(உரு) "களிறு கங்கைநீ ருண்ண மண்ணையிற்
காய்சினத்தொடே கலவு செம்பியன்
குளிறு தெண்டிரைக் குரைக டாரமுங்
கொண்டு மண்டலங் குடையுள் வைத்ததும்"

என்று கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியமுங் கூறுகின்றன.

புகழ்முடிகொண்டசோழன் :—இராசராசசோழன் ஐந்தாம் பெயரன்; இராசராசசோழன் முதன் மகனாகிய இராசேந்திர சோழனால் "சுந்தரசோழன்" என்று முடிசூட்டப்பெற்றவன்; "சுந்தரகோட்டை (சுன்றரகோட்டை)" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டவன்; "சிறியபாட்டன், தந்தையர், சகோதரர், புதல்வர்" முதலானவர்களோடு திக்கு விசயம்பண்ணி வேற்றரசர்களை வென்றவன்; இவன் பெயர் "சுந்தரராயன்" எனவும் வழங்கும்; "சுந்தரம், சுந்தரகுடி" என்னுமூர்களை யுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "சுந்தர ராயன் (சுந்தர், சுன்றையன்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

"—கனைகடற்
படிகொண்ட பல்புகழ் முடிகொண்ட சோழனை
சுந்தர சோழ னென்றும்"

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு(கட்டுரை) கூறுகிறது.

வீரராசேந்திரசோழன்—இரட்டபாடிகொண்டசோழன் (கோவிராசகேசரி)—இராசராசசோழன் ஆறும் பெயரன்; இராசராச சோழன் முதன்மகனாகிய இராசேந்திரசோழனால் "சோழகன்ன குச்சியராசன்" என்று முடிசூட்டப்பெற்று "சிறியபாட்டன், தந்தையர், சகோதரர், புதல்வர்" முதலானவர்களோடு மாறி மாறி திக்குவிசயம்பண்ணி "ஆகவமல்லன், விக்கலன், சிங்கணன், கேரளன், வீரகேசரி, சாமுண்டராயன், கோசலசிங்கன், கேசவன், தார்க்கெத்தரயன், மாரயன், போத்தரயன், இரேச்சயன், கோதைமூவத்தியன், மதுவணன், மல்லியண்ணன், மஞ்சிப்பய்யன், பிரமதேவன், அசோகையன், சத்தியண்ணன், விக்கிரகப் பத்தியண்ணன், வீமயன், மாமதிவங்காரன், நாமவேற்கங்கன், நுளம்பன், காடவர்கோன், வைதும்பராயன், பொத்தப்பிவேங்

தன், பொத்தவன், தேவநாதன், சித்தி, கேசி, சனநாதன், இராசமய்யன், முதப்பரசன்" முதலியவர்களைப் போரில் வென்று இரட்டபாடி ஏழரையிலக்கமாகிய "கம்பிலிநகரை" கொளுத்தி துங்கபத்திரிக்கரைக் கரடிக்கல்லில் "சயத்தம்பம்" நட்டு, "பெருநிதிப் பெருக்கங்கள், பெண்கள், யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள், கொடிகள், வாத்தியங்கள்" முதலியவற்றைக் கைப்பற்றி சரணடைந்த விசயாதித்தனுக்கு இரட்டபாடியைக்கொடுத்து, இராசராசசோழன் இரண்டாமகனாகிய இராசாதிராசசோழனால் "கன்னகுச்சிராசன்" என்று முடிசூட்டப்பெற்று அந்நாட்டை யாண்டவன்; இவன் பெயர் "கன்னகுச்சிராயன், போரிற் கொளுத்தி, போரிற்சுற்றி, திராணி" எனவும் வழங்கும்; "வீரராசேந்திரப்பெருவிலை" என்னும் ஒருவித "நாணயம்" உண்டு பண்ணினவன்; தன் மனைவிபெயரால் "சுத்தவல்லி (சித்தமல்லி)" என்னுமூர்களையுண்டுபண்ணி அவற்றில் ஒன்றில் "வீரராசேந்திரசோழேச்சரம்" என்னும் சிவதலத்தையுண்டுபண்ணினவன்; இவன் மரபோர்க்கு "கன்னகுச்சிராயன் (குச்சிராயன்), போரிற் கொளுத்தி (போரைக்கொளுத்தி), போரிற்சுற்றி (போரைச் சுற்றி), திராணி" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"செந்தமிழ்ப் பீடிக விரட்ட பாடி கொண்ட
சோழனைத் தொல்புவி யாளுடைச் சோழ
கன்னகுச் சியராச னென்றும்"

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு (கட்டுரையு)ம்;

திருவளர் திரள்புயத் திருநில வலயந்
தன்மணிப் பூணெனத் தாங்கப் பன்மணிக்
கொற்றவெண் குடைநிழல் குவலயத் துயிர்களைப்
பெற்ற தாயினும் பேணி மற்றுள
வறைகழ லரையர்த னடிநிழ லொதுங்க
வுறைபிலத் துடைகலி யொதுங்க மிறைசெய்து
விரைமலர்த் தெரியல் விக்கலன் றன்னொடு
வரிசிலைத் தடக்கை மாசா மந்தரைக்
கங்க பாடிக் களத்திடை நின்றுந்
துங்கபத் திரிபுகத் துரத்தி யாங்கவர்
வேங்கைநன் னாட்டிடை மீட்டுமவர் விட்ட
தாங்கரும் பெருவலித் தண்டுகெடத் தாக்கி
மாதண்ட நாயகன் சாமுண்ட ராயனைச்

செற்றவன் சிறத்தினை யறுத்து மற்றவ
னொருமக ளாகிய விருகையன் றேவி
நாகவை யென்னுந் தோகையஞ் சாயலை
முகத்தொடு மூக்குவே றுக்கிப் பகைத்தெதிர்
மூன்றும் விசையினு மேன்றெதிர் பொருது
பரிபவந் தீர்வனவெனக் கருதிப் பொருபுனல்
கூடல் சங்கமத் தாகவ மல்லன்
மக்க ளாகிய விக்கலன் சிங்கண
னென்றிவர் தம்மொடு மெண்ணில்சா மந்தரை
வென்றடு தூசிமுனை விட்டுத் தன்றுணை
மன்னருந் தானும் பின்னடுத் திருந்து
வடகட லென்ன வகுத்தவத் தானையைக்
கடகளி றொன்றாற் கலக்கி யடல்பரிக்
கோசல சிங்கனைக் கொடிபட முன்னந்
தூசிவெங் களிற்றொடுந் துணித்துக் கேசவ
தண்ட நாயகன் தார்க்கெத் தரையன்
திண்டிறல் மாரயன் சினப்போத் தரைய
னிரேச்சய னிகல்செய்பொற்கோதைமூ வத்தியென்
றூர்த்தடு துப்பி லனேகசா மந்தரை
சின்ன பின்னஞ் செய்து பின்னை
முதலி யான மதுவண னோட
விரித்த தலையொடு விக்கல னோட
செருத்தொழி லழிந்து சிங்கண னோட
வண்ணன் முதலிய ரனைவரு மமர்போர்ப்
பண்ணிய பகடிழிந் தோட நண்ணிய
வாகவ மல்லனு மவர்க்குமு னோட
வேகவெங் களிற்றினை விலக்கி வாகைகொண்
டங்கவர் தாரமு மவர்குல தனமுஞ்
சங்குந் தொங்கலுந் தாரையும் பேரியும்
வெண்சா மரையு மேக டம்பமுஞ்
சூகரக் கொடியு மகரதோ ரணமும்
புட்பகப் பிடியும் பொருகளிற் றீட்டமும்
பாய்பரித் தொகையொடும் பறித்துச் சேயொளி
வீரசிங் காசனம் பார்தொழ வேறி
யெழில்தர வுலக முழுதுடை யாளொடும்
விசயமணி மகுட மேய்ந்து வெழில்கொள்
தத்துமாப் புரவி பொத்தப்பி வேந்தனை

வாரணை வன்கழற் கேரளன் றன்னை
சனநா தன்றன் றம்பியைப் போர்க்களத்
தலங்கல்சூழ் பசுந்தலை யரிந்து பொலங்கழல்
தென்னனைத் திருவல் லவன்மகன் சிறுவன்
மின்னவில் மணிமுடி வீரகே சரியை
மதவரை யொன்றா லுதைப்பித் துதகையிற்
கேரளர் தங்குல செங்கீரை யோடும்
வேரறப் பறிந்தோடி மேல்கடல் வீழ
வாரண மருகுளி செலுத்தி வாரியி
லெண்ணருங் களிற்றின் இரட்டரைக் கவர்ந்த
கன்னியர் களிற்றொடுங் கட்டிப் பண்ணுப்
பிடியொடு மாங்கவர் விடுதிறை கொண்டுமீண்டு (சூழ்புனற்)
கொண்டாற் றுறவிற் குறித்த வெம்போரில்
தண்ட நாயகர் தம்மில் திண்டிறல்
மல்லியண் ணனையு மஞ்சிப் பய்யனையும்
பில்குமதக் களிற்றுப் பிரமதே வனையுந்
தண்டா ரசோகையன் றன்னையு மொண்டிறற்
சத்தியண் ணனையுஞ் சந்து விக்கிரகப்
பத்தி யண்ணன் றன்னையு மத்தகு
தேமரு தெரியல் வீமயன் றன்னையு
மாமதி வங்கா ரனையு நாமவேற்
கங்கனை நுளம்பனைக் காட்வர் கோனை
மங்குமத யானை வைதும்ப ராயனை
யிருந்தலை யரிந்து பெரும்புனற் றனது
கங்கை மாநகர் தைத்தபின் திங்களில்
வழிவரு சளுக்கி பழியொடு வாழ்வதிற்
சாவது சால நன்றென் றேவமுற்
றின்னிய சிந்தைய னாகி முன்னம்
புதல்வருந் தானு முதுகிட் டுடைந்த
கூடலே களமெனக் குறித்த கூடலில்
வாரா தஞ்சினர் மன்ன ரல்லர்
போர்ப்பெ ரும்பழிப் பிரட்ட ராக வென்
றியாவரு மறிய வெழுதிய பதிக
மேவரு மோலை விடையொடுங் கொடுத்த
விரட்ட பாடிப் பிரட் டர்கள்
கங்கா கேத்தனை யேவ வங்கவன்
வந்தடி வணங்கி வாசக முணர்த்தலுஞ்

சிந்தையு முகமுந் திருப்புய மிரண்டு
மேந்தெழி லுகவையொ டிருமடங்கு பொலியப்
போந்தப் போர்க்களம் புகுந்து காந்தையில்
வல்லவர் கோனை வரவு காணாது
சொல்லிய நாளின் மேலுமோர் திங்கள்
பார்த்தி ருந்த பின்னைப் போத்தவன்
கால்கெட வோடி மேல்கட லொளித்தலுந்
தேவ நாதனுஞ் சித்தியுங் கேசியு
மூவருந் தனித்தனி முதுகிடப் பாவரு
மிரட்ட பாடி யேழரை யிலக்க
முரட்டொழி லடக்கி முழங்கெரி மூட்டி
வெங்கதிர்ப் புலியேறு வியந்துவிளை யாடத்
துங்கபத் திரிக்கரை சயபத் திரத்தூண்
நானிலம் பரச நாட்டி மேனாள்
வந்த பிரட்டனை வல்லவ னுக்கிச்
சுந்தர கண் டிகை கட்டிப்
புரசை யானை புழைக்கையிற் பிணைத்திவ்
வுலக மறிய வோடிய பரிசொரு
பலகையிற் பழுதற வெழுதிய பின்னை
சார்த்தின வுரையுஞ் சளுக்கிபதம் பெற்ற
பூத்தின மார்வொடும் பூட்டிப் போர்த்துந்
தான்கைக் கொண்ட வேங்கைநன் னாடு
மீட்டுக் கொண்டலான் மீள்கிலங் கேட்டுநீ
வல்ல னாகில் வந்துகாக் கென்று
சொல்லி யெடுத்தவத் தானை விசய
வாடையொ டடுத்தபே ராற்றிற் றடுத்த
சனநா தனையுந் தண்ட நாயனு
மினமார் கடக்களிற் றிராசமய் யனையு
முதப்பர சனையு முதலாக வுடைய
வப்பெருஞ் சேனையை யடவியிற் பாச்சிக்
கோதா விரியில் தன்போ தகநீ
ருண்ணக் கலிங்க முங்கடந் தப்பால்
சக்கரக் கோட்டத் தப்புறத் தளவு
மேவருந் தானைத் தாவடி செலுத்தி
வேங்கைநன் னாடுமீட்டுக் கொண்டுதன் பூங்கழற்
கடைக்கலம் புகுந்த படைக்கலத் தடக்கை

விசயா தித்தற் கருளி விசைகொடு
மீண்டுவிட் டருளி யிகலிடைப் பூண்டசயத்
திருவொடுங் கங்கா புரிபுகுந் தருளி
யபங்க ராசாதி ராச ராச
னெனத்தரா திபராகத் தம்பியமத் தியற்றிப்
படியில் மன்னவ ரடிதொழு தேத்த
வின்மணிப் பீடத்திருந்து வேங்கைநன் னாட்டினிற்கொண்ட
விருநிதிப் பிறக்கம் வரிசையிற் காட்டி
யாழியுங் களமுங் கழற்றி யாங்கவர்
வாழிய விரத மாற்றிப் பூழிமஞ்
செய்து வரம்பாட் செங்கோல் செலுத்தி
மேதினி விளக்கி மீதுயர் வீரத்
தனிக்கொடி தியாகக் கொடியொடு மேற்பவர் [றிருந்து
வருகென் றுநிற்ப போர்த்தொழி லுரிமையிலெய்தி யரசுவீற்
மேவருமனு நெறிவிளக்கிய கோராசகேசரி வன்மரான
வுடையார் வீரராசேந்திர தேவர்க்கு யாண்டு—" (க)

வீரமேதுணை யாகவுந்தி யாகமேயணி யாகவுஞ்
செங்கோ லோச்சிக் கருங்கலி கடிந்து
கூடல்சங் கமத்தாகவ மல்லனை யஞ்சுவித்து
விக்கலனையுஞ் சிங்கணனையு முடைபுறங் கண்டு
மற்றவன்மா தேவியரோடும் வத்துவாகனங் கைக்கொண்
டிரண்டாம்விசை யிலுங்குறித்த களத்தாகவ மல்லனை
யஞ்சுவித்து வேங்கைநாடு மீட்டுக் கொண்டு
தன்னுடன் பிறந்த முன்னவர் விரதமுடித்து
மூன்றாம்விசை யிலுஞ்சோமே சுரன்கட்டிய கண்டிகை
யவிழ்ப்பதன் முன்னங் கம்பிலி சுட்டுக்
கரடிக்கல் விற்சயத் தம்ப நாட்டி
தேவநா தன்முதற் சாமந்தரைச் சக்கரக் கோட்டத்துத்
துரத்தியவர்க ளுரியதாரம் பிடித்துக் கொண்டு
கன்னகுச்சி மீட்டுவெல் லைகெடாது நிலையிட்டு
விசயசிங் காசனத்துலக முழுதுடையா ளோடும்
வீற்றிருந் தருளிய கோராசகேசரி வன்மரான
வுடையார் வீரராசேந்திர சோழதேவர்க்கு யாண்டு—" (உ)

என்று கல்வெட்டு (கட்டுரை) களும்;

"எல்லாவுல கு மேவியவெண்குடைச் செம்பியன் வீரராசேந்திரன்."
என்று வீரசோழியமும்;

(உசு) " கம்பி விச்சயத் தம்ப நட்டதுங்
கடிய ரண்கொள் கல்யாணர் கட்டறக்
கிம்பு ரிப்பணைக் கிரியு கைத்தவன்
கிரிக ளெட்டினும் புலிபொ றித்ததும்"

என்று கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியமுங் கூறுகின்றன.

மதுராந்தகசோழன் :—இராசராசசோழன் முதன் மகனாகிய இராசேந்திர சோழன் பெயரன்; அவ்விராசேந்திர சோழனால் "சோழ வல்லபன்" என்று முடிசூட்டப்பெற்று "சிறிய முப்பாட்டன், பாட்டன்கள், தந்தைகள், சகோதரன்" முதலானவர்களோடு திக்குவிசயம்பண்ணி வேற்றரசர்களைப் போரில் வென்றவன்;

"காதலர் காதலர் தம்முள் மேதகு
கதிராங் கனைகழல் மதுராந் தகனை
வெல்படைச் சோழ வல்லப னென்றும்"

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு (கட்டுரை) கூறுகிறது.

ஆனைச்சேவகசோழன் :—இராசராசசோழன் முதன் மகனாகிய இராசேந்திரசோழன் இரண்டாம்பெயரன்; அவ் விராசேந்திரசோழனால் "நிருபேந்திரசோழன்" என்று முடிசூட்டப் பெற்று "சிறிய முப்பாட்டன், பாட்டன்கள், தந்தைகள், சகோதரன்" முதலானவர்களோடு திக்குவிசயம்பண்ணி "கொப்பை" முதலிய போர்க்களங்களில் வேற்றரசர்களை வென்றவன்;

"ஆனைச் சிலைக்கையோ ரானைச் சேவகனை
நிருபேந்திர சோழ னென்றும்"

என்று (இராசேந்திரசோழன்) கல்வெட்டு (கட்டுரையு)ம்;

(உஎ) "ஒருக ளிற்றின்மேல் வருக ளிற்றையொத்
துலகு யக்கொளப் பொருது கொப்பையிற்
பொருக ளத்திலே முடிக வித்தவன்
புவிக விப்பதோர் குடை கவித்ததும்"

என்று கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியமுங் கூறுகின்றன.

குலோத்துங்கசோழன் (கோவிராசகேசரி) —நீதியில் நான்கு மனுவைப்போன்றவன்; "ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு,

(சைவம், மாவிரதம், பாசுபதம், வைரவம், காளாமுகம், வாமம் என்னும்) அறுசமயத்தார்க்குண்டி, பசுவுக்கு வாயுறை, சிறைச் சோறு, ஐயம், தின்பண்டநல்கல், அறவைச்சோறு, மகப்பெறு வித்தல், மகவுவளர்த்தல். மகப்பால்வார்த்தல், அறவைப்பிணஞ் சுடுதல், அறவைத்தூரியம், சுண்ணம், நோய்க்கு மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து தலைக் கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர்காத்தல் தண்ணீர்ப் பந்தல், மடம். தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்துயிர் காத்தல், கன்னிகாதானம்" என்னும் முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தவன்;

பூமன்னு பூத்த வேழுல குந்தா
முன்செய் தவத்தால் பருதிவழித் தோன்றி
நெடுமா லிவனெனச் சுடர்முடி சூடி
யிருநில மகளை யுரிமையிற் புணர்ந்து
திருமகள் பணைமுலைச் செஞ்சாந் தணைந்து
பருமணி மார்வம் பனிவரை நிகர்ப்ப
சயமகள் செழுஞ் சந்தனச் சுவட்டால்
புயமிரு கயிலைப் பொருப்பெனத் தோன்றி
நாமகள் தானுமெங் கோமகன் செவ்வாய்ப்
பவளச் சேயொளி படைத்தன ளியானெனத்
தவள நன்னிறந் தனித்தொடை யோரெனப்
புகழ்மகள் சிந்தை மகிழு நாளிலு
மொருகுடை நிலவப் பொருபடைத் திகிரி
வெயிலுங் கருங்கலி யிருளினைத் துரப்ப
நீடுபல் லூழி யேழ்கடற் புறத்தினுங்
கோடாச் செந்தனிக் கோலினி துலாவ
மீனமுஞ் சிலையுஞ் சிதைத்து வானுயர்
பொன்னெடு மேருவிற் புலிவீற் றிருப்ப
வம்பரி யானை யோரெட் டினுக்குத்
தம்ப மென்னத் தனித் தனி
திசைதொறும் விசயத் தம்ப நிற்ப
பசிபகை யானது தீங்கு நீங்க
மன்னுயிர் தழைப்ப மனுவாறு விளங்க
மாதவர் தவமு மங்கையர் கற்பு
மாதி யந்தண ராகுதிக் கனலு

மீதெழு கொண்டல் வீசுதண் புனலு
மேதினி வளருஞ் சாதி யொழுக்கமு
நீதி யறமும் பிறழாது நிகழப்
பாவுப் பழனப் பரப்பும் பணைக்கை
மாவு மல்லது வன்றளைப் படுதல்
கனவிலுங் காண்டற் கரிதென வருந்திப்
புடையினும் பல்வேறு புள்ளினு மல்லது
சிறையெனப் படுத லின்றி நிறைபெருஞ்
செல்வமோ டவனி வாழப் பல்லவர்
தெலுங்கர் மாளுவர் கலிங்கர் கோசலர்
கன்னடர் கடாரர் தென்னர் சேரலர்
சிங்கணர் கொங்கணர் சேதிகர் திரிகர்த்தர்
வங்க ரங்கர் வத்தவர் மத்திரர்
கங்கர் சோனகர் கைகையர் சீனரென்
றறைகழல் வேந்தரு மெல்லா வரைசரும்
முறைமையில் வருந்தித் திறைகொணர்ந் திறைஞ்ச
வம்பொன் மலர்க்கொடிச் செம்பியன் கிழானடி
யொருமருங் குடனமர்ந் திருப்ப வருள்புரி
சிமையப் பொற்கொடி யிமையப் பாவையுஞ்
சிவனும் போலப் புவனமுழு துடையா
ளிவன்றிரு மணிமார்வத்
துலகமுழு துடையா ளெனவுட னிருப்பச்
செம்பொன் வீர சிங்கா சனத்துப்
புவனமுழு துடையாளோடும் வீற்றிருந் தருளிய
கோராச கேசரிவன்மரான திரிபுவனசக்கர வர்த்திகள்
குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு—''

என்று கல்வெட்டு (கட்டுரையும்);

(உஅ) ''மனுவலுக்கு முதலாய வேத நான்கின்
பண்டுரைத்த நெறிபுதுக்கிப் பழையர் தங்கண்
மனுவினுக்கு மும்மடிநான் மடியாஞ் சோழன்
மதிக்குடைக்கீ ழறந்தளிர்ப்ப வளர்ந்த வாறும்''

என்று கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியமுங் கூறுகின்றன.

கங்கைகொண்ட ராசராசசோழன் :—''கங்கைகொண்ட சோழபுரம்'' நகரத்தை இராசதானியாகக் கொண்டவன்; நீண்டகாலம் மகப்பேறின்றிவருந்தி தவஞ்செய்து பெற்ற தன்மகளாகிய குந்தி

வையை ஒரு பாண்டியனுக்கு மணஞ்செய்து கொடுத்து, அவள் வயிற்றில் மகனாகவந்த விசயதரனான குலோத்துங்கசோழனை தனக்கு மகனாகக்கொண்டு தன்னுடையநாட்டுக்கு முடிசூட்டு வித்தவன்; பாண்டிநாட்டில் (திருநெல்வேலிக்குச் சமீபத்தில்) "கங்கைகொண்டசோழபுரம் (கங்கைகொண்டான்)" என்னும் சிவதலத்தையும்; "கங்கைகொண்டான்" என்னும் ஆற்றையு முண்டாக்கினவன்.

"அலர்மழைபோன் மழைபொழிய வதுகண்டு
கங்கைகொண்ட சோழன் றேவி
குலமகடன் குலமகனைக் கோகனத
மலர்க்கையா னெடுத்துக் கொண்டே."

"அவனிவர்க்குப் புத்திரனா மடையாள
மவயவத்தி னடைவே நோக்கி
யிவனெமக்கு மகனாகி யிரவிகுலம்
பாரிக்கத் தகுவ னென்றே."

"திங்களி னிளங்குழவி செம்மலிவ னென்றுஞ்
செய்யபரி திக்குழவி யையனிவ னென்றுந்
தங்களின் மகிழ்ந்திரு குலத்தரசர் தாமுந்
தனித்தனி யுவப்பதொர் தவப்பயனு மொத்தே."

என்று கலிங்கத்துப்பரணி (அவதாரம்) கூறுகிறது.

விசயதரனான குலோத்துங்கசோழன் (கோவிராசகேசரி) :— பாண்டியனுக்கு கங்கைகொண்ட சோழன் மகள் "குந்தவை" திருவயிற்றில் திருமாலே (கிருட்ணாவதாரம் நீங்கியபின்) மகனாகத் தோன்றினவன்; "தியாகவல்லி, ஏழிசைவல்லபி" என்னும் பெண்களின் கணவன்; கலி நானூற்று ஐம்பத்து மூன்றில் முடிசூட்டப்பெற்று சுங்கந்தவிர்த்தவன்; (திரிபுவனசக்கரவர்த்திகள் இராசராசதேவர்க்கு யாண்டு இருபத்தெட்டாவது "நானூற்றெண்பதில்" இராசேந்திர சோழவளநாட்டுப் புறங்கரம்பை நாட்டுத் திருக்களர் முளைத்த மாதேவர்க்கு அமாவாசி யெழுந்தருளி தேவரடியாரை அமுதுசெய்விக்கச் சுங்கந்தவிர்த்தருளின குலோத்துங்க சோழதேவர்க்கு இருபத்தெட்டாவது என்று திருக்களர் செப்பேடு கூறுகிறது). குந்தளரைக்கூடற் சங்க

மத்து வென்றவன்; சக்கரக்கோட்டமழித்தவன்; மந்திரத்தலை வணகிய கருணாகரத் தொண்டைமானை யனுப்பி கலிங்கத்தை வென்றவன்; திக்குவிசயம்பண்ணி வேற்றரசர்களை வென்றவன்; இமையமலையில் புலிக்கொடி நாட்டினவன்; திருத்தில்லையைப் பொன்னின் மயமாக்கினவன்; "குலோத்துங்கசோழபுரம் (சோபுரம்)" என்னும் (தேவாரம்பெற்ற) சிவதல நகரத்தை யுண்டாக்கினவன்; அந்நகரின் வடபுறம் தன்முதன்மனைவி பெயரால் "தியாகவல்லி" என்னும் நகரத்தை யுண்டாக்கினவன்; கலிங்கத்துப் பரணி என்னும் நூலின் கதாநாயகன்; இவன் பெயர் "விருதராசபயங்கரன், உபயகுலோத்தமன், குலதீபன், சயதுங்கன், கலிப்பகைஞன், இரவிகுலோத்தமன், பூழியர்பிரான், சயதரன், அபயன், நரதுங்கன், வஞ்சிமானதன், இராசராசன், சோழசேகரன், பண்டிதசோழன், மனுகுலதீபன், கரிகாலன், கலிங்கராயன்" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "விருதராசபயங்கரன் (விருதலான்), பூழியபிரான் (பூழியூரான்), கலிங்கராயன் (காலிங்கராயன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"அன்றிலங்கை பொருதழித்த வவனேயப்
பாரதப்போர் முடித்துப் பின்னை
வென்றிலங்கு கதிராழி விசயதா
னெனவுதித்தான் விளம்பக் கேண்மின்"

"இருண்முழுது மகற்றும்விது குலத்தோன் றேவி
யிகல்விளங்கு தபனகுலத் திராச ராச
னருடிருவின் றிருவயிற்றில் வந்து தோன்றி
யாலிலயி னவதரித்தா னவனே மீள"

"இசையுட னெடுத்தகொடி யபயனவ னிக்கிவனை
யிளவரசில் வைத்த பிறகே
திசையாச ருக்குரிய திருவினை முகப்பதொரு
திருவுள மடுத்தருளியே"

"குடதிசை புகக்கடவு குரகத விதத்திரவி
குறுகலு மெறிக்கு மிருள் போல்
வடதிசை முகத்தரசர் வருகத முகத்தனது
குரகத முகைத்தருளியே"

"குளமுதிர மெத்தியதோர் குரைகடல் கடுப்பவெதிர்
குறுகலர்கள் விட்டகுதிரைத்
தளமுதிர வெட்டியொரு செருமுதிர வொட்டினர்க
டலைமலை குவித்தருளியே"

"மனுக்கோட்ட மழித்தபிரான் வளவர்பிரான் றிருப்புருவத்
தனுக்கோட்ட நமன்கோட்டம் பட்டதுசக் கிரக்கோட்டம்.

மாவுகைத் தொருதனி யபயனிப்படி
வடதிசை மேற்செல மன்னர் மன்னவன்
றேவருக் காசனுப் விசும்பின் மேற்செலத்
தென்றிசைக் குப்புகுந் தன்மை செப்புவாம்.

விரிபுனல் வேலை நான்கும் வேதங்க ளொன்கு மார்ப்பத்
திரிபு வனங்கள் வாழ்த்தத் திருவபி டேகஞ் செய்தே.

அறைகடலாச ரப்பொழு தடிமிசையறு கெடுத்திட
மறையவர்முடி யெடுத்தனர் மனுநெறி தலை யெடுக்கவே.

நிரைமணிபல குயிற்றிய நெடுமுடிமிசை விதிப்படி
சொரிபுனலிடை முளைத்தன துறைகளினற மனைத்துமே.

பொதுவறவுலகு கைக்கொடு புலிவளர்கொடி யெடுத்தலு
மதுமுதல்கொடி யெடுத்தன வமரர்கண்முழ வெடுக்கவே.

காலாற்றண் டலையுழக்குங் காவிரியின்
கரைமருங்கு வேட்டை யாடிப்
பாலாற்றங் கரைமருங்கு பரிவேட்டை
யாடுதற்குப் பயண மென்றே.

பொன்னின்மலர் மாலையணி மாறியுடனே
புவனிகாவலர்க டேவியர்கள் சூழ்பிடிவரச்
சென்னியானையுட னானையை நடத்துமுரிமைத்
தியாகவல்லிநிறை செல்வியுடன் மல்கிவரவே.

விட்டவதி கைப்பதியி னின்றுபய ணம்பயணம்
விட்டவிளை யாடியபயன்
வட்டமதி யொத்தகுடை மன்னர்தொழ நண்ணினன்
வளங்கெழுவு கச்சிநகரே.

மண்ட லீகரு மாநில வேந்தரும்
வந்துணங்கு கடைத்தலை வண்டைமன்
றொண்டை மான்முதன் மந்திரப் பாரகர்
சூழ்ந்து தன்கழல் சூடி யிருக்கவே.

கடகர் தந்திறைகொ டடைய வந்தரசர்
கழல்வ ணங்கினர்க ளிவருடன்
வடக லிங்கர்பதி யவனி ரண்டுவிசை
வருகி லன்றிறைகொ டெனவுமே.

எளிய னென்றிடினும் வலிய குன்றரண
மிடிய நம்படைஞர் கடிதுசென்
றளிய லம்புமத மலைகள் கொண்டணமி
னவனை யுங்கொணர்மி னெனவுமே.

அடையவத்திசைப் பகைதுகைப்பனென்
றுசைகொண்டடற் றெண்டைமான்
விடையெனக்கெனப் புலியுயர்த்தவன்
விடைகொடுக்கவப் பொழுதிலே.

மறித்தோடி யெவ்வரசுஞ் சரிய வென்று
வருமனுக்கைப் பல்லவர்கோன் வளவர் வேந்த
னெறித்தோடை யிலங்குநடைக் களிற்றின் மேற்கொண்
டிரைவேட்ட பெரும்புலிபோ லிகன்மேற் செல்ல.

கடையிற் புடையொரு கடலொத் தமரர்
கலங்கும் பரிசு கலங்கப்புக்
கடையப் படரெரி கொளுவிப் பதிகளை
யழியச் சூறைகொள் பொழுதத்தே.

உலகுக் கொருமுத லபயற் கிடுதிறை
யுரைதப் பியதெம தரசேயெம்
பலகற் பனைதனை நினைவுற் றிலைவிடு
படைமற் றவன்விடு படையென்றே.

உரையிற் குழறியு முடலிற் பதறியு
மொருவர்க் கொருவர்முன் முறையிட்டே
யரையிற் றுகில்விழ வடையச் சனபதி
யடியிற் புகவிழு பொழுதத்தே.

வேழமிர தம்புரவி வெம்படைஞ ரென்றினைய
நம்படைஞர் சென்றுகடுகச்
சோழகுல துங்கன்விட வந்துவிடு தண்டினெதிர்
சென்றமர் தொடங்குகெனவே.

கலிங்கமவை யேழினு மெழுந்ததொரு பேரொலி
கறங்குகட லேழுமுடனே
மலங்கியெழு மேழிசை யெனத்திசை திகைப்புற
வருந்தொனி யெழுந்ததெனவே.

எறிகட லொடுகடல் கிடைத்தபோ
    லிருபடை களுமெதிர் கிடைக்கவே
மறிதிரை திரையொடு மலைத்தபோல்
    வருபரி யொடுபரி மலைக்கவே.

கனவரை யொடுவரை முனைத்தபோற்
    கடகரி யொடுகரி முனைக்கவே
யினமுகின் முகிலொடு மெதிர்த்தபோ
    லிரதமு மிரதமு மெதிர்க்கவே.

பொருபுலி புலியொடு சிலைத்தபோற்
    பொருபட ரொடுபடர் சிலைக்கவே
யரியினொ டரியின மடர்ப்பபோ
    லரசரு மரசரு மடர்ப்பவே.

அலகில் செருமுதற் பொழுது வண்டைய
    ரரச னரசர்க ளுதன் மந்திரி
யுலகு புகழ்கரு ணுக ரன்றன
    தொருகை யிருபணை வேழ முந்தவே.

புரசை மதமலை யாயி ரங்கொடு
    பொருவ மெனவரு மேழ்க லிங்கர்த
மரச னுரைசெய்த வாண்மை யுங்கெட
    வமரி லெதிர்விழி யாதொ துங்கியே.

வழிவர் சிலர்கடல் பாய்வர் வெங்கரி
    மறைவர் சிலர்வழி தேடி வன்பில
மிழிவர் சிலர்சிலர் நூறு மண்டின
    ரிருவ ரொருவழி போக வின்றியே.

கடற்கலிங்க மெறிந்துசயத் தம்ப நாட்டிக்
    கடகரியுங் குவிதனமுங் கவர்ந்து தெய்வச்
சுடர்ப்படைவா ளபயனடி யருளி னேடுஞ்
    சூடினன் வண்டையர்கோன் தொண்டை மானே"

என்று கலிங்கத்துப்பரணியும்;

(அ) சென்னி யபயன் குலோத்துங்க சோழன் றில்லைத் திருவெல்லை
பொன்னின் மயமாக் கியவளவர் போரே றென்றும் புவிகாக்கு
மன்னர் பெருமா னநபாயன் வருந்தொன் மரபின் முடிசூட்டுந்
தன்மை நிலவு பதியைந்தி னொன்றாய் நீடுந் தகைத்தவ்வூர்.

என்று சண்டேசுர நாயனார் புராணமும்;

நானிலத்தை முழுதாண்ட சயதரர்க்கு நாற்பது நாலாண்டில்
மீன நிகழ் நாயிற்று வெள்ளிபெற்ற வுரோகணிநா ளிடபம்போதால்
தேனிலவும் பொழிற்றில்லை நாயகர்தங் கோயிலெலாஞ் செம்பொன் மேய்ந்தா
ளேனவருந் தொழுதேத்தும் ராசராசன் குந்தவைபூ விந்தையாளே.

என்று சிதம்பரம் கல்வெட்டும் ;

"புகழ்சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்
பொன்னேமி யளவுந் தன்னேமி நடப்ப
விளங்குசய மகளை யிளங்கோப் பருவத்து
சக்கரக் கோட்டத்து விக்ரமத் தொழிலாற்
புதுமணம் புணர்ந்து மதவரை யீட்டம்
வயிரா கரத்து வாரி பயிர்முனைக்
கொந்தள வரசர் தந்தள மிரிய
வாளுறை கழித்துத் தோள்வலி காட்டிப்
போர்ப்பரி நடாத்திக் கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடித் தென்றிசைத்
தேமரு கமலப் பூமகள் பொதுமையும்
பொன்னி யாடை நன்னிலப் பாவையின்
றனிமையுந் தவிரப் புனிதத்
திருமணி மகுட முரிமையிற் சூடித்
தன்னடி யிரண்டுந் தடமுடி யாகத்
தொன்னில வேந்தர் சூட முன்னை
மனுவாறு பெருகக் கலியாறு வறப்ப
செங்கோல் திசைதொறுஞ் செல்ல வெண்குடை
யிருநில விளாக மெங்கணுந் தனது
திருநிழல் விண்ணிலந் திகழ வொருதனி
மேருவிற் புலிவிளை யாட வார்கடற்
றீவாந் தரத்துப் பூபாலர் திறைவிடுத்தந்த
கலஞ்சொரி களிறுமுறை நிற்ப விலங்கிய
தென்னவன் கருந்தலை பருந்தலைத் திடத்தன்
பொன்னகர்ப் புறத்திடைக் கிடப்ப விந்நாள்
பிற்குலப் பிறைபோல் நிற்பிழை யென்னுஞ்
சொல்லெதிர் கோடிற் றல்லது தன்கை
வில்லது கோடா வேள் குலத் தரச
ரளத்தியி விட்ட களிற்றின நீட்டமும்
பட்டவெம் பரியுங் களந்தனிற்

பட்டமும் பரியும் விட்டதன் மானமுங்
கூறின வீரமுங் கிடப்ப யேறின
மலைகளு முதுகு நெளிப்ப யிழிந்த
நதிகளுஞ் சுழன்றுடைந் தோட விழுந்த
கடல்களுந் தலைவிரித் தலமரக் குடதிசைத்
தன்னு ளுகந்து தானுந் தானையும்
பன்னு ளிட்ட பலபல முதுகும்
பயங்கெதிர் மாறின சயப்பெருந் திருவும்
பழியுகந்து கொடுத்த புகழின் செல்வியும்
வாளா ரொண்கண் மடந்தைய ரீட்டமு
மீளாது கொடுத்த வெங்கரி நிரையுங்
கங்கமண் டலமுஞ் சிங்கண மென்னும்
பாணி யிரண்டு மொருவிசைக் கைக்கொண்
டீண்டிய புகழொடு பாண்டிமண் டலங்
கொள்ளத் திருவுளத் தடைத்து வெள்ள
வருபரித் தரங்கமும் பொருபரிக் கலங்களுந்
தந்திர வாரியு முடைத்தாய் வந்து
வடகடல் தென்கடல் படர்வது போலத்
தன்பெருஞ் சேனையை யேவிப் பஞ்சவ
ரைவரும் பொருத போர்க்களத் தஞ்சி
வெரிந்நௌித் தோடி யரணெனப் புக்க
காடறத் துடைத்து நாடடிப் படுத்து
மற்றவர் தம்மை வனசரர் கிரியும்
பொச்சை வெஞ்சுர மேற்றிக் கொற்ற
விசயத் தம்பந் திசைதொறு நிறுத்தி
முத்தின் சலாபமு முத்தமிழ்ப் பொதியிலு
மத்தவெங் கரிபடு மய்யச் சய்யமுங்
கன்னியுங் கைக்கொண்டு புனிதத் தென்னாட்
டெல்லை காட்டிக் குடமலை நாட்டுள்ள
சாவே றெல்லாந் தனிவிசும் பேற
மாவே றியதன் வருதினித் தலைவரைக்
குறுகலர் குலையக் கோட்டா றுட்பட
நெறிதொறு நிலைகளிட் டருளித் திறல்கொள்
வீரசிங் காசனந் திரியவிட் டருளிப்
பொங்கொளியா ரமுந்திருப் புயத்தலங் கலும்போல்
வீரமுந் தியாகமும் விளங்கப் பார்தொழுஞ்
சிவனிடத் துமையெனத் தியாக வல்லி

யுலக முடையா ளிருப்ப வவளுடன்
கங்கைவீற் றிருந்தென மங்கையர் திலத
மேழிசை வல்லபி யேழுலக முடையாள்
வாழி மலர்ந்தினி திருப்ப வூழியுந்
திருமா லகத்துப் பிரியா தென்றுந்
திருமகளிருந் தெனவீர சிங்கா சனத்து
வுலகமுடையா ளோடும்வீற் றிருந்தருளிய கோவிராசகேசரி
வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் குலோத்துங்க
சோழ தேவர்க்கு யாண்டு—"

என்று கல்வெட்டு(கட்டுரையு)ம்;

"—கூடலா
ரும்ப ரணிகொள்ளக் கொள்வித் தொருகலிங்க
வெம்பரணி கொண்ட விறலோனும்—"

என்று சங்கரசோழனுலாவுங் கூறுகின்றன.

விக்கிரமசோழன் (கோப்பரகேசரி):—குலோத்துங்கசோழன் மகன்; குலோத்துங்கசோழன் தந்தை; "திரிபுவனமுழுதுடையாள், தரணிமுழுதுடையாள்" என்னும் பெண்ணரசிகளின் கணவன்; "உறையூர்" நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; இளவரசனாக இருந்த காலத்தில் திக்குவிசயம்பண்ணி வேற்றரசர்களை வென்றவன்; திருத்தில்லையில் "மண்டபங்களையும், கோபுரங்களையும், தேர்களையும், அந்தணர்மாளிகைகளையும்" பொன்னால் வேய்ந்தவன்; தன் முதன் மனைவி பெயரால் "திரிபுவனம்" என்னும் சிவதலத்தை யுண்டாக்கினவன்; தன் மகள் (மங்கையர்க்கரசியார் என்னும்) மானியாரை (கூன்பாண்டியன் என்னும்) நெடுமாறபாண்டியனுக்கு மணஞ்செய்து கொடுத்து, "புகழேந்தி" என்னும் புலவர்பெருமானை சீதனமாகக் கொடுத்தவன்; "சயங்கொண்டான்" என்னும் புலவர் சிகாமணியைக்கொண்டு "கலிங்கத்துப்பரணி" என்னும் நூல் பாடுவித்தவன்; "ஒட்டக்கூத்தர்" என்னும் புலவர் பெருமான் பாடிய "விக்கிரமசோழனுலா" என்னும் பிரபந்தம் பெற்றவன்;

(உகூ) "குந்தளரைக் கூடற்சங் கமத்து வென்ற
கோனபயன் குவலயங்காத் தளித்த பின்னை
யிந்தநிலக் குலப்பாவை யிவன்பாற் சேர
வென்னதவஞ் செய்திருந்தா ளென்னத் தோன்றி.

(கூம) எவ்வளவு திரிபுவன முளவாய்த் தோன்று
மெவ்வளவு குலமறைக ளுளவாய் நிற்கு
மவ்வளவு திகிரிவரை யளவுஞ் செங்கோ
லாணைசெல்ல வபயன்காத் தளிக்கு மாறும்."

என்று கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியமும்;

"—கூடல்
சங்கமத்துக் கொள்ளுந் தனிப்பரணிக் கெண்ணிறந்த
துங்கமத யானை துணித்தோனு—மங்கவன்பின்
காவல் புரிந்தவனி காத்தோனு மென்றிவர்கள்
பூவலய முற்றும் புரந்ததற்பின்—மேவலர்தஞ்
சேலைத் துரந்து சிலையைத்தடிந்திருகாற்
சாலைக் களமறுத்த தண்டினன்—மேலைக்
கடல்கொண்டு கொங்கணமுங் கன்னடமுங் கைக்கொண்
டடல்கொண்ட மாராட் டரசை—யுடலை
யிறக்கி வடவரையே யெல்லையாய்த் தொல்லை
மறக்கலியுஞ் சுங்கமு மாற்றி—யறத்திகிரி
வாரித் திகிரி வலமாக வந்தளிக்கு
மாரிற் பொலிதோ ளபயற்குப்—பார்விளங்கத்
தோன்றிய கோன் விக்கிரம சோழன்—"

என்று விக்கிரமசோழனுலாவும்;

"பூமாலை மிடைந்து பொன்மாலை திகழப்
பாமாலை மலிந்த பருமணித் திரள்புயத்
திருநில மடந்தையொடு சயமக ளிருப்பக்
கனவரை மார்வந் தனதெனப் பெற்றுத்
திருமக ளொருதனி யிருப்பக் கலைமகள்
சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத் திசைதொறுந்
திகிரியொடு செங்கோல் நடப்ப வகில
புவனமுங் கவிப்பதோர் புதுமதி போல
வெண்குடை மீமிசை நிழற்றக் கருங்கலி
யொளித்துவன் பிலத்திடைக் கிடப்பக் குளத்திடைத்
தெலுங்க வீமன் விலங்கல்மிசை யேறவுங்
கலிங்க பூமியைக் கனலெரி பருகவு
மைம்படைப் பருவத்து வெம்படை தாங்கியும்
வேங்கை மண்டலந் தாங்கினி திருந்து

வடதிசை யடிப்படுத் தருளித் தென்றிசைத்
தருமமுந் தவமுந் தானமுந் தழைப்ப
வேதமு மெய்ம்மையு மாதியுகம் போலத்
தலைத்தலை சிறப்பவந் தருளி வெலற்கரும்
போர்ப்புலி யானை பார்த்திவர் சூட
நிறைமணி மகுட முறைமையிற் சூடி
மன்னுயிர்க் கெல்லாம் மின்னுயிர்த் தாய்போல
தன்னொளி பரப்பித் தனித்தனி பார்த்து
மண்முழுதுங் களிப்ப மனுநெறி வளர்த்துத்தன்
கோயிற் கொற்ற வாசற் புறத்து
மணிநா வொடுங்க முரசுகள் முழங்க
விசயமும் புகழு மென்மே லோங்க
வாழி வாழியிம் மாநிலங் காக்கத்
திருமணிப் பொற்றேரட் டெழுபத் தாண்டு
வருமுறை முன்னே மன்னவர் சுமந்து
திறைநிறைத்துச் சொரிந்த செம்பொற் குவையால்
தன்குல நாயகன் தாண்டவம் பயிலுஞ்
செம்பொன்னம் பலஞ்சூழ் திருமா ளிகையுங்
கோபுர வாசற் கூடசா லைகளு
முலகு வலங்கொண் டொளிவிளங்கு நேமிக்
குலவரை யுதைய குன்றமொடு நின்றெனப்
பசும்பொன் மேய்ந்த பலிவளர் பீடமும்
விசும்பொளி தழைப்ப விளங்குபொன் மேய்ந்து
இருநிலந் தழைப்ப விமையவர் களிப்ப
பெரிய திருநாள் பெரும்பயிர் விழாவெனு
முயர்பூரட் டாதி யுத்திரட் டாதியி
லம்பல நிறைந்த வற்புதக் கூத்த
ரிம்பர் வாழவெழுந் தருளு வதற்குத்
திருத்தேர்க் கோயில் செம்பொன் மேய்ந்து
பருத்திரண் முத்தின் பயில்வடம் பரப்பி
நிறைமணி மாளிகை நெடுந்திரு வீதிதன்
திருவளர் பெயராற் செய்துசமைத் தருளி
பைம்பொற் குழித்த பரிகல முதலால்
செம்பொற் கற்பகத் தொடுபரிச் சின்னமு
மளவில் லாதன வொளிபெற வமைத்துப்
பத்தாமாண்டிற் சித்திரைத் திங்க
ளத்தம் பெற்ற வாதிவா ரத்துத்

திருவளர் மதியின் திரையோதசிப் பக்கத்து
இன்ன பலவு மினிதுசமைத் தருளி
யொருகுடை நிழற்கீழ்த் தலமுழுதுங் களிப்பச்
செழியர்வெஞ் சுரம்புகச் சேரலர் கடற்புக
அழிதரு சிங்கள ரஞ்சிநெஞ் சலமரக்
கங்கர் திறையிடக் கன்னடர் வென்னிட
கொங்க ரொதுங்கக் கொங்கணர் சாயமற்
றெத்திசை மன்னருந் தத்தமக் கரணென
திருமலர்ச் சேவடி யுரிமையி லிறைஞ்ச
அங்கவன் மகிழுங் கங்கையொப் பாகிய
தெரிவையர் திலதந் தியாக பதாகை
புரிகுழல் மடப்பிடி புனிதகுண வனிதை
திரிபுவன முழுதுடையா ளெனவுட னிருப்ப
ஊழியந்நெடு மாலா கத்துப்
பிரியா தென்றுந் திருமக ளிருந்தென
மாதர் மடமயில் பூதலத் தருந்ததி
அரணிய கற்பிற் றரணிமுழு துடையா
ளிவன்றிரு மார்வத் தருளொடு மிருப்பச்
செம்பொன் வீர சிங்கா சனத்து
திரிபுவன முழுதுடையா ளோடும்வீற் றிருந்தருளிய
கோப்பரகேசரி வன்மரான திரிபுவனச்சக் கரவர்த்திகள்
விக்கிரமசோழ தேவர்க்கு யாண்டு —"

என்று கல்வெட்டு (கட்டுரையு)ம்;

"—செம்பதத்துக்
கூடிய "சீர்தந்த" வென்றெடுத்த கூத்தனுலாச்
சூடிய விக்கிரம சோழனும்."

என்று சங்கரசோழனுலாவுங் கூறுகின்றன.

(இவன் காலத்தில்தான் திருநாவுக்கரசு நாயனாரும், திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும் தேவாரம் அருளிச்செய்தது).

குலோத்துங்கசோழன் (கோவிராசகேசரி):—விக்கிரமசோழன் மகன்; "ஒட்டக்கூத்தர்" என்னும் புலவர் பெருமானிடத்தில் கல்வி கற்றவன்; நெடுமாறபாண்டியன் மகளாகிய "புவனமுழுதுடையாள்" கணவன்; "உறையூர்" நகரத்தை இராச

தானியாகக் கொண்டவன்; இராசராசசோழன் தந்தை; ஒட்டக்கூத்தர் பாடிய "குலோத்துங்கசோழனுலா, குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ், குலோத்துங்கசோழன் கோவை" என்னும் பிரபந்தங்கள் கொண்டவன்; "ஔவை, கம்பர், புகழேந்தி" என்னும் புலவர் பெருமக்கள் புகழ்ந்து பாடப்பெற்றவன்; முடிசூட்டு காலத்தில் ஒட்டக்கூத்தர் வாழ்த்துக்கவி பாட விரும்பி,

"ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெங்கு
நீடுங் குடையைத் தரித்தபிரான்

என்று கூறக்கேட்ட "குலோத்துங்கசோழன்" தனக்குக் கல்வி கற்பித்த ஆசிரியரைத் துதிப்பதற் கேற்றகால மிதுவே யென்றுணர்ந்து,

—இந்தநீ ணிலத்திற்
பாடும் புலவர் புகழொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென் றேயென்னைச் சொல்லுவரே."

என்று பாடி முடித்தான்; அப்போது அவையிலுள்ள பெரியோர்களெல்லாம் குலோத்துங்கசோழனுடைய கல்வித் திறத்தையுங் களங்கமற்ற மனதையும் பாராட்டி "அகளங்கன்" என்று கொண்டாடினார்கள்;

"புகழ்மாது விளங்கச் சயமாது விரும்ப
நிலமகள் நிலவ மலர்மகள் புணர
வுரிமையிற் சிறந்த மணிமுடி சூடி
மீனவர் நிலைகெட வில்லவர் குலைதர
விக்கலன் சிங்கணன் மேல்கடல் பாயத்
திக்கனைத் துந்தன் சக்கர நடாத்தி
விசயாபி டேகம்பண்ணி வீரசிங் காசனத்து
புவனமுழு துடையாளோடும் வீற்றிருந் தருளிய
கோவிராச கேசரி வன்மரான சக்கரவர்த்திகள்
குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு—"

என்று கல்வெட்டு (கட்டுரையு)ம்;

"கூட மெடுத்த குளத்தொடு கோபுர
மாட மெடுத்த பிரான்மகன் வாழியே.

கோயில்முன் னேழ்நிலை கொண்டதோர் கோபுர
வாயில் வகுத்த பிரான்மகன் வாழியே.

எண்டரு கத்தினிற் றில்லையி னேர்பெறு
மண்டபம் வைத்த பிரான்மகன் வாழியே."

என்று தக்கயாகப் பரணியும்;

"வெள்ளைக் கலியுலா மாலையொடு மீண்டுமவன்
பிள்ளைத் தமிழ்மாலை பெற்றோனும்—"

என்று சங்கரசோழனுலாவுங் கூறுகின்றன.

இவன் பெயர் "குமார குலோத்துங்கன், குமாரமகீதரன், குமாரபூபதி, அகளங்கன்" எனவும் வழங்கும். (இவன்காலத்தில் "கம்பரும், ஒட்டக்கூத்தரும்" இராமாயணம் பாடினர்).

இராசராசசோழன் :—குலோத்துங்கசோழன் மகன்; குமார மகீதரசோழன் தந்தை; "உறையூர்" நகரத்தை இராசதானி யாகக்கொண்டவன்; ஒட்டக்கூத்தர் பாடிய "இராசராசசோழ னுலா" என்னும் பிரபந்தங்கேட்டு கண்ணிக்காயிரம்பொன் பரிசு கொடுத்தவன்.

"—தெள்ளித்தம்
முன்னு யகரினவன் மூதுலாக் கண்ணி தொறும்
பொன்னு யிரஞ்சொரிந்த பூபதியும்—"

என்று சங்கரசோழனுலா கூறுகிறது.

சங்கரசோழன் :—குமாரமகீதர சோழன் மகன்; "உறையூர்" நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "சங்கராசன், சுராசன், சங்கரதேவன்" எனவும் வழங்கும்; "சங்கரமந்தை, சங்கரதேவன்குடிக்காடு, சங்கமங்கலம், சங்கந்தி, சங்கரனார்கோயில்" முதலியவூர்களை யுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "சங்கராசன் (சங்கரன்), சங்கரதேவன் (சங்கத்தியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"பைத்த பொருபுலியைப் பல்கோடி வேந்தணிய
வைத்த குமார மகீதரற்கும்—மெய்த்துணையாய்த்
தோன்றிய சங்கர ராசன் சுராசன்."

என்று சங்கரசோழனுலா கூறுகிறது.

இராசேந்திரசோழன் :—"உறையூர்" நகரத்தை இராச தானியாகக்கொண்டவன் ; பொன்னமராவதியில் தன் பெயரால் "இராசேந்திரசோழேச்சரம்" என்னும் திருக்கோயிற் கட்டின வன் ; சுந்தரமூர்த்திநாயனர் மழைபெய்யத் தேவாரம் பாடிய தற்குப் பன்னிரண்டுவேலி நிலமும் ; திரும்ப மழைநிற்கத் தேவாரம் பாடியதற்குப் பன்னிரண்டுவேலி நிலமும் திருப் புன்கூர் சிவலோகநாதருக்குக் கொடுத்தவன். (இவன் காலத்தில் "சுந்தரமூர்த்தி நாயனர், சேரமான் பெருமாணுயனர், ஔவை யார்" என்னும் மூவரும் ஒரேநாளில் கூட்டோடு திருக்கயிலா யஞ் சென்றனர்).

இராசாதித்தசோழன் :—தஞ்சாவூரை இராசதானியாகக் கொண்டவன் ; "தக்கோலம்" என்னுமிடத்தில் இரட்டராச்சியத் தரசனுகிய கன்னரதேவனேடு போர்செய்து, அன்றிராத்திரி அவன் சகோதரி கணவனுகிய பூதராசனல் நயவஞ்சகத்தாற் கொல்லப்பெற்றவன் ; இவனிறந்ததும் "சோழமண்டலம்" கன்னரதேவன் வசமாயிற்று. ("கச்சியுந் தஞ்சையுங்கொண்ட கன்னரதேவர்க்கு யாண்டு" என்று கல்வெட்டுகள் கூறுகின்றன). இராசாதித்தசோழன் இறந்ததற்கு திருநாவலூரில் திருவிளக்கு கள் வைக்கப்பட்டன.

கோனேரின்மைகோண்டசோழன்:—"கோனேரிராசபுரம்" என்னும் நகரத்தை யுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்ட வன்; இவன் பெயர் "கோனேரிராயன், கோனேரிகொண்டான், கோனேரியாண்டான், கோனேரிப்பிரியன், கோனேரியாளி" எனவும் வழங்கும்; "கோனேரிராசபுரம், கோனேரிகுப்பம், கோனுப்பட்டு, கோனம்பட்டி (கூனம்பட்டி), கோனூர், கோனுடு" என்னுமூர்களையும்; "கோனேரி" என்னும் தெய்வத் தன்மை பொருந்திய ஏரியையும் ; "கோனேரிராயன்" என்று எழுதப்பெற்ற நாணயத்தையும் உண்டாக்கினவன்; முல்லை நில மாக்களுக்கு "கோன்" என்னும் பட்டங்கொடுத்தவன்; கண்மா ளற்கு "இரட்டைசங்கு ஊதவும், பேரிகை கொட்டுவித்துக் கொள்ளவும், பாதரட்சை அணிந்துகொள்ளவும், வீடுகளுக்கு ந்து பூசவும்" கட்டளையிட்டவன் ; (கோனேரின்மைகொண்

டான் வெங்காலநாட்டு கண்மாளற்கு ௫௬-வது ஆடிமுதல் இரட்டைச்சங்கு ஊதவும், பேரிகை கொட்டுவித்துக்கொள்ளவும், பாதரட்சை அணிந்துகொள்ளவும், வீடுகளுக்கு சாந்து பூசவும் கல்லில் வெட்டிக்கொள்ளவும் என்று கல்வெட்டு கூறுகிறது). இவன் மரபோர்க்கு "கோனேரிகொண்டான் (கொன்னமுண்டான்), கோனேரிப்பிரியன் (கோதண்டப்பிரியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"கோனேரி வாழுங் குருகாய்ப் பிறப்பேனே".

என்று குலசேகராழ்வார் திருமொழிப் பிரபந்தங் கூறுகிறது.

அபயகுலசேகரசோழன்:—"திருவாரூர்" நகரத்தை இராசதானியாகக் கொண்டவன்; "திருநாரையூர்" பொல்லாப்பிள்ளையார் திருவருள்பெற்ற "நம்பியாண்டார்நம்பி" மூலமாக திருத்தில்லைச் சிற்றம்பலத்தின் மேற்புறம் மூவர் கையடையாளமிட்ட அறையினின்று கறையான் தின்றனபோக எஞ்சிநின்ற தேவாரத் திருப்பாடல்களை வெளிப்படுத்தி "திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்" திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடல்களை மூன்று திருமுறைகளாகவும்; "திருநாவுக்கரசு நாயனர்" திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடல்களை மூன்று திருமுறைகளாகவும்; "சுந்தரமூர்த்தி நாயனர்" திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடல்களை ஒரு திருமுறையாகவும்; "மாணிக்கவாசகர்" திருவாய்மலர்ந்தருளிய "திருவாசகம், திருக்கோவையார்" என்பவற்றை ஒரு திருமுறையாகவும்; "திருமாளிகைத்தேவர், சேந்தனர், கருவூர்த்தேவர், நம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணுட்டடிகள், திருவாலியமுதனர், புருடோத்தமநம்பி, சேதிராயர்" என்னும் ஒன்பதின்மர் திருவாய்மலர்ந்தருளிய "திருவிசைப்பா, திருப்பல்லாண்டு" என்பவற்றை ஒரு திருமுறையாகவும்; "திருமூலநாயனர்" திருவாய்மலர்ந்தருளிய திருமந்திரப் பாடல்களை ஒரு திருமுறையாகவும்; திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோனயனர், சேரமான்பெருமாணயனர், நக்கீரதேவர், கல்லாடதேவர், கபிலதேவர், பரணதேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், பட்டினத்தடிகள், நம்பியாண்டார் நம்பி" என்னும் பன்

னிருவர் திருவாய்மலர்ந்தருளிய நாற்பது பிரபந்தங்களை ஒரு திருமுறையாகவும் தொகுத்து பதினொரு திருமுறைகளையும் செப்பேடுசெய்து திருவாரூரில் தியாகேசர் சந்நிதியில் ஏற்று வித்து, ஓலைப்பிரதிகளை வேளாளரில் ஒருவகுப்பாரிடம் ஒப்பு வித்து, அவர்களுக்கு "தேவாரப்பொக்கிடம்" என்னும் அருத்தம் தரத்தக்க "பண்டாரம்" என்னும் பட்டத்தைக் கொடுத்து திருக்கோயில்களில் ஓதச்செய்தவன்.

கோனேரிமேல்கொண்ட குலோத்துங்கசோழன் :—"கோனேரிராசபுரம்" நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; சிறந்த வீரமுங் கொடையு முடையவன். (கோனேரிமேல் கொண்ட குலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு ௰௪ என்று கல்வெட்டு கூறுகிறது)

அனபாயசோழன் :—"திருவாரூர்" நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; சிறந்த சிவபத்தியும் வீரமுங்கொடையுமுடையவன்; திருத்தொண்டர்களிடத்தில் பேரன்புடையவன்; தன்னுடைய மந்திரத்தலைவராகிய "சேக்கிழார்" என்பவரைக் கொண்டு "திருத்தொண்டர்" பெரியபுராணம் பாடுவித்து அப்புராணத்தைப் பதினொரு திருமுறைகளோடு சேர்த்துப் பன்னிரண்டு திருமுறைகளாக்கினவன்.

"சென்னி வெண்குடை நீடன பாயன்"

என்று இயற்பகை நாயனர் புராணமும்;

"மன்னிய வனபா யன்சீர் மரபின்மா நகர மாகுந்
தொன்னெடுங் கருவூ ரென்னுஞ் சுடர்மணி வீதிமூதூர்."

என்று எறிபத்த நாயனர் புராணமும்;

"தளவமாலையப யனையெதிர்ந்தினிய சாரவாசிபல சாற்றினர்."

என்று சேக்கிழார் நாயனர் புராணமும்;

"அடுத்துயர்ந்த கீர்த்தி யனபாயா,—இகன்மதமால் யானை
யனபாய னெங்கோன்,—அண்ண லனபாயன் வாழி."

என்று தண்டியலங்காரமுங் கூறுகின்றன.

"மதுரையும் பாண்டியன் முடித்தலையும் ஈழமுங் கருவூருங் கொண்டருளிய" குலோத்துங்கசோழன் (கோப்பரகேசரி) :— "உறையூர்" நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; புவன முழுதுடையாள் கணவன்; வீரபாண்டியனை முடித்தலைகொய்து, அவன் மகனை மூக்கறுத்துக்கொன்று சரணடைந்த விக்கிரம பாண்டியனுக்கு கூடல்மாநகர் கொடுத்தவன்; சிங்களப்படையை மூக்கறுத்துங் கடலிற்புகத்துரத்தி ஈழத்தைக் கைக்கொண்டவன்; வீரகேரளனை விரல் தறித்துக் கருவூரைக் கைப்பற்றினவன்; இவன்பெயர் "ஈழத்தரையன், ஈழங்கொண்டான், முடியைக்கொண்டான், கோட்டைசுருட்டி, கோட்டைமீட்டான்" எனவும் வழங்கும்; "முடிகொண்டான்" என்னும் ஊரையும்; "முடிகொண்டான்" என்னும் சிற்றுற்றையுமுண்டாக்கினவன்; இவன் மரபோர்க்கு "ஈழத்தரையன், ஈழங்கொண்டான், முடியைக்கொண்டான், கோட்டை சுருட்டி, கோட்டைமீட்டான்" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"திரிபுவனசக்கரவர்த்திகள் "மதுரையும், ஈழமும், பாண்டியனை முடித்தலையுங்"கொண்டருளின குலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு கக-வது அச-ல் பிரசாதஞ்செய்தருளின திருமுகப்படி"

என்று கும்பகோணம் வாணபுரீசுரர் கோவில் கல்வெட்டுச் சாதனமும்;

திரிபுவனசக்கரவர்த்திகள் 'மதுரையும், ஈழமும், கருவூரும், பாண்டியன் முடித்தலையுங்" கொண்டருளிய குலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு உகூ-வது திருக்களர் மூளைத்த நாயனார்கோயில்"

என்று திருக்களர் செப்பேட்டுச்சாதனமும்;

"புயல்பெருக வளம்பெருகப் பொய்யாத நான்மறையின்
செயல்வாய்ப்பத் திருமகளுஞ் சயமகளுஞ் சிறந்துவாழ
வெண்மதிபொற் குடைவிளங்க வேல்வேந்த ரடிவணங்க
மண்மடந்தை மனமகிழ மனுவின்நெறி தழைத்தோங்கச்

சக்கரமுஞ் செங்கோலுந் திக்கனைத் துஞ்செல்லக்
கற்பகாலம் புவிகாப்ப பொற்பமைந்த முடிசூடி
விக்ரமபாண்டியன் வேண்டிவிட்ட தண்டால்
வீரபாண்டியன் மக்கள்பட வேழகத்தார்பட
மறப்படை படச்சிங்க ளப்படைமூக்
கறுப்புண்டு வலைகடல் புகவீர பாண்டியனை
முதுகிடும் படிதாக்கி மதுரையு மரசுங்கொண்டு
சயத்தம்பநட் டம்மதுரையு மரசும் நாடும்
அடைந்த பாண்டியற் களித்தருளி
மெய்ம்மலர்ந்த வீரக்கொடியுடன் றியாகக் கொடியெடுத்துச்
செம்பொன் வீரசிங் காதனத்துப்
புவனமுழு துடையாளோடும் வீற்றிருந்தருளிய
கோப்பரகேசரி வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
குலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு—" (க)

"முடிபுனைந்து தண்டொன்றால் வீரபாண்டியன்றன்
மகனைமூக் கரிந்துகொண்டு விக்ரமபாண்டியற்கு
கூடல்மா நகர்கொடுத்து மீண்டதற்பின்
எடுத்துவந்து பரிபவத்தால் நெட்டூரில்
எதிர்த்தவீர பாண்டியனை முடித்தலைகொண்
டமர்முடித் தவன்மடக் கொடியைவேழ மேற்றித்
திருவிழந்த தென்னவனுங் கேரளனும் வந்திறைஞ்சி
யரியணையின் கீழிருக்க வவன்முடிமே லடிவைத்துப்
படிவழங்கி முடிவழங்கி பாண்டியற்கு விடைகொடுத்து
கொடிவழங்கு வில்லவற்கு கொற்றவர்பெரு திருவழங்கி
வீரகேரளன் விரல்தறித்து வென்கொண்டு வந்திறைஞ்சப்
பாரறிய வாழ்வருளிப் பரிகலத்தி லமுதளித்துப்
பருதிகுல பதியென்னுந் திருநாமம் பரித்த பாண்டியற்
கிருநிதியமும் பரிசட்டமு மிலங்குமணிக் கலனுநல்கி
தியாகவீரக் கொடியெடுத்து வாகைவீரக் கழல்கட்டி
திக்கெட்டு மேவல்கேட்ப சக்கரவெற்பில் புகழெறிப்பச்
செம்பொன் வீரசிங் காதனத்துப்
புவனமுழு துடையாளோடும் வீற்றிருந்தருளிய
கோப்பரகேசரி வன்மரான திரிபுவனசக் கரவர்த்திகள்
குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு—" (உ)

என்று கல்வெட்டு(கட்டுரை)களுங் கூறுகின்றன.

(அனபாயசோழன் மந்திரத்தலைவரான "சேக்கிழார்" கட்டிய குன்றத்தூர் திருநாகேச்சரத்திலும்இவனுடைய காலத்துக் கல்வெட்டுகளிருக்கின்றன).

இராசராசசோழன் (கோப்பரகேசரி):—"உறையூர்" நகரத்தை இராசதானியாகக்கொண்டவன்; "உலகுடை முக்கோக்கிழானடிகள்" என்னும் பெண்ணரசி கணவன்.

"பூமருவிய திருமாதும் புவிமாதும் சயமாதும்
நாமருவிய கலைமாதும் புகழ்மாதும் நயந்துபுல்க
அருமறை நெறியனைத்து மருந்தமிழுந் தனிதழைப்ப
வருமறை யுரிமையின் மணிமுடி சூடித்
திங்கள் வெண்குடைத் திசைக்களி றெட்டுந்
தங்கு தனித்திடந் தானென விளங்கக்
கருங்கலிப் பட்டியைச் செங்கோல் துரப்பப்
பொருவலி யாழி புவிவளர்த் துடன்வர
வில்லவர் தெலுங்கர் மீனவர் சிங்களர்
பல்லவர் முதலிய பார்த்திவர் பணிய
எண்ணருங் கற்ப மண்ணகம் புணர்ந்து
செம்பொன் வீரசிங் காசனத்து உலகுடைமுக்
கோக்கிழா னடிகளோடும் வீற்றிருந் தருளிய
கோப்பர கேசரிவன்மரான திரிபுவனசக் காவர்த்திகள்
ராசராச தேவற்கு யாண்டு—"

என்று கல்வெட்டு (கட்டுரை) கூறுகிறது.

("குலோத்துங்கசோழன், வீரராசேந்திரசோழன், கோப்பெருஞ்சிங்கசோழன்" என்னும் பெயருடைய அரசர்கள் அனபாயசோழனுக்குப் பின்னுமிருந்ததாக குன்றத்தூர் திருநாகேச்சரம் கல்வெட்டுகளினால் தெரிகிறது).

கோனேரிமேல்கொண்டான்:—திருச்சிராப்பள்ளியை இராசதானியாகக்கொண்டவன்; இவன் பெயர் "கோனேரிராசன்" எனவும் வழங்கும்; இவனுக்கும் கங்கநாட்டையாண்ட வீரவிருப்பண்ணவுடையானுக்கும் கலி நாற்பத்தைந்தாம் நூற்றுண்டினிறுதியில் (இற்றைக்கு ஐந்நூற்று முப்பதாண்டுகளுக்குமுன்) நடந்த பெரும்போரில் "சோழமண்டலம்" வீரவிருப்பண்ண

வுடையான் வசமாயிற்று. (மூத்தாகுரிச்சி கல்வெட்டு கோனேரிராசன்காலத்தில் இராச்சியமிழந்ததாகக் கூறுகிறது). அக்கால முதல் இராசேந்திர குலத்தவர்களாகிய "சோழர்கள்" இராச்சியத்தை மீட்டுக்கொள்ளவுமில்லை; வேற்றரசனிடத்தில் அடங்கவுமில்லை.

மகாமண்டலேசுவரன் ஆரியராயவிபாடன் பாடைக்குத் தப்புவராதகண்டன் மூவராயர்கண்டன் வீரஅரிஅர வுடையார் குமாரன் வீரவிருப்பண்ண வுடையார் இராச்சியம்பண்ணியருளாநின்ற சகாப்தம் ஆயிரத்துமுந்நூற்றுப்பதினாறின்மேல் செல்லாநின்ற சீமுகவருடம் மகர நாயிற்று அபரபக்கத்து சோதியும் நவமியும்பெற்ற ஞாயிற்றுக்கிழமைநாள் இராசேந்திரசோழவளநாட்டுப் புறங்கரம்பைநாட்டுத் திருக்களருடையார்;

மகாமண்டலேசுவரன் ஆரியராசவிபாடன் பாடைக்குத்தப்புவராதகண்டன் மூவராயர்கண்டன் வீரபூபதி உடையார் பிருதிவிராச்சியம்பண்ணியருளாநின்ற சகாப்தம் ஆயிரத்து முந்நூற்று நாற்பத்துமூன்றின்மேல் செல்லாநின்ற சார்வரி வருடம் மிதுன நாயிற்று அபரபக்கத்து பிரதமையும் மங்களவாரமும் பெற்ற மூலத்தினம் இராசேந்திர சோழவளநாட்டுப் புறங்கரம்பைநாட்டுத் திருக்களர் நாயனார்;

மகாமண்டலேசுவரன் ஆரியராசவிபாடன் பாடைக்குத் தப்புவராதகண்டன் மூவராயகண்டன் பூருவ தட்சிண பச்சிம சமுத்திராதிபதி விருப்பண்ணவுடையார் பிருதிவிராச்சியம்பண்ணியருளாநின்ற சகாப்தம் ஆயிரத்து முந்நூற்று நாற்பத்துமூன்றின்மேல் செல்லாநின்ற சார்வரி வருடத்து மகர நாயிற்று பூர்வ பக்கத்து உத்திரமும் துவாதசியும் பெற்ற வெள்ளிக்கிழமை நாள் திருக்களருடையார்;

என்று திருக்களர் கல்வெட்டும்;

ஆரியராயவிபாடன் பாடைக்குத் தப்புவராதகண்டன் மூவராயகண்டன் கண்டநாடுகொண்டு கொண்டநாடு கொடாதான் பூர்வதட்சிண பச்சிம சமுத்திராதிபதி ரசவேட்டை கண்டருளிய தேவராயபூபதிஉடையார்பிருதிவிராச்சியம்பண்ணியருளாநின்ற சகாப்தம் ஆயிரத்து முந்நூற்று அறுபத்துஎட்டு இதன்மேல் செல்லாநின்ற அட்சய வருடம்;

என்று தஞ்சாவூர் கல்வெட்டுங் கூறுகின்றன.

---

# குறுநிலமன்னர்குல வரலாறு.

அதியமான் :—“ அதியரையமங்கை (அதிகை,” என்னும் தேவாரம்பெற்ற சிவதலநகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்ட சிற்றரசன் ; இவன் பெயர் “அதிகமான், அதிகைமான், அதியன், அதிகன்” எனவும் வழங்கும் ; இவன் மரபோர்க்கு “அதியமான், அதிகமான்” என்னும் பட்டப் பெயர்கள் வழங்குகின்றன.

களப்பாளன் (கூற்றுவன்) :—“ களப்பாள் (களந்தை) ” என்னும் (திருவிசைப்பா பதிகம்பெற்ற) சிவதலநகரத்தையுண்டு பண்ணி இராசதானியாகக்கொண்ட சிற்றரசன் ; சிறந்த சிவ பத்தியும் வீரமுங் கொடையுமுடையவன் ; பெரிய போர்க்களத்தையுடையவன் ; சோழ சேர பாண்டியர் முதலிய அரசர்களை யெல்லாம் போரில்வென்று, “ சபாநாயகப்பெருமான் ” திருவடியை முடியாகச்சூடப்பெற்று உலகமுற்றும் பொதுநீக்கி கூற்றங்களாகப்பிரித்து ஆண்டவன் ; இவன்பெயர் “ களந்தையாண்டான், களந்தைகொண்டான், களந்தைப்பிரியன், களந்தையாளி, களந்தையுடையன், களப்பாளி, இருங்களன், களன், களமுடையன், களத்துவென்றான் ” எனவும் வழங்கும்; “களர்” என்னும் (தேவாரம்பெற்ற) சிவதலத்தையும் ; “ களமங்கலம், களத்தூர், களக்குடி, களமாவூர், களக்காடு, களஞ்சேரி ” முதலியவூர்களையு முண்டாக்கினவன் ; இவன் மரபோர்க்கு “ களப்பாளன் (களப்பளான்), களப்பாளி (களப்பாடி), களந்தையாண்டான் (களந்தண்டான்), இருங்களன் (இருங்கள்ளன்), களன் (களாவன்), களத்துவென்றான் (தெத்துவெண்டான்), களமுடையன் (களக்குடையன், கக்குடையன், களக்கடையன், கிளாக்கடையன், கிளாக்கட்டையன், கிளாக்கன்)” என்னும் பட்டப் பெயர்கள் வழங்குகின்றன; நாடுகளையெல்லாம் கூற்றங்களாகப் பிரித்த காரணத்தினால் “ கூற்றுவன் ” என்னும் சிறப்புப்பெயர் வழங்கலாயிற்று ; அறுபத்துமூன்று நாயன்மார்களி லொருவன்.

“ ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக் கோனடியேன். ”

என்று (தேவாரம்) திருத்தொண்டத்தொகையும் ;

"நாதன் திருவடியே முடியாகக் கவித்து நல்ல
போதங் கருத்திற் பொறித்தமை யாலது கைகொடுப்ப
வோதந் தழுவிய ஞாலமெல்லா மொருகோலின் வைத்தான்
கோதை நெடுவேற் களப்பாள னாகிய கூற்றுவனே."

என்று திருத்தொண்டர் திருவந்தாதியும்;

"குன்றாத புகழாளர் களந்தைவேந்தர்
கூற்றுவனார் மாற்றவர்மண் கொண்டுசூடப்
பொன்றாழு முடிவேண்டப் புலியூர்வாழும்
பூசுரர்கள் கொடாதகலப் புனிதனீந்த
மன்றாடுந் திருவடியே முடியாச்சூடி
மாநிலங்காத் திறைவனுறை மாடக்கோயிற்
சென்றாசை யுடன்வணங்கிப் பணிகள்செய்து
திருவருளா லமருலகஞ் சேர்ந்துளாரே."

என்று திருத்தொண்டர் புராணசாரமுங் கூறுகின்றன.

இடங்கழி :—கொங்குதேயத்துப் பேரூர்ப் பொன்னம்பலத்தைப் பொன்னால்வேய்ந்த வேளிர்குலத்து "ஆதித்தன்" மரபில்வந்த சிற்றரசன்; "கொடும்பாளூர்" என்னும் (தேவாரம் பெற்ற) சிவதலநகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டு கோனாட்டையாண்டவன்; சிறந்த சிவபத்தியும் கொடையும் வீரமுமுடையவன்; சிவனடியாருக்குப் "பண்டாரம்" திறந்துவிட்டு, வேண்டுவன எடுத்துக்கொள்ளும்படி பறையறைவித்தவன், இவன்பெயர் "கொடும்பைராயன், கொடும்பையரையன், கொடும்பையாண்டான், கொடும்பைகொண்டான், கொடும்பைப்பிரியன், கொடும்பையாளி" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "கொடும்பைராயன் (கொடும்பரான்), கொடும்பையரையன் (கொடும்பையன், கொடும்பன்), கொடும்பைப்பிரியன் (கொடும்பிரியன், கொடும்புலியன், கொடுப்புலியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன; அறுபத்துமூன்று நாயன்மார்களி லொருவன்.

"மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்கும்"

என்று (தேவாரம்) திருத்தொண்டத்தொகையும்;

"சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பலமுகடு
கொங்கிற் கனக மணிந்தவா தித்தன் குலமுதலோன்
றிங்கட் சடையர் தமரதென் செல்வ மெனப்பறைபோக்
கெங்கட் கிறைவ னிருக்கு வேளூர்மன் னிடங்கழியே."

என்று திருத்தொண்டர் திருவந்தாதியும்;

"கோநாட்டுக் கொடும்பாளூ ரிருக்கும்வேளிர்
குலத்தலைவ ரிடங்கழியார் கொங்கிற்செம்பொ
ஞனேற்றூர் மன்றின்முக டம்பொன்மேய்ந்த
வாதித்தன் மரபோர்நெற் கவர்ந்தோரன்பர்
போநாப்ப னிருளின்கட் காவலாளர்
புரவலர்முன் கொணரவவர் புகலக்கேட்டு
மானேற்று ரடியாரே கொள்கவென்று
வழங்கியர சாண்டருளி மன்னினாரே."

என்று திருத்தொண்டர் புராணசாரமுங் கூறுகின்றன.

அருவன் :—அருவாநாட்டையாண்ட சிற்றரசன்; சிறந்த வீரமுடையவன்; இவன்பெயர் "அருவாநாடன், அருவாத் தலைவன்" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "அருவாத்தலைவன் (அருவாத்தலையன்), அருவாநாடன் (அருமைநாடான், அருமடான், அருமநாட்டான்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

பூழியன் :—"பூமியூர்" என்னும் நகரத்தையுண்டுபண்ணி இராசதானியாகக்கொண்டு பூழியூர் நாட்டையாண்ட சிற்றரசன்; இவன்பெயர் "பூழிராயன், பூழிநாடன்." எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "பூழிராயன், பூழிநாடன் (பூழிநாடான்)' என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

ஊமத்தன் :—ஊமத்த நாட்டையாண்ட சிற்றரசன்; இவன் பெயர் "ஊமத்தரையன், ஊமப்பிரியன்" எனவும் வழங்கும்; இவன் மரபோர்க்கு "ஊமத்தரையன் (ஊமத்தயன், ஊரத்தியன்), ஊமப்பிரியன் (ஊரான்பிலியன்)" என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

கருணகரத்தொண்டைமான் :—தொண்டைமான் மரபில் வந்தவன்; "வண்டை" நகரத்தை இராசதானியாகக்கொண்ட

சிற்றாசன்; வண்டையர்க்கும், தொண்டையர்க்கும், பல்லவர்க்கும் தலைவன்; குலோத்துங்கசோழனுக்கு மந்திரத்தலைவன்; சிறந்த வீரமுங் கொடையுஞ் சிவபத்தியுமுடையவன்; குலோத்துங்கசோழனுக்காக கலிங்கத்தைப் போரிற் கைக்கொண்டவன்; திருவாரூர்க் கோயிலை யிடித்துக்கட்டி சிவபதம் பெற்றவன்.

"தொண்டையர்க்கரசின் முன்வருஞ்சுரவி
துங்கவேள்கொடி யுயர்த்தகோன்
வண்டையர்க்கரசு பல்லவர்க்கரசு
மால்களிற்றின்மிசை கொள்ளவே."

"யிலங்கை யெறிந்த கருணா கரன்ற
னிகல்வெஞ் சிலையின் வலிகேட்பீர்
கலிங்க மெறிந்த கருணா கரன்றன்
களப்போர் பாடத் திறமினோ."

என்று கலிங்கத்துப்பரணியும்;

"அருணயத் தொண்ட ரனைவருந்தா னென்னுங்
கருணையைப் பார்முழுதுங் காணத்—திருவடிக்கீழ்
மன்னுங் கருணா கரத்தொண்டை மான்வந்தான்
என்னுந் திருச்சின்னத் தெம்பிரான்—"

என்று திருவாரூருலாவுங் கூறுகின்றன.

சேதிபன்:—திருக்கோவலூரை இராசதானியாகக்கொண்டு சேதிநாட்டையாண்ட சிற்றரசன்; இவன்பெயர் "சேதிராயன் சேதிநாடன்" எனவும் வழங்கும்; சபாநாயகப்பெருமான்பேரில் திருவிசைப்பா பதிகம் பாடினவன்; (இப்பதிகம் ஒன்பதாந் திருமுறையிலிருக்கிறது). இவன் மரபோர்க்கு "சேதிராயன் (சேதிரான், சேதுரான்)" என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது.

மெய்ப்பொருள்:—சேதிபன் மரபில் வந்தவன்; திருக்கோவலூரை இராசதானியாகக்கொண்டு சேதிநாட்டையாண்டவன். இவன் பெயர் "சேதிராயன்" எனவும் வழங்கும்; மலாடர் தலைவன்; சிறந்த சிவபத்தியும் வீரமுங் கொடையுமுடையவன்; சிவனடியார் விரும்பியவற்றைக் கொடுப்பவன்; சிவ வேடம்

பூண்டுவந்து தன்னைக் குத்திய (பகைவனாகிய) முத்திநாதனுயி ரைக் காத்தவன்; அறுபத்துமூன்று நாயன்மார்களி லொருவன்.

"வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்."

என்று (தேவாரத்) திருத்தொண்டத்தொகையும்;

"கற்றநன் மெய்த்தவன் போலொரு பொய்த்தவன் காய்சினத்தாற்
செற்றவன் றன்னை யவனைச் செறப்புக லுந்திருவாய்
மற்றவன் றத்தா நமரே யெனச்சொல்லி வானுலகம்
பெற்றவன் சேதிபன் மெய்ப்பொருளா மென்று பேசுவரே."

என்று திருத்தொண்டர் திருவந்தாதியும்;

"சேதிபர்நற் கோவலூர் மலாடமன்னர்
திருவேட மெய்ப்பொருளாத் தெளிந்த சிந்தை
நீதியினு ருடன்பொருது தோற்றமாற்ரு
னெடுஞ்சினமுங் கொடும்படையு நிகழாவண்ண
மாதவர்போ லொருமுறைகொண் டணுகிவாளால்
வன்மைபுரிந் திடமருண்டு வந்ததத்தன்
காதலுற நமர்தத்தா வென்றுநோக்கிக்
கடிதகல்வித் திறைவனடி கைக்கொண்டாரே."

என்று திருத்தொண்டர் புராணசாரமுங் கூறுகின்றன.

நரசிங்கமுனையரையன்:—சேதிபன் மரபில் வந்தவன்; "திருநாவலூர்" என்னும் (தேவாரம்பெற்ற சிவதல) நகரத்தை இராசதானியாகக்கொண்டு திருமுனைப்பாடி நாட்டையாண்டவன்; இவன் பெயர் "முனையரையன், முனையாண்டான், முனைகொண்டான், முனைப்பிரியன், முனையாளி" எனவும் வழங்கும்; சிறந்த சிவபத்தியும் வீரமுங் கொடையுமுடையவன்; ஆதிரைதோறும் சபாநாயகப்பெருமானுக்குச் சிறந்த பூசனை செய்து சிவனடியாருக்கு அன்னம் படைத்து தலா நூறு பொன் கொடுப்பவன்; ஒருதிருவாதிரையில் வந்த சிவனடியார்களில் ஒருவர்மீது "துர் நோய்" இருக்கக்கண்டு, மற்றைய சிவனடியார்கள் விலக, தான் விலகாமல், அவரைவழிபட்டு "இருநூறு" பொன் கொடுத்தவன்; சுந்தரமூர்த்தி நாயனாரை மகனாக வளர்த்தவன்; அறுபத்துமூன்று நாயன்மார்களி லொருவன்; இவன் மரபோர்க்கு

"முனையரையன் (முனைதரையன், முனையதரையன், முனைதிரியன்), முனைகொண்டான் (மு ண் டா ன்), முனையாளி (முனுக்காட்டி)," என்னும் பட்டப்பெயர்கள் வழங்குகின்றன.

"மெய்யடியா னரசிங்க முனையரையற் கடியேன்."

என்று (தேவாரத்) திருத்தொண்டத்தொகையும்;

"புகழும் படியெம் பரமே தவற்குநற் பொன்னிடுவோ
னிகழும் படியோர் தவன்மட வார்புனை கோலமெங்கு
நிகழும் படிகண் டவனுக் கிரட்டிபொன் னிட்டவனீ
டிகழு முடிநர சிங்க முனையர சன்றிறமே."

என்று திருத்தொண்டர் திருவந்தாதியும்;

"நாடுபுகழ் முனைப்பாடி நாடுமேய
நரசிங்க முனையர்புவி நயந்துமன்று
ளாடுமவ ராதிரைநா ளடியார்க்கம்பொ
னமுதளிப்பா ரொளிவெண்ணீ றணிந்துதூர்த்த
வேடமுடை யவர்க்கிரட்டிச் செம்பொனீந்து
விடுத்தழகா ராலயங்கள் விளங்கச்செய்து
தோடலர்தா ருடையபிரா னருளையாளத்
தோன்றினா ரெனையருளி னூன்றினாரே."

என்று திருத்தொண்டர் புராணசாரமுங் கூறுகின்றன.

வரபதியாட்கோண்டான் :—நரசிங்கமுனையரையன் இண்டா மகன்; வரந்தருவான்றந்தை, சிறந்த வீரமுங் கொடையுமுடையவன்; கொங்குதேயத்தைப்போரிற் கைக்கொண்டு ஆண்டவன்; வில்லிபுத்தூராரைக்கொண்டு "பாரதம்" பாடுவித்தவன்; இவன் பெயர் "ஆட்கொண்டான்" எனவும் வழங்கும்; "வக்கபாகை"யை இராசதானியாகக்கொண்டவன்.

"எங்குமிவ னிசைபரப்பி வருநாளில் யாமுரைத்த விந்த நாட்டிற்
கொங்கர்குல வரபதியாட் கொண்டானென் றொருவண்மைக் குரிசிறோன்
வெங்கலியின் மூழ்காமற் கருடப்பேர் வெள்ளத்து விழாம னொன்காஞ் [றி
சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல் கலங்காமற் றலைகண் டானே."

"மற்றவனிப் புவியாளும் ளவனுக்கு முடிகவித்து வழுதித் தெவ்வைச்
செற்றவனுக் கவனியெல்லாஞ் செங்கோன்மை நிலையிட்டுச் செல்வ
மெல்லாங்
கற்றவருக் கிருகையுடைக் கற்பகம்போ லினிதளித்துக் கமல மாதுங்
கொற்றவையு மனங்களிப்பத் தன்னுமமேருவினுங் கோட்டி னானே."

“பிறந்துய்யக் கொண்டவ னிப்பேருலகம் பெருவாழ்வு கூறு நாளி
னிறைந்தபுகழ்ச் சனிநகர்வாழ் வில்லிபுத்தூ ரனைநோக்கி நீயு நானும்
பிறந்ததிசைக் கிசைநிற்பப் பாரதமாம் பெருங்கதையைப் பெரியோர்தங்கள்
சிறந்தசெவிக் கமுதமெனத் தமிழ்மொழியின் விருத்தத்தாற் செய்கவென்
[றான்.”

என்று மகாபாரதம் கூறுகிறது.

பிரபுடதேவன் :—திருவண்ணாமலையை இராசதானியாகக் கொண்ட சிற்றரசன்; இவன் காலமும் வரபதியாட்கொண்டான் காலமும் சமகாலம்; திருவெண்காட்டடிகளாகிய பட்டினத்தடிகள் நாதத்திற்கு தாசிவயிற்றிற் பிறந்த “அருணகிரியார்” சுப்பிரமணியக்கடவுள் அனுக்கிரகம்பெற்று “திருப்புகழ்” பாடியதும், வில்லிபுத்தூரரை வாதில் வென்றதும் இவன் காலத்தில் தான்.

(கூ0) “உதய தாம மார்பான ப்ரபுட தேவ மாராச
னுளமு மாட வாழ்தேவர் பெருமாளே.”

என்று திருப்புகழ் (பொது) கூறுகிறது.

திருமங்கைமன்னன் :—“திருவாலி” நகரத்தை இராசதானியாகக்கொண்டு திருவாலி நாட்டையாண்ட சிற்றரசன்; சிறந்த விட்ணுபத்தியும் வீரமுங் கொடையுமுடையவன்; தினம் ஆயிரம் பாகவதர்களுக்கு அமுது படைத்தவன்; (அமுது படைத்த விடம் மங்கை மடம் என்று வழங்குகிறது). மானிட வடிவங்கொண்டு வந்த திருமாலின் கால்விரலில் அணிந்திருந்த மோதிரத்தைப் பற்களால் கடித்துக் கழட்டிய காரணத்தினல் ஞானமுண்டாகி அவரை வணங்கி “அட்டாக்கரம்” உபதேசிக்கப்பெற்றவன்; திருமாலின் திருக்கோயில்கள்தோறுஞ் சென்று “திருமொழிப் பிரபந்தங்கள்” அருளிச்செய்தவன்; திருடித் திருவரங்கன் திருக்கோயில் திருத்திக்கட்டினவன்; இவன் பெயர் “பரகாலன், கலியன்” எனவும் வழங்கும்.

மந்திரத்தலைவர்களுக்கு “தண்டநாயகன், தண்டத்தலைவன்” என்று பெயர்.

படைத்தலைவர்களுக்கு “படைத்தலைவன், சேனைத்தலைவன், சேனதிபதி, சேனபதி, சேனதிபன், தானைத்தலைவன், தானதிபதி, தானபதி, தானதிபன், படையாட்சி” என்று பெயர்.

படைக்கலம் பயிற்றுவிப்போர்க்கு "கருடி" என்று பெயர்.

இராசசமுகம் காப்போர்க்கு "திருக்கட்டியன்" என்று பெயர்.

அரண்மனை காப்போர்க்கு "மாளிகை சுற்றி" என்று பெயர்.

போர்க்களம் காப்போர்க்கு "போர்க்கட்டியன்" என்று பெயர்.

அரண்மனை விசாரணை பார்ப்போர்க்கு "அட்டவணை" என்று பெயர்.

கணக்கெழுதுவோர்க்கு "சம்பிரதி" என்று பெயர்.

சேனாதிபதி என்பது சேனாதியெனவும்; தானாதிபதியென்பது தானாதியெனவும்; தண்டத்தலைவன் என்பது தண்டத்தலையன் எனவும்; சேனைத்தலைவன் என்பது சேனைத்தலையன் எனவும்; படைத்தலைவன் என்பது படைத்தலையன் எனவும்; படையாட்சி யென்பது படையெழுச்சியெனவும்; கருடி யென்பது காடி யெனவும்; திருக்கட்டியன் என்பது திருக்காட்டியன் எனவும்; மாளிகை சுற்றி யென்பது மாளிச்சுத்தி, மான்சுத்தி எனவும்; போர்க்கட்டியன் என்பது போக்காட்டி, போர்மூட்டி யெனவும் வழங்குகின்றன.

---

## இந்திரகுல வரலாறு.

கோனேரிமேல்கொண்டான் (கோனேரிராசன்):—கலி நாற்பத்தைந்தா நூற்றாண்டின் இறுதியில் (இற்றைக்கு ஐந்து நூற்றாண்டுகளுக்குமுன்) கருநடதேசத்தரசனாகிய வீரவிருப்பண்ணவுடையானோடு பெரும்போர்செய்தும் பயனடையாமல் இராச்சியமிழந்து "தங்கவிடமும், உண்கச்சோறும், படுக்கப் பாயும், உடுக்கஆடையுமின்றி" பட்டுக்கோட்டைக்கும் கண்டர் கோட்டைக்கும் இடையில் "மேனாட்டுராயன்விடுதி, இராசாளி

விடுதி, இராங்கியன்விடுதி, மணிக்கராயன்விடுதி, கலிராயன் விடுதி, பன்னிகொண்டான்விடுதி, சிறுவாவிடுதி, காடுவெட்டி விடுதி, தளிகை விடுதி, ஆரிச்சுத்திவிடுதி, பட்டிவிடுதி, காரம்ப விடுதி, புதுவிடுதி, சென்னிவிடுதி, காரியான்விடுதி, சமட்டி விடுதி, உஞ்சிவிடுதி, வெள்ளைத்தேவன்விடுதி, போத்தன்விடுதி, தீத்தான்விடுதி, சுப்பிரமணியன்விடுதி, சிதம்பரவிடுதி, தோப்பு விடுதி, இருப்பைவிடுதி, பலாவிடுதி, துப்பன்விடுதி, புல்வெட்டி விடுதி" என்னுமிடங்களில் இருந்த காடுகளில் தங்கியிருந்தனர். அக்காலங்களில் தங்களை "இராசேந்திர குலத்தவரென்று சொல் வதற்கு அஞ்சி" இராச என்னும் பதத்தை மறைத்து "இந்திர குலத்தவர்" என்று சொல்வாராயினர். அக்காலமுதல் "இந்திர குலம்" என்னும் பெயர் வழங்கலாயிற்று. (கருநடதேசத்தரச னுக்குப் பயந்து "இராசேந்திரகுலம்" என்பதை மறைத்து "இந்திரகுலம்" என்று கூறினரெனவும்; "இராசேந்திர குலம்" என்னும் வாக்கியமானது முதற்குறை பெற்று "இந்திர குலம்" என்று வழங்கலாயிற்றெனவுங் கூறுவாருமுளர்). பின் னர் தங்களினத்தவர்கள் இராசேந்திரசோழவளநாட்டினிடை யில் தங்கியிருந்தவரையிலுமுள்ள கிராமங்களையெல்லாம் "அஞ்சு நில நாடு, அஞ்சுமுக நாடு, அஞ்சுவண்ணப்பத்து நாடு, அடைக் கலங்காத்தநாடு, அண்டக்குளநாடு, அம்புக்கோயில்நாடு, அன் னவாயிற்பற்றுநாடு, ஆமையூர்நாடு, ஆலங்குடிநாடு, இராசவள நாடு, இரும்புதல்நாடு, உறத்தூர்நாடு, ஊமத்தநாடு, எயிலுவான் கோட்டைநாடு, எய்ப்பாம்பாநாடு, எரிமங்கலநாடு, ஐயலூர்நாடு, ஐவூர்நாடு, ஒக்கூர்நாடு, (கீழை) ஒக்கூர்நாடு, கண்டர்மாணிக்கநாடு, கண்டிவளநாடு, கத்தரிமோழைநாடு, கம்பனூர்நாடு, கற்பிங்க நாடு, கல்லாகோட்டைநாடு, கன்னந்தகுடிநாடு, காசாநாடு, காசாங்கோட்டைநாடு, காரியோகநாடு, காவனூடு, காவிக்கோவ னூடு, கானம்பூண்டிநாடு, கானூடு, கி(ள்)ளியூர்நாடு, குண்டா கோயில்நாடு, குண்ணுவாரந்திநாடு, குளநீள்வளநாடு, குளமங்கல நாடு, குறுக்கைநாடு, (பெரிய) கூத்தப்பநாடு, கோட்டைப்பற்று நாடு, கோயிற்பற்றுநாடு, கோனூடு, கோனூர்நாடு, சித்தரகுடி நாடு (தண்டகமுண்டநாடு), சித்தப்பற்றுநாடு, சிலம்புநாடு, சிறு குடிநாடு, சிறுவாயில்நாடு, சுந்தரநாடு, செங்கணிநாடு, செங்கள

நாடு, செங்குளநாடு, (கீழ்)செங்குளநாடு, (மேல்) செங்குளநாடு, கீழ் செங்கைநாடு, செம்பொன்மாரிநாடு, சோற்றுப்பாலைநாடு, தந்திநாடு, (மேலைத்) துவாகுடிநாடு, (கீழைத்)துவாகுடிநாடு, தெருபோகிநாடு, தென்பற்றுநாடு, தென்மலைநாடு, தென்னவனாடு, நாலுநாடு, நிசலிநாடு, நீர்வதிநாடு, (கீழ்)நெல்விநாடு, நொடியூர்நாடு, பட்டமங்கலநாடு, பட்டுக்கோட்டைவளநாடு, (திருப்)பத்தூர்நாடு, (மேலைப்)பத்தூர்நாடு, பனையக்கோட்டை நாடு, பாகையூர்நாடு, பாப்பாநாடு, பிங்களகோட்டைநாடு, பிரம் பூர்நாடு, புன்னையூர்நாடு, பூழியூர்நாடு, பெருங்களூர்நாடு, பைங்கா நாடு, (மேலை)மகாநாடு, (திரு)மங்கலக்கோட்டைநாடு, மத்தச்சிறு குடிநாடு, மருங்காபுரிநாடு, மல்லாகோட்டைநாடு, மழைநாடு, மணப்பள்ளிநாடு, மாலைநாடு, மின்னாத்தூர்நாடு, மீய்செங்கிளிநாடு, மூசுரிநாடு, முத்துநாடு, மேலூர்நாடு, வடமலைநாடு, வடகூர்நாடு, வத்தனாகோட்டைநாடு, வல்லநாடு, வன்னாடு, வாகரைநாடு, வாராப்பூர்நாடு, வித்திநாடு, விற்குடிநாடு, வீரக்குடிநாடு, வெள்ளூர் நாடு, (கீழ்)வேங்கைநாடு" என்னும் நூற்றெண்பது நாடுகளாகவும்; சோழபுரத்தை இராசதானியாகக்கொண்டிருந்த "சூராதிராசன்" மரபினரில் ஒரு பிரிவினராகிய சோழன்கிளையினரும், காஞ்சிபுரத்தை இராசதானியாகக்கொண்டிருந்த "தொண்டைமான்" மரபினரில் ஒரு பிரிவினராகிய தொண்டைமான் கிளையினரும், பாக்கலக்கோட்டையை இராசதானியாகக்கொண்டிருந்த "பாங்கிலி" மரபினரில் ஒரு பிரிவினராகிய பாங்கிலி கிளையினரும், அரசபுரத்தை இராசதானியாகக்கொண்டிருந்த "அரசியன்" மரபினரில் ஒரு பிரிவினராகிய அரசியன் கிளையினரும், பிச்சபுரத்தை இராசதானியாகக்கொண்டிருந்த "பிச்சியன்" மரபினரில் ஒரு பிரிவினராகிய பிச்சியன் கிளையினரும், குருபாடியை இராசதானியாகக்கொண்டிருந்த "குருகலி" மரபினரில் ஒரு பிரிவினராகிய குருகலி (குருவிலி, குருவிழி) கிளையினரும், அரியசந்திரபுரத்தை இராசதானியாகக்கொண்டிருந்த "அரியசந்திரன்" மரபினரில் ஒரு பிரிவினராகிய அரிய சந்திரன் (அரியதன்) கிளையினரும் ஆகிய ஏழு கிளையினர்கள் குடியேறியிருந்த பாண்டிநாட்டுக் கிராமங்களை "அஞ்சூர்நாடு, ஆறூர்நாடு, கண்டதேவிநாடு, கண்டர்மாணிக்கநாடு, கீழைக்குடி

நாடு, சிறுகுடிநாடு, தென்னிலைநாடு, பழையநாடு, பாகனேரிநாடு, பிரான்மலைநாடு, மல்லாகோட்டைநாடு, மேல்நாடு, வாதவூர்நாடு, வெள்ளூர்நாடு என்னும் பதினான்கு நாடுகளாகவும் தொகுத்து, ஒவ்வொரு நாட்டிலும் எத்தனை பட்டப்பெயர்கள் அல்லது கிளைகளிருந்தனவோ அத்தனை கரைகளாக வகுத்து ஒவ்வொரு கரைக்கும் ஒவ்வொரு சபைத்தலைவராகிய "அம்பலவரை (நாட்டுத்தலைவரை)" ஏற்படுத்தி தங்களினத்தவர்களுக்குள்ளே ஏற்படும் வழக்குளை (நூதன அரசனிடத்தில் விடாமல் அவ்வம்பலவர்கள் பொதுத்தலத்தில் ஒன்றுகூடி விசாரித்துத் தீர்ப்புச்செய்துவிடுகிறதென்றும்; அங்ஙனம் தீராத வழக்குகளைப் பல நாட்டு அம்பலவர்கள் ஒன்றுகூடி விசாரித்துத் தீர்ப்புச்செய்து விடுகிறதென்றும் ஒரு திட்டம் ஏற்படுத்திக்கொண்டும்; பிரதம அரசர்களின் பாதுகாப்புக்குறைவினால் தங்களுக்கு நேரிடுகிற சோரபயத்தை அகற்றவேண்டுமென்று புராதனக்குடிகள் கேட்டுக்கொண்டபடி அவர்களிடம் "பாதுகாப்பு (மேன்பாதிகாவல்) வரி" வசூலித்துச் சோரபயத்தை நீக்கிக்கொண்டும்; உலகந்தோன்றியகாலமுதல் போர்த்தொழிலைத்தவிர வேறு தொழிற் செய்யாதவர்களானதால் "குடைநிழலிருந்து குஞ்சரமூர்ந்தோர், நடைமெலிந்தோரூர் நண்ணினு நண்ணுவர்" என்றபடி "பல்லக்கேறியவூரில் புல்லுச்சுமப்பது போல" நாளடைவிலே குடியுரிமையைக் கைக்கொண்டு "தொழுதூண் சுவையினுழுதூணினிது" என்னும் ஔவைப்பிராட்டியார் திருவாக்கின்படிக்கும்; "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந், தொழுதுண்டு பின் செல்பவர்" என்னும் திருவள்ளுவர் திருவாக்கின்படிக்கும் உழுதுண்பாராயினர். முற்கூறிய அம்பலவர்கள் பொதுத்தலத்தில் கூட்டங்கூடி வழக்குகளை விசாரித்து "சமன்செய்து சீர்தூக்குங்கோல் போலமைந்தொருபாற் கோடாமை சான்றோர்க்கணி" என்னும் திருவள்ளுவர் திருவாக்கின்படி "மயிர் பிளந்ததுபோல்" தீர்ப்புச்செய்வதை இன்றுங் காணலாகும்.

நம்முடைய தமிழ்ப்பூமியை "வீரவிருப்பண்ணவுடையார், வீரபூபதி உடையார், விருப்பண்ணவுடையார், தேவராயபூபதி

யுடையார்" என்னும் கருநட(கன்னட)அரசர்களும்; "பிரபுட தேவமகாராயர், அச்சுததேவமகாராயர், மல்லிகார்ச்சுனவிருபாட்சிராயர், அரங்கராயர், ஆனைக்கொந்திமகாராயர், வீரவசந்தராயர், கோபாலராயர், கிருட்டிணதேவமகாராயர்" என்னும் விசயநகரத்தரசர்களும்; "அச்சுதப்பநாயக்கர், செல்வப்பநாயக்கர், விசயராகவநாயக்கர்" என்னும் தெலிங்க அரசர்களும்; "ஏகோசி, சகோசி" என்னும் மகராட்டிர அரசர்களும் முறையே ஆண்டபின்னர் "சரபோசி" என்னும் மகராட்டிர அரசன்காலத்தில் கலி நாற்பத்தெட்டா நூற்றாண்டினிடையில் (இற்றைக்கு இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்) வடநாட்டினின்று மகமதியர்கள் கப்பல்மார்க்கமாய்வந்து, நகரங்களிற்புகுந்து கொள்ளையிட்டும்; கோயில்களின் கதவுகளில் வைக்கோலைப்போட்டுக் கொளுத்தியும்; கோயில்களையிடித்தும்; கோயில்களினுட் புகுந்து விக்கிரகங்களையுடைத்துக் கொள்ளையிட்டும்; "பரங்கிப்பேட்டை, நாகூர், நாகபட்டினம், அதிவீரராமன்பட்டினம், முத்துப்பேட்டை, தோப்புத்துறை, கூத்தூர், அடியக்கமங்கலம், கூத்தாநல்லூர், அத்திக்கடை, அம்மாப்பேட்டை" முதலியவூர்களில் அகப்பட்ட தமிழர்களை நிர்ப்பந்தப்படுத்தி மகமதியராக்கியும்; திருச்சிராப்பள்ளியைக் கைப்பற்றிக்கொண்டும் கொடுங் கலகம் விளைவித்தனர். இதுதான் குதிரைக்காரன் கலகம் என்று சனங்கள் சொல்லிக்கொள்வது. இக்கலகத்தில் பூமியிற்புதைத்து வைத்த "விக்கிரகங்களும், பொருள்களும்" தற்காலத்தில் பூமியினின்று ஆங்காங்கு வெளிப்படுகின்றன. இதுதான் "புதையலகப்பட்டதெனவும், சுவாமி பூமியினின்று கிளம்பிற்றெனவும்" மனிதர்கள் பேசிக்கொள்வது. முற்கூறிய கலகத்தை அடக்க மகாராட்டிரருக்கு வலியின்மையால் இராசேந்திரகுலத்தவர்களில் "காஞ்சீபுரம்" என்னும் நகரத்தை இராசதானியாகக் கொண்டு, தொண்டைமண்டலத்தை யாண்ட "தொண்டைமான்" மரபோரிலொருவர் "புதுக்கோட்டை" சமத்தானத்திற்கும்; "விசயபுரம்" என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டு சோழமண்டலத்தையாண்ட "விசயதேவன்" மரபோரிலொருவர் "பாப்பா" நாட்டிற்கும்; "பனையக் கோட்டை" என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டு

சோழமண்டலத்தையாண்ட "பணிகொண்டான்" மரபோரிலிருவர் "செல்லத்தூர், நெடுவயல்" என்பவற்றிற்கும்; "வழுவூர்" என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டு சோழமண்டலத்தையாண்ட "வழுவாளி" மரபோரிலொருவர் "சேந்தன் குடி"க்கும்; "மழவன்கோட்டை" என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டு, சோழவளநாட்டையாண்ட "மழவராயன்" மரபோரிலொருவர் "புனவாயி"லுக்கும்; தஞ்சை என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டு "தஞ்சாவூர், மன்னார்குடி" என்னுமிடங்களில் "இராசகோபாலன்" கோயிற்கட்டி சோழமண்டலத்தையாண்ட கலிகாலமுதல்வனாகிய "இராசராசசோழன்" என்னும் "கோபாலன்" மரபோரிலிருவர் "சிங்கவனம், மதுக்கூர்" என்பவற்றிற்கும்; "பரா(ந்தகன்) கோட்டை" என்னும் நகரத்தை இராசதானியாகக்கொண்டு முதல் தமையனாகிய இராசேந்திரசோழனால் "சோழவயோத்தியராசன்" எனவும், இரண்டாந் தமையனாகிய இராசாதிராசசோழனால் "சிங்களதேயத்தரசன்" எனவும் முடிகள் சூட்டப்பெற்று சிங்களதேயத்தையாண்ட "பராந்தகசோழன்" என்னும் "சிங்களப்பிரியன்" மரபோரிலிருவர் "கல்லாகோட்டை, பாதரங்கோட்டை" என்பவற்றிற்கும்; சோழதேயத்தையாண்ட "அச்சுததேவன்" என்னும் அரசன் மரபோரிலிருவர் "கண்டர் கோட்டை, பாலைவனம்" என்பவற்றிற்கும் முற்கூறிய "சரபோசி என்னும் மகாராட்டிரமன்னரால் "குறுநிலமன்னர்" என்னும் நியமனம்பெற்று மகமதியரோடு பெரும்போர்செய்து அவர்களைத் தஞ்சை ராச்சியத்தில் வீடாமல் வெருட்டியடித்து, "சைவ சமயத்தையும், மகாராட்டிர அரசையும்" நிலைநாட்டிவைத்தனர்; இப்பன்னிரு போர்வீரர்களும் போர்செய்யாதிருந்தால் "சைவ சமயமும், மகராட்டிர அரசும்" அக்காலத்திலேயே பறந்திருக்குமென்பது திண்ணமேயாகும். அக்குறுநிலமன்னர்களாகிய போர் வீரர்களின் மரபோர்களில் ஒருவர் அரசராயும், ஏனையோர் பாளையதாரர்களாயு மிருத்தலை இன்றுங் காணலாகும். அக்காலத்தில் நிர்ப்பந்தப்படுத்தி "மகமதிய"ராக்கப்பெற்ற தமிழர்

களின் மரபோர்கள்தான் இக்காலத்தில் தமிழ்மகமதியாயிருப்ப வர்கள். நம்சோழமண்டலத்தை கருநடதேயத்தரசர்களாண் டார்களென்பது "திருக்களர், தஞ்சாவூர்" கல்வெட்டுகளினாலும் "விசயநகரத்தரசர், தெலிங்கவரசர், மகாராட்டிரவரசர்" என்ப வர்களாண்டார்களென்பது பின்னுள்ள சாதனங்களாலும் நன் குணரலாகும்.

(க)

சுவத்தி ஸ்ரீ மகாமண்டலேசுரன் ராசாதிராசன் ராசபரமே சுரன் ராசமார்த்தாண்டன் கண்டநாடுகொண்டு கொண்டநாடு கொடாதான்எம்மண்டலமுங்கொண்டு ஈழமு மதுரையுங்கொண் டவன் துருக்கர்மோகந்தவிர்த்தவன் ஒட்டியர் கொட்டந்தவிர்த் தவன் பாடைக்குத் தப்புவாதகண்டன் பிரபுடதேவ மகாராயர் மல்லிகார்ச்சுனராயர் வீரவசந்தராயர் கோபாலராயர் கிருட்டின ராயர் அச்சுதப்பநாயக்கர் செல்வப்பநாயக்கர் விசயராகவநாயக்கர் ஏகோசிமகாராசா சகோசிமகாராசா சரபோசிமகாராசா துளசி மகாராசா பாவாசாயிபு அண்ணுசாயிபு நாணுசாயிபு பிரதாப சிங்கு மகாராசா இப்படி பிருதிவிராச்சியபரிபாலனம்பண்ணி யருளாநின்ற சாலிவாகன சகாத்தம் ௲௬௱அ௰ கலியுகம் ௪௲௬௱௬௰ இதன்மேல் செல்லாநின்ற ஈசுவர-ஹ வையாசி-மீ 2உ ராசராசவளநாடு இராசேந்திரசோழவளநாடு மல்லாரி விரு துள்ளநாடு அடைக்கலங்காத்தநாடு கடலேழும் விற்கடைக் காவல்கொண்டநாடு வில்லுக்கு விசயனைப்போலவும் சொல்லுக்கு அரிச்சந்திரனைப்போலவும் அழகுக்கு மன்மதனைப்போலவும் குதிரைக்கு நகுலனைப்போலவும் யானைக்குத் தேவேந்திரனைப் போலவும் அறிவுக்கு ஆதிசேடனைப்போலவும் கொடைக்குக் கன்னனைப்போலவும் புகழ்பெற்றநாடு கல்லூர் நெல்லூர்வெட்டிச் சயங்கொண்டநாடு பொய்யூர்க்கூற்றத்து பாப்பாகுடி நாட்டில் மேல்கரை கீழ்கரையிலிருக்கும் பதினறுகரைக்குட்பட்ட கரைப் பேர்கள் சகலரும் சயங்கொண்டநாத சுவாமியாருக்கு தரும சாதனப் பட்டயம் பண்ணிக்கொடுத்தபடி தருமசாதனப் பட்டய

மாவது உம்பளங்களின் நிமித்தம் நாட்டிற்சேர்ந்து சுவாமிக்குப் பிரார்த்தனைபண்ணிக்கொண்டுபோய் கல்லூரும் நெல்லூரும் வெட்டியழித்து கனியும் மரத்தோடே கொண்டுவந்தபடியினாலே நிகாம் அழித்து கோவிலுங்கட்டியாச்சு சுவாமி சயங்கொண்டநாதர் என்க அதற்குப் பூசை நடத்தவேண்டியத்துக்கும் தாழ்வு வாராமல் விட்டுக்கொடுத்து உச்சிக்காலக் கட்டளைக்கு நாட்டிலே வைச்சுக்கொடுத்த இராசகோபால சக்கரம் பொன் சவுரு இந்த நாற்பத்தஞ்சு பொன்னும் வருடத்துக்கு வருடம் இளம் அறுப்புக் கம்பிலே இரண்டுபங்கும் பெரும்பலத்திலே மூன்றுபங்குமாய்ப் பத்திக்கொண்டு கோவில்பூசை நிறைவேற பண்ணிவிச்சுக்கொண்டு வருவதாகவும் இந்த நாற்பத்தஞ்சு பொன்னுக்கும் விபரம் மேல்கரையில் கரை அ-க்கு பொன் உஉ பணம் ரு-ம் கீழ்கரை ஆம்பளாப்பட்டுக்கு பொன் கக-பணம் உ௨-ம் வெள்ளூர் பொன்-ரு பணம் சுவ-ம் கரம்பையம் பொன் ரு-பணம் சுவ-ம் ஆக கீழ்கரை மேல்கரையில் கரை செசு-க்கு ஷூ க-க்கு பொன் சவுரு இந்த நாற்பத்தஞ்சு பொன்னும் விபரப்படிக்கு வருடத்துக்கு வருடம் கல்லுங்காவேயுரிம் புல்லும் பூமியும் உண்டானகாலத்துக்கும் சந்திராதித்தவரைக்கும் புத்திர பவுத்திர பரம்பரைக்கும் பத்திக்கொண்டு கோவில்பூசை தவரில்லாமல் பண்ணிவருவதாகவும் இந்த தருமத்தை யாதாமொருத்தர் பரிபாலனம்பண்ணி வருகிறார்களோ அவர்களுக்கு கெங்கைக்கரையிலே ஆயிரங்கோடி சிவாலயம் பண்ணியபலனும் ஆயிரங்கோடி விட்டுணு பிரதிட்டைபண்ணின பலனும் ஆயிரங்கோடி காராம்பசுவை பூசித்தபலனும் மாதாபிதாவைப் பூசித்த பலனும் குருவைப் பூசித்த பலனும் அனுபவித்துக்கொண்டு சுகத்திலே இருப்பார்கள். இந்த தருமத்துக்கு யாதாமொருத்தர் விகாதமாய் நினைத்தாலும் அவர்கள் முன் எழுதின தருமங்களுக்கெல்லாம் விகாதம்பண்ணினல் எந்த தோடமுண்டோ அந்த தோடத்தில் போவார்கள். இந்தப்படிக்குச் சம்மதித்து சயங்கொண்டநாதசுவாமியாருக்கு பாப்பானுட்டவர்கள் பதினறு கரைப்பேரும்பட்டயம்பண்ணித்தொட்டுக்கொடுத்தோம். இந்தப்

பட்டயம் எழுதின நன்மைக்கு சிறுகளத்துடைய ராமலிங்கம் பிள்ளை நெட்டெழுத்து இந்த தாமிர சாதனம் எழுதின நன்மைக்கு அருணாசலத்து மகன் நாராயணன் கையெழுத்து உ

(உ)

சுவத்திஸ்ரீ மகாமண்டலேசுரன் ராசாதிராசன் ராசபரமேசுரன் ராசமார்த்தாண்டன் ராசகெம்பீரன் ராசஉத்தண்டன் கண்டநாடுகொண்டு கொண்டநாடு கொடாதான் எம்மண்டலமுங் கொண்டு ஈழமு மதுரையுங்கொண்டவன் துலுக்கர் மோகந்தவிர்த்தவன் ஒட்டியர்கொட்டந்தவிர்த்தவன் பாடைக்குத் தப்புவராதகண்டன் வேலூர் பிரபுடதேவமகாராயர் மல்லிகார்ச்சுனராயர் வீரவசந்தராயர் கோபாலராயர் கிருட்டினராயர் அச்சுதப்பநாயக்கர் செல்வப்பநாயக்கர் விசயராகவநாயக்கர் ஏகோசி மகாராசா சரபோசி மகாராசா சகோசி மகாராசா பாவாசாயிபு அண்ணசாயிபு நாணசாயிபு பிரதாபசிங்கு மகாராசா இப்படிக் கொத்தவர்கள் இராச்சியபரிபாலனம்பண்ணியருளாநின்ற கலியுகாத்தம் சஅஅாகூகெ சாலிவாகன சகாத்தம் ஆகூாஅகெ இதின்மேல் செல்லாநின்ற வெகுதானிய-ஸூ வையாசி-மீ உஉ ராசராசவளநாடு இராசேந்திர சோழவளநாடு பொய்யூர்க்கூற்றத்துபாப்பாகுடிநாடு நென்மலிவாடியிலிருக்கும் நல்லவன் விசயாதேவரவர்கள் குமாரரான ராமலிங்க விசயாதேவரவர்கள் பாப்பாநாட்டவர்களுக்கு காணியாக இருக்கிற சயங்கொண்டநாதசுவாமியாருக்கு தருமசாதன பட்டயம்பண்ணிக்கொடுத்தபடி தருமசாதனப்பட்டயமாவது கோயில் அர்த்தசாம கட்டளைக்கு வருடம் ஒன்றுக்கு இராசகோபால சக்கரம் பொன் சகெ இந்த நாற்பத்தாறு பொன்னும் இரண்டுபங்கு கம்பிலேயும் மூன்று பங்கு பெரும்பலத்திலேயும் பத்திக்கொண்டு கோயில் பூசை நிறைவேற பண்ணிவருவோமாகவும் இந்தப்படிக்கு வருடத்துக்கு வருடம் கல்லுங் காவேரியும் புல்லும் பூமியும் உண்டான காலத்துக்கும் சந்திராதித்தவரைக்கும் புத்திர பவுத்திர பாரம்பரியமாகப் பத்திக்கொள்வதாகவும் வேதவிநாயகன் துணை பொன் சகெ உ

(ரு)

சுவத்திஸ்ரீ மகாமண்டலேசுரன் அரியராயதளவிபாடன் பாடைக்குத்தப்புவராதகண்டன் கண்டநாடுகொண்டு கொண்ட நாடுகொடாதான் துட்டரில் துட்டன் துட்டநிட்டூரன் சிட்டபரி பாலனன் பூர்வதட்சிண பச்சிம உத்தர சமுத்திராதிபன் எம் மண்டலமுங்கொண்டு ஈழமு மதுரையுங்கொண்ட ராசாதிராசன் ராசபரமேசுரன் ராசமார்த்தாண்டன் ராசகெம்பீரன் ராசாக்கள் தம்பிரான் ராசகுலதிலகன் ராசகுலகெம்பீரன் மேதினிபாவா வண்டன் கட்டாரிச்சாளுவன் கட்டாரியையன் கோபாக்கினி விபாடன் கோவிப்பரகண்டன் ஒட்டியர்தளவிபாடன் ஒட்டியர் மோகந்தவிர்த்தவன் துலுக்கர்தளவிபாடன் துலுக்கர் மோகந் தவிர்த்தவன் வீரப்பிரதாபன் சோழமண்டல தாபனுசாரியன் பாண்டிமண்டலப் பிரதாபத்தாசாரியன் வலியச்செறுவில்லி வில் கால்நீட்டி நாவலம்பெருந்தீவுக்கு நாயகன் பிரபுடதேவமகா ராயர் அச்சுததேவமகாராயர் மல்லிகார்ச்சுன விருபாட்சிராயர் அரங்கராயர் ஆனைகொந்தி மகாராயர் கிருட்டினதேவ மகாரா யர் அச்சுதப்பநாயக்கர் செல்வப்பநாயக்கர் விசயராகவநாயக்கர் ஏகோசி மகாராசா சகோசி மகாராசா சரபோசி மகாராசா பாவா சாயிபு மகாராசா பிரதாபசிங்கு மகாராசா இவர்கள் பிருதிவி ராச்சியபரிபாலனம்பண்ணிச் செல்லாநின்ற சாலிவாகன சகாப் தம் சூசுஉஅடுகெ கலியுகம் சதூஅாகூகெ இதின்மேல் (செல்லா நின்ற) வெகுதானிய-ஹு ஆனி-மீ கூவ உத்தராயண புண்ணி யகாலத்தில் சோமவார சுபதினத்தில் கூடிய புண்ணியகாலத்தில் சோழமண்டலம் காவேரியாற்றுப்பிரிவு வெண்ணாற்றுக்குத் தெற்கு வீரமனல்லூர் சாவடிக்கு வடக்கு ராசராசவளநாட்டு ராசகெம்பீரவளநாட்டு ராசேந்திரசோழவளநாட்டு பாம்பவள நாட்டில் சிறுநெல்லிக்கோட்டையிலிருக்கும் காணியுடைய அர சர்களில் இந்திரகுலத்தி லவதரித்தோன் ஒன்னலரா வணங்கா சொன்னவாய்துளைத்தோன் மும்முரசுடையோன் அனுமகேத னன் படையில் அஞ்சாதகண்டன் எதிர்த்தவர்குடாரி வாகையந் தார்மார்பன் வாரகாலதற்கன் வடுகர்குலராகன் விசயமே படைத் தோன் கடலேழும் விற்கடைக்காவல்கொண்டருள்வோன் ஆழி

போல் வரைபோல் ஆடகவரைபோல் ஏழு நாட்டினிலிசைவளர் சிங்கம் நெல்லூர் கல்லூர் கிருபரைத்தடிந்து அல்லலறுத்தாள் வோன் வீராதித்தன் வீரகங்கணத்தன் வீரமல்லாரி விருது பெற்றுயர்ந்தோன் செம்பொன்மாரித்திறைகொண்டுவந்தவன் கம்பன் ஒட்டக்கூத்தன் கவிகொண்டருள்வோன் வாயளப்பார் கண்டன் அம்பலக்கனியை செம்பியற்குதவியும் நல் சங்கரன் நாரணன் பாதத்திலன்புறும் பாம்பைக் கரசனெனவந்தோன் சுவாமிகாரியதுரந்தரன் அனுமக்கொடி சேவற்கொடி அம்புலிக் கொடியும் மருப்பிலி கற்பகமாலையும் படைத்தோன் ராயமானிய ஸ்ரீ விசயரகுநாத மெய்க்கன் கோபாலரவர்கள் குமாரனர் ஸ்ரீ சவ்வாயி விசயரகுநாத வாளோசிமெய்க்கன் கோபாலரவர்கள் கல்பாக்கர்நாட்டில் காணியாயிருக்கிற சயங்கொண்டநாத சுவாமி யாருக்கு தருமசாதனபட்டயம் பண்ணிக்கொடுத்தபடி தரும சாதன பட்டயமாவது கோலாகாலசந்திக் கட்டளை நாள் ஒன்று க்கு பணம் ௨ ஆக இராசகோபால சக்கரம் பொன் ௭௰௨ சுக்கிர வாரக் கட்டளை மீ க-க்கு பொன் க பணம் ௬ ஆக வருடம் ஒன்றுக்கு பொன் ௯௬ பணம் ௨ வகை இரண்டுக்கு இராச கோபாலசக்கரம் பொன் ௬௰௪-பணம் ௨ இந்தப்படிக்கு தொண் ணூற்றொரு பொன்னும் இரண்டு பணமும் வருடாசலம் வாங்கிக் கொண்டு கோயில்பூசை தாட்சிவராமல் பண்ணிவருவோமாகவும் இந்தப்படிக்கு வருடத்துக்கு வருடம் கல்லும் காவேரியும் புல் லும் பூமியும் உண்டானவரைக்கும் சந்திராதித்தர்வரைக்கும் புத்திர பவுத்திர பாரம்பரியமாக பத்திக்கொள்ளுவதாகவும் இந்த தருமத்தை யாதாமொருவன் பரிபாலனம் பண்ணிறைகில் காசியிலே கோடிசிவலிங்கப் பிரதிட்டையும் கோடிவிட்டுணுப் பிரதிட்டையும் அனேக அசுவமேதங்களும் பண்ணிவிச்ச பலத் தையடைவான் இந்தத்தருமத்துக்கு யாதாமொருவன் விகாதங் கள் செய்தானுகில் கங்கைக்கரையிலே அனேகமான சிவாலயங் கள் விட்டுணுதலங்களைக் கெடுத்த பாவத்திலே போவான் இந்தப் படி நடப்பிவிக்கக்கடவராகவும் இந்தபட்டய சாதனம் எழுதின நன்மைக்கு பெத்தபெருமாள் குமாரன் அருணசலம் லிகிதம் பொன் ௬௰௪ பணம் ௨-௨.

(ச)

சுவத்திஸ்ரீமன் மகாமண்டலேசுரன் அரியராயதளவிபாடன் பாடைக்கு தப்புவாராதகண்டன் கண்டநாடுகொண்டு கொண்ட நாடு கொடாதான் துட்டரில்துட்டன் துட்டநிட்டூரன் சிட்டபரி பாலனன் பூர்வதட்சிண பச்சிம உத்தர சத்த சமுத்திராதிபன் எம்மண்டலமுங்கொண்டு ஈழமு மதுரையுங்கொண்ட ராசாதி ராசன் ராசபரமேசுரன் ராசமார்த்தாண்டன் ராசகெம்பீரன் ராசாக்கள் தம்பிரான் ராசகுலதிலகன் ராசகுலகெம்பீரன் மே தினி பாவாவண்டன் கட்டாரிச்சாளுவன் கட்டாரியையன் கோ பாக்கினி விபாடன் கோவிப்பாகண்டன் ஒட்டியர்தளவிபாடன் ஒட்டியர் மோகந்தவிர்த்தான் துலுக்கர் தளவிபாடன் துலுக்கர் மோகந்தவிர்த்தான் வீரப்பிரதாபன் சோழமண்டல தாபனசா ரியன் பாண்டிமண்டலப் பிரதாபத்தாசாரியன் வலியச்செறுவில்லி வில்கால்நீட்டி நாவலம்பெருந்தீவுக்கு நாயகன் பிரபுடதேவ மகாராயர் அச்சுததேவமகாராயர் மல்லிகார்ச்சுன விருபாட்சி ராயர் அரங்கராயர் ஆனைகொந்தி மகாராயர் கிருட்டினதேவ மகாராயர் அச்சுதப்பநாயக்கர் செல்வப்பநாயக்கர் விசயராகவ நாயக்கர் ஏகோசி மகாராசா சகோசி மகாராசா சரபோசி மகா ராசா பாவாசாயிபு மகாராசா பிரதாபசிங்கு மகாராசா இவர்கள் பிருதிவிராச்சியபரிபாலனம்பண்ணி செல்லாநின்ற சாலிவாகன சகாத்தம் ௲௯௱௮௰௨ கலியுகம் ௪௲௮௱௯௰௨ இதின்மேல் செல் லாநின்ற பிரமாதி-ஸ்ரீ தை-மீ ௨௰௯ உத்தராயண புண்ணிய காலத்தில் குருவார சுபதினத்தில் பூச நட்சத்திர சுபதினத்தில் கூடியபுண்ணியகாலத்தில் சோழமண்டலம் காவேரியாற்றுப் பிரிவு வெண்ணாற்றுக்குத் தெற்கு வீரமனல்லூர் சர்வடிக்கு வடக்கு ராசராசவளநாட்டு ராசகெம்பீரவளநாட்டு ராசேந்திர சோழவளநாட்டு பாம்பவளநாட்டில் சிறுநெல்லிக்கோட்டையி லிருக்கும் காணியுடைய அரசர்களில்இந்திரகுலத்தில் வந்தோன் ஒன்னலரா வணங்கா சொன்னவாய் துளைத்தோன் மும்முரசு டையோன் அனுமகேதனன் படையில் அஞ்சாதகண்டன் எதிர் த்தவர் குடாரி வாகையந்தார்மார்பன் வந்தகாலதற்கன் வடுகர் குலராகன் விராமணவாணன் விசயமேபடைத்தோன் கடலேழும்

விற்கடைக்காவல்கொண்டருள்வோன் ஆழிபோல் வரைபோல் ஆடகவரைபோல் ஏழுநாட்டினில் இசைவளர்சிங்கம் நெல்லூர் கல்லூர் நிருபரைத்தடிந்து மல்லூர்புயத்தன் வீராதித்தன் வீரகங்கணத்தன் வீரமல்லாரி விருதுபெற்றுயர்ந்தோன் செம்பொன்மாரி திறைகொண்டுவந்தவன் கம்பர் ஒட்டக்கூத்தர் கவிகொண்டருள்வோன் வாயளப்பார்கண்டன் அம்பலக்கனியைச்செம்பியர்க்குதவியும் நன்மையோர் ராமசங்கரன் நாரணிபாதத்தில் அன்புறு பாம்பைக்கரசனெனவந்தோன் சுவாமிகாரியதுரந்தரன் அனுமக்கொடி சேவற்கொடி அம்புலிக்கொடியும் மருப்பிலிகற்பகமாலையும் படைத்தோன் ராசமானியராசஸ்ரீ சவ்வாயி விசயரகுநாத மெய்க்கன் கோபாலர் அவர்கள் குமாரரான சவ்வாயி விசயரகுநாத வாளோசிமெய்க்கன் கோபாலரவர்கள் பாப்பாநாட்டுக் காணியாக இருக்கிற சயங்கொண்டநாதசுவாமியாருக்குத் தருமசாசனபட்டயம் பண்ணிக்கொடுத்தபடி தருமசாசன பட்டயமாவது கோவில் சாயரட்சை பூசை கட்டளைக்கு வருடம் ௯-க்கு பொன் ௪0 இந்த நாற்பது பொன்னும் வாங்கிக்கொண்டு கோவில் பூசை தாழ்ச்சி வாராமல் பண்ணிவருவோமாகவும் இந்தப்படிக்கு வருடத்துக்குவருடம் கல்லும் காவேரியும் புல்லும் பூமியும் உண்டானவரைக்குஞ்சந்திராதித்தாள் உண்டானவரைக்கும் புத்திர பௌத்திர பாரம்பரியமாக பத்திக்கொள்வதாகவும் இந்த தருமத்தை யாதாமொருவன் பரிபாலனம் பண்ணினுகில் காசியிலே கோடி சிவலிங்கப் பிரதிட்டையும் கோடிவிட்டுணு பிரதிட்டையும் அநேக அசுவமேதங்களும் பண்ணின பலத்தையடைவான் இந்த தருமத்துக்கு யாதர்மொருவன் விகாதங்கள் செய்தாகுகில் கங்கைக் கரையில் அநேகமான சிவாலயங்கள் விட்டுணு ஆலயங்களைக் கெடுத்த பாவத்திலே போவான் இது அறிந்துநடப்பிவிக்கக்கடவோராகவும் இந்தப் பட்டயம் எழுதின நன்மைக்கு அட்டவணை முத்தயன் லிகிதம் ஸ்ரீராமசயம்.

இப்பட்டயம் நான்கும் மதுக்கூர்(வாடியக்காடு) "சவ்வாயி விசயரகுநாத பாலாசி க. இராமலிங்கம் கோபாலர்" அவர்களிடமிருந்து கிடைத்தன.

---

# புதுக்கோட்டை அரசர்கள்.

(க) இரகுநாதராசதோண்டைமான் :—"காஞ்சிபுரம்" நகரத்தை இராசதானியாகக்கொண்டு தொண்டைமண்டலத்தை யாண்ட "தொண்டைமான்" மரபில் வந்தவர்; கலி நாலாயிரத்து எழுநூற்று எண்பத்தொன்பதில் முடிசூட்டிக்கொண்டு அரியாசனமேறினவர்; "புதுக்கோட்டை" என்னும் நகரத்தையுண்டு பண்ணி இராசதானியாகக்கொண்டவர்; வீரத்திலும் கொடையிலும் சிறந்தவர்; கிரித்தவ பாதிரிமார்களைப் பாதுகாத்தவர்; ஆறு மனைவியர்களையுடையவர்; நாற்பத்துநான்காண்டு அரசாண்டவர்.

(உ) விசயரகுநாததோண்டைமான்:—இரகுநாதராசதொண்டைமான் பெயரர்; இராசகோபாலதொண்டைமான், திருமலைத்தொண்டைமான் என்பவர்களின் சகோதரர்; கலி நாலாயிரத்து எண்ணூற்றுமுப்பத்துமூன்றில் முடிசூட்டப்பெற்றவர்; "சிவஞானபுரம்" என்னும் அரண்மனையை யுண்டாக்கினவர்; சிறந்த வீரமுங் கொடையுமுடையவர்; ஆங்கிலேயருக்குப் பேருதவி புரிந்து பெருநாடு பெற்றவர்; ஆறுமனைவியர்களை மணஞ்செய்தவர்; "சதாசிவப்பிரமம்" என்னும் பெரியார் திருவருள்பெற்றவர்; முப்பத்தொன்பதாண்டு அரசாண்டவர்; இவர் பெயர் "சிவஞானபுரத் துரைத்தொண்டைமான்" எனவும் வழங்கும்.

(ங) இராசரகுநாததோண்டைமான்:—விசயரகுநாததொண்டைமான் மூன்றும் மனைவியாகிய இரங்கம்மாள் ஆய் திருவயிற்றிற் பிறந்தவர்; கலி நாலாயிரத்து எண்ணூற்று எழுபத்திரண்டில் (தமது முப்பத்தோராவது ஆண்டில்) அரியாசனமேறினவர்; ஆங்கிலேயர்க்கு நண்பர்; "ஐதரலி"யுடைய படைகளைப் புறங்கண்டவர்; சிறந்த வீரமுங் கொடையுமுடையவர்; ஒன்பது மனைவியர்களையுடையவர்; ஒருமகட்பெற்றவர்; இருபதாண்டு அரசாண்டவர்.

(ச) இராசவிசயரகுநாத தோண்டைமான் ராசா பகதூர் :— இராசரகுநாததொண்டைமானின் சிறியதந்தையாகிய திருமலைத்தொண்டைமானுடைய மூத்த குமாரர்; கலி நாலாயிரத்து எண்ணூற்றுத் தொண்ணூற்றிரண்டில் (தமது முப்பதாவது ஆண்டில்) சிங்காசன மேறினவர்; கொடையிலும் வீரத்திலும் சிறந்தவர்; ஆங்கிலேயருக்குதவியாக "திப்புசுல்த்தானை" எதிர்த்துப் புறங்கண்டவர்; ஆற்காட்டு நவாப்பாகிய "மகமதலி" என்னும் அரசனால் "ராசாபகதூர்" பட்டம் பெற்றவர்; மூன்று மனைவியர்களை யுடையவர்; பதினாறாண்டு அரசாண்டவர்; இவரோடு இவர் மனைவியராகிய "ஆய்யம்மாள்ஆய்" உடன்கட்டையேறினார்.

(ரு) விசயரகுநாதராச தோண்டைமான் ராசாபகதூர் :— இராசவிசயரகுநாததொண்டைமானின் மூத்த குமாரர்; இராசரகுநாததொண்டைமான் சகோதரர்; "தமிழ் ஆரியம், மகராட்டிரம், ஆங்கிலம்" என்பவற்றில் தேர்ச்சிபெற்றவர்; கலி நாலாயிரத்துத் தொளாயிரத்து எட்டில் (தமது பத்தாவது ஆண்டில்) பட்டத்துக்கு வந்தவர்; (தமது இருபதாவது ஆண்டில்) பங்காளியாகிய விசயரகுநாத தொண்டைமானிடமிருந்த அரசுரிமையை ஒப்புக்கொண்டு முடிசூட்டிக்கொண்டவர்; தமது இராச்சியத்தை ஐந்து தாலூக்காக்களாகப் பிரித்தவர்; பல நீதிமன்றங்கள் அமைத்தவர்; இரண்டு மணஞ்செய்துகொண்டவர்; பதினெட்டு ஆண்டு ஆண்டவர்.

(சா) இராசரகுநாத தோண்டைமான் ராசாபகதூர் (His Excellency):—இராசவிசயரகுநாத தொண்டைமானின் இளைய குமாரர்; விசயரகுநாதராச தொண்டைமான் தம்பி; "தமிழ், ஆரியம், மகராட்டிரம், ஆங்கிலம்" என்னும் மொழிகளில் மிக்க தேர்ச்சிபெற்றவர்; கலி நாலாயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்தாறில் அரியாசனம் ஏறினவர்; வீரத்திலும், கொடையிலும், நீதியிலும், அறத்திலும் சிறந்தவர்; பதினான்காண்டு அரசாண்டவர்; இவர்பெயர் "இராசதொண்டைமான்" எனவும் வழங்கும்.

(எ) ஸ்ரீ பிரகதம்பா தாச இராசா ராமச்சந்திர தொண்டைமான் ராசாபகதூர் (His Highness):–இராச ரகுநாத தொண்டைமான் குமாரர்; கலி நாலாயிரத்துத் தொளாயிரத்து நாற்பதில் (தமது ஒன்பதாவது ஆண்டில்) முடிசூட்டப்பெற்றவர்; தமது பதினைந் தாவது ஆண்டில் அரசுரிமையை வகித்துத் தம்முடைய இராச்சியத்தில் அளவில்லாத சீர்திருத்தங்கள் செய்தவர்; சிறந்த பராக்கிரமமுடையவர்; நிறைந்த புகழ்பெற்றவர்; திருக்கோகரணத்தில் திருக்கோயில்கொண்டு விளங்கும் ஸ்ரீ பிரகதம்பாளிடத்தில்மிக்கபத்தியுடையவர்; இந்தியசக்கரவர்த்தினியாராகிய விக்டோரியா மகாராணியார் அவர்களிடத்தில் பேரன்புடையவர்; இரண்டு திருமணஞ்செய்துகொண்டவர்; மூன்று பெண்மணிகளைப் பெற்றவர்; மூத்தபெண்மணியாரின் மூன்றாவது குமாரரை குமாரராகக்கொண்டவர்; நாற்பத்தேழாண்டு அரசாண்டவர்.

(அ) ஸ்ரீ பிரகதம்பா தாச இராசமார்த்தாண்ட காலபைரவ தொண்டைமான் ராசாபகதூர் (His Highness, G. C. I. E.):– ஸ்ரீபிரகதம்பா தாச இராசா ராமச்சந்திர தொண்டைமான் மூத்த குமாரத்தியாரின் மூன்றாவது குமாரர்; "தமிழ், ஆங்கிலம்" என்னும் மொழிகளில் மிக்கத் தேர்ச்சிபெற்றவர்; "குதிரையேற்றம்" முதலியவற்றில் அளவுகடந்த ஆற்றலுடையவர்; கலி நாலாயிரத்துத்தொளாயிரத்து எண்பத்தேழில் (தமது பதினோராவது ஆண்டில்) "திருக்கோகரணம்" என்னும் சிவதலத்தில் பெரியநாயகி சந்நிதியில் முடிசூட்டப்பெற்றவர்; மிகச்சிறந்த பராக்கிரமுங் கொடையுமுடையவர்; "சிங்கம், புலி, யானை, சரபம், சார்த்தூலம், அண்டரண்டபட்சி" முதலியவற்றைச் சுட்டுக்கொல்வதில் அடங்காவீரமும் தீரமும் பிரியமுமுடையவர்; கொச்சி தேயத்தில் மதங்கொண்டு அதஞ்செய்த யானையைச்சுட்டும் வெட்டியும் கொன்றவர்; ஐரோப்பாவுக்குச்சென்று, ஆங்கில இளவரசராயிருந்த ஏழாவது எட்வர்ட் மன்னர் பெருமானாராலும், இந்திய சக்கரவர்த்தினியாராகிய விக்டோரியா மகாராணியாராலும் வரவேற்கப்பெற்றவர்; டில்லிமாநகரில் நடந்த ஐந்தாவது சார்ச் மன்னர்பெருமானார் முடிசூட்டுத்திருவிழாவுக்குச்சென்று வர

வேற்கப்பெற்றவர் ; ஐந்தாவது சார்ச் சக்கரவர்த்திப் பெருமானுரால் G. C. I. E. என்னும் பட்டம் அளிக்கப்பெற்றவர் ; புன்னைத் தூர் "நாராயணசாமி ஐயர்" என்னும் புலவர் பெருமானுல் "இயன்மொழி வாழ்த்து" என்னும் பிரபந்தம் பெற்றவர் ; தமது இராச்சியத்தில் அளவுகடந்த சீர்திருத்தங்கள் செய்வித்தவர்; தமது முதல் தமையனுராகிய விசயரகுநாத துரைராசா அவர் களைக்கொண்டு இராச்சிய நிர்வாகத்தை நடத்துவிப்பவர் ; இம் மன்னர்பெருமான் நீடூழிகாலம் வாழ்வாராக !

விசயரகுநாத துரை ராசா :—ஸ்ரீ பிரகதம்பா தாச இராசா ராமச்சந்திர தொண்டைமான் மூத்த குமாரத்தியாரின் முதற் குமாரர் ; ஸ்ரீ பிரகதம்பா தாச இராசமார்த்தாண்ட காலைபரவ தொண்டைமான் முதற் சகோதரர் ; தமது சகோதரரின் இராச் சியத்திற்கு "திவான்" பதவியை ஏற்றுக்கொண்டு இராச்சிய நிர்வாகத்தை நடத்துகின்றவர் ; வீரத்திலும், கொடையிலும் சிறந்தவர் ; நீதியிலும், அறத்திலும் உயர்ந்தவர் ; இம்மன்னர் பெருந்தகை என்றும் வாழ்வாராக !

---

வாழி.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல்லா மானுமமே
சூழ்க வையகமுந் துயர் தீர்கவே.




PRINTED AT THE "EDWARD PRESS," TIRUVALUR.